# காப்பியங்களில் கருவிகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**பா.திருக்குமரன்**

(பதிவு எண் : 1230)

நெறியாளர்

**பேரா.மு.பாண்டி**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவில் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 3.64 தரப்புள்ளிகளுடன் A+ தகுதி மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தர பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு - இந்தியா


**செப்டம்பர் - 2018**

**முனைவர் மு.பாண்டி,**
பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

**நாள்:**

## நெறியாளர் சான்றிதழ்

**"காப்பியங்களில் கருவிகள்"** என்னும் தலைப்பில் செல்வன் பா.திருக்குமரன் செய்துள்ள இவ்வாய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் முனைவர்பட்டம் (தமிழ்) பயின்ற காலத்தில், ஆய்வேடாகப் பணிக்கப்பெற்றது. இவ்வாய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை என்று சான்று அளிக்கிறேன்.

**நெறியாளர்**
**(மு.பாண்டி)**

**பா.திருக்குமரன்,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

**நாள்:**

## ஆய்வாளர் உறுதிமொழி

**“காப்பியங்களில் கருவிகள்”** என்னும் தலைப்பில் அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் முனைவர்பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**ஆய்வாளர்**
**(பா.திருக்குமரன்)**

உறுதிக்கையொப்பம்

**பேரா. மு.பாண்டி**
பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003.

## நன்றியுரை

காப்பியங்களில் கருவிகள் என்னும் தலைப்பில் முனைவர்பட்டத்திற்கு ஆய்வு செய்ய அனுமதி அளித்த ஆய்விற்கு ஊக்கத்தொகை (AURF) நல்கிய அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வு குறித்து அணுகிய போதெல்லாம் அறிவுரை வழங்கி நெறிப்படுத்திய எனது நெறியாளர் பேரா.மு.பாண்டி பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர் அவர்களுக்கு என் பணிவான நன்றியினைச் சமர்ப்பிக்கிறேன்.

ஆய்வுத் தொடர்பான பல்வேறு அறிவுரைகளைக் கூறிய தமிழ்த்துறைப் பேராசிரியப் பெருமக்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு காலத்தில் பேருதவிகள் செய்து, ஆய்வுக்கு வழிப்படுத்திய திருமதி.பா.பிருந்தாரமணி (தலைமை ஆசிரியர் தஞ்சாவூர் அருணாச்சலம் செட்டியர் அரசு மேல்நிலைப்பள்ளி, கோட்டையூர்) அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

ஆய்வு மேற்கொண்ட காலத்தில் ஆக்கமும், ஊக்கமும் தந்து உற்சாகப்படுத்திய பேராசிரியர் முனைவர் சு.இராஜ்மோகன் (மேலாண்மைத் துறைத்தலைவர், அழகப்பா பல்கலைக்கழகம்) அவர்களுக்கு என் இதயப்பூர்வமான நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

முனைவர்பட்டம் வரை என்னைப் படிக்க வைத்த என் பெற்றோருக்கும், என் குடும்பத்தாருக்கும் என் நன்றி உரியது.

ஆய்விற்கு உதவி செய்த உதவிப் பயிற்றுநர் சகோதரி தன்மானம் அவர்களுக்கும், சகோதரி ஜெயசித்ரா நூலக உதவியாளர் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முதுமுனைவர்பட்ட ஆய்வாளர்கள், முனைவர்பட்ட ஆய்வாளர்கள், ஆய்வியல் நிறைஞர், முதுகலை இரண்டாமாண்டு, முதலாமாண்டு மாணவர்கள் ஆகிய அனைவருக்கும் என் நன்றியை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டினை செம்மையுற கணினி தட்டச்சு செய்து தந்த செல்வி பழ.மல்லிகா அவர்களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

1. உ.ஆ - உரை ஆசிரியர்
2. கம்ப - கம்பராமாயணம்
3. சிலம்பு - சிலப்பதிகாரம்
4. தொல் - தொல்காப்பியம்
5. நூ - நூற்பா
6. ப - பக்கம்
7. பக் - பக்கங்கள்
8. பா - பாடல்
9. பெரியபு - பெரியபுராணம்
10. மணி - மணிமேகலை
11. மேலது - மேலே குறிப்பிட்டது.

# பொருளடக்கம்

தமிழிலுள்ள காப்பியங்கள் ஒவ்வொன்றும் தமது சமயத்தையும், சமயக் கருத்துக்களையும் பரப்புவதற்காகவே இயற்றப்பட்டுள்ளன. என்றாலும், பெரும்பாலும் அவை அவ்வவ்கால மக்களின் வாழ்வியலுடன் பின்னிப்பிணைந்து அவர்களின் வாழ்வியலைப் பல நிலைகளில் விரிவாக விளக்குகின்றன. மக்களின் வாழ்க்கை முறை, பண்பாடு, பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், வழிபாடுகள் போன்றவற்றுடன் கருவிகள் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. இக்கருவிகளின் இன்றியமையாமையைத் தமிழ் இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. இவ்விலக்கியங்களுள் காப்பியங்களில் காணப்படுகின்ற கடவுள், முனிவர், அரசர், அந்தணர், அமைச்சர், வணிகர், வேளாளர், குடிமக்கள் போன்றோர் தங்கள் தொழில்கள் தேவைகள், மற்றும் சூழ்நிலைகளுக்குத் தக்கவாறு பல கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். இக்கருவிகள் காப்பிய மாந்தர்களின் வாழ்க்கைக்கும் மக்களுக்கும் எவ்வகையில் துணைபுரிந்துள்ளன என்பதையும், அக்கால கருவிகள் சில தற்கால மக்களிடையே வழக்கிலிருப்பதையும், அவற்றுள் ஏற்பட்டுள்ள மாற்றங்களையும் முற்கால, இடைக்கால காப்பியங்களின் வாயிலாகக் கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வுத் தலைப்பு**

**"காப்பியங்களில் கருவிகள்"** என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

**ஆய்வு முன்னோடிகள்**

இவ்வாய்வேட்டின் முன்னோடிகளாக மு.பஞ்சவர்ணத்தின் **'பண்டைத் தமிழரின் புழங்கு பொருட்கள்'**, அ.சேவுகனின் **'எட்டுத்தொகைப் புறப்பாடல்களில் போர்க் கருவிகள்'**, ப.மெய்யப்பனின் **'பண்டைத் தமிழர்களின் போர் நெறிகள்'**, இ.ஆக்னஸ்மேரியின் **'பரிணாமவியல் நோக்கில் சங்க இலக்கியப் போரியல்'**, பா.திருக்குமரனின் **'சீவகசிந்தாமணியில் பயன்பாட்டுக் கருவிகள்'** போன்றவை எடுத்துக்கொள்ளப்பெறும்.

**ஆய்வு நோக்கம்**

காப்பியங்கள் அவை படைக்கப்பட்ட காலத்து மன்னர்களின், மக்களின் இயங்குநிலைகளைத் தெளிவுபடுத்துகின்றன. அவர்களின் தொழில்கள், பயணங்கள், புலம்பெயர்வு, பாதுகாவல், உணவு, உடை போன்றவற்றுடன் பல்வேறு கருவிகள், அவற்றின் வடிவம், நோக்கம், பயன்கள், அவை முற்கால, இடைக்கால காப்பியங்களில் பதிவாகியிருப்பதையும் ஆராய்ந்து அதன் வழியாக மக்களின் தேவைகள் பூர்த்தி செய்யப்பட்டுள்ளனவா என்பதைக் கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**கருதுகோள்**

காப்பியங்களில் இடம் பெறுகின்ற கருவிகள் கடவுளர், மக்கள், நிலம், தொழில்கள், சூழ்நிலைகளுக்கு ஏற்பவும், அதன் பயன், அதனைப் பயன்படுத்தும் இடம், நேரம் இவற்றைப் பொருத்தும் அமையும் என்பதும், அக்கால பயன்பாட்டுக் கருவிகளில் பல, சில மாற்றங்களுடன் இன்றும் பயன்பாட்டில் இருக்கக்கூடும் என்பதும், மன்னர்கள், சிற்றரசர்களின் மண்ணாசை, பெண்ணாசை, பொருளாசை கூடக்கூட போர்களுக்கான நோக்கங்கள், படைகள் விரிவடைய விரிவடைய கருவிகளின் கண்டுபிடிப்புகளும் அதிகரித்திருக்க வேண்டும் என்பதும் இவ்வாய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வு எல்லை**

காப்பியங்களில் கருவிகள் என்னும் இவ்வாய்விற்குச் சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம், பெரியபுராணம் ஆகிய நான்கு பெருங்காப்பியங்கள் ஆய்வு எல்லையாக அமைகின்றன.

**ஆய்வுத் தரவுகள்**

**“காப்பியங்களில் கருவிகள்”** என்னும் இவ்வாய்வுக்குச் சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம், பெரியபுராணம் ஆகியவற்றில் கருவிகள் பற்றியப் பதிவுகள் முதன்மைச் சான்றாதாரங்களாகும். இந்நூல்கள்

தொடர்பாக வெளிவந்த திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், இதழ்கள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாகும்.

**ஆய்வு அணுகுமுறை**

காப்பியங்களில் இடம்பெறும் கருவிகளை விளக்குமிடத்து விளக்கவியல் அணுகுமுறையும் (Descriptive approach), கருவிகளின் வகைகள் பெருகி வளர்ந்த சூழல்களைக் காணும் நிலையில் வரலாற்றியல் அணுகுமுறையும் (Historical approach), கருவிப் பண்பாடு என்னும் தளத்தில், அவை சமூகப் பயன்பாட்டிற்கு உதவியதைக் காண சமூகவியல் (Sociological approach) அணுகுமுறையும் இவ்வாய்விற்குரிய அணுகுமுறைகளாக இடம்பெறும்.

**ஆய்வு பகுப்பு**

**"காப்பியங்களில் கருவிகள்"** என்னும் இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப் பெற்றுள்ளது.

1. தமிழர் வாழ்வில் கருவிகள்,
2. காப்பியங்களில் இசைக் கருவிகள்,
3. காப்பியங்களில் போர்க் கருவிகள்,
4. காப்பியங்களில் தொழில் கருவிகள்,
5. காப்பியங்களில் இல்லக் கருவிகள்.

**இயல் விளக்கம்**

**"தமிழர் வாழ்வில் கருவிகள்"** என்னும் முதலாமியலில் தமிழர்கள் வாழ்வில் பயன்படுத்திய கருவிகள், ஆதிச்சநல்லூர் ஆய்வில் கிடைத்துள்ள பொருள்கள் ஆகியன பற்றி கூறப்பட்டள்ளன. பண்டைய காலத் தமிழர்கள் இரும்பின் பயனை அறிந்து, அதனைப் பயன்படுத்தி உருவாக்கப்பட்ட வில், அம்பு, வாள், ஈட்டி போன்றவற்றின் பயன்களும் உரைக்கப்பட்டுள்ளன. காப்பியத்திற்கான விளக்கம், அதற்குத் தொல்காப்பியம், தண்டியலங்காரம் ஆகிய இலக்கண நூல்கள் கூறும் வரையறைகள் பற்றியும்

ஆராயப்பட்டுள்ளன. காப்பியங்கள் ஆய்வுப் பொருளாகையால் அவை பற்றிய விளக்கம் இவ்வியலின் இறுதியில் இடம்பெற்றுள்ளது.

**“காப்பியங்களில் இசைக் கருவிகள்”** என்னும் இரண்டாமியலில் இசை பற்றியும், இசைக் கருவிகளின் வகைகள் பற்றியும், கருவிகள் இசைக்கப்பட வேண்டிய முறைகளும் கூறப்பட்டுள்ளன. காப்பியங்களில் இடம்பெற்றுள்ள பறை, முரசு, முழவு, துடி, தண்ணும்மை, பேரிகை, ஆமந்திரிகை, குறடு, முருடு, பம்பை, டமருகம், தக்கை, ஊமை வாத்தியம், செண்டை, குடமுழா, துந்துபி, மத்தளம், குழல், சங்கு, தாரை, சின்னம், கொம்பு, எக்காளம், யாழ், வீணை, கின்னரம், பாண்டில் போன்ற பல்வேறு இசைக் கருவிகளின் பெயர் காரணம், தோற்றம், வளர்ச்சி குறித்தும், அவற்றின் வகைகள் மற்றும் உறுப்புகள் குறித்தும், இசைக்கும் கால நேரம், இசைக்கப்பட வேண்டிய இடங்கள் குறித்தும், இசைக்கும் வள்ளுனர் குறித்தும், இசைக்கும் காரணங்கள் குறித்தும், தேவை மற்றும் சிறப்புகள் குறித்தும் விளக்கப்பெற்றுள்ளன.

மூன்றாவது இயல் **“காப்பியங்களில் போர்க் கருவிகள்”** என்பதாகும். இதில் போர் விளக்கம், போருக்கான காரணங்கள், தனிநபர் போர், படைகளுக்கிடையேயான போர், போர்க்களத்தில் ஒற்றர்களின் செயல்கள், போர் அறம் போன்ற போரியல் நிகழ்வுகள் கூறப்பட்டுள்ளன. காப்பிய காலங்களில் தெய்வங்கள், போர் வீரர்கள் பயன்படுத்திய வில், அம்பு, அம்பறாத்தூணி, வேல், ஈட்டி, பிண்டிபாலம், சூலம், தோமரம், வாள், உடைவாள், கேடகம், தண்டாயுதம், கவண் உமிழ் கல், பாசம், கப்பணம், பரசு, சம்மட்டி, வச்சிராயுதம், ஆழி, முசலம், நாஞ்சில், முசுண்டி, போன்ற பல்வேறு போர்க் கருவிகளின் வடிவம், தன்மை, அமைப்பு, அவற்றைப் பயன்படுத்தும் விதம் ஆகியனக் குறித்து ஆராயப்பட்டுள்ளது.

நான்காம் இயலான **“காப்பியங்களில் தொழில் கருவிகள்”** என்பதில் காப்பியங்களில் தமிழர்களின் தொழில்கள் பற்றியும், தொழில்களில் கருவிகளின் இன்றியமையாமை குறித்தும் கூறப்பட்டுள்ளது. தொழில்களில் இடம்பெற்றுள்ள ஏர், தார்க்கோல், அரிவாள், மண்வெட்டி, உழவாரம், முறம்,

ஆம்பி, கிழார், ஏற்றம், பிழா, கறும்புச் சாறு பிழியும் இயந்திரம், உளி, ஈர்வாள், சக்கரம், வாளரம், சம்மட்டி, அரம், துருத்தி, உரைகல், வலை, சுருக்குவலை, வில், அம்பு, உடைவாள், தூண்டில், கோடரி, துலாக்கோல், கோணம், தோட்டி, கவைமுட்கருவி, குவிமுட்கருவி, அங்குசம், விளக்கு, கன்னக்கோல், கத்தரிக்கோல், பறை, அம்பணம், துடுப்பு, செக்கு போன்ற பல்வேறு தொழிற் கருவிகள் குறித்தும் அவற்றின் அமைப்பு, பயன்பாடுகள் குறித்தும் எடுத்துரைக்கப்பெற்றுள்ளது.

ஐந்தாம் இயல் **"காப்பியங்களில் இல்லக் கருவிகள்"** என்பதாகும். இதில் இல்லம் பற்றியும், இல்லத்தில் நடைபெறக்கூடிய, விழாக்கள், வழிபாடுகள், சடங்குகள், சமையல் போன்ற நிகழ்வுகளில் இடம்பெற்ற அம்மி, மத்து, உலக்கை, உரல், ஏணி, விளக்கு, அரிவாள், நாழி, குடை, விசிறி, துருத்தி போன்ற பல்வேறு இல்லக்கருவிகள் குறித்தும் அவற்றின் பயன்பாடுகள் குறித்தும் சுட்டப்பட்டுள்ளது. தமிழர்களின் வாழ்வியலில் இக்கருவிகள் அன்றிலிருந்து இன்று வரை பயன்படுத்தப்படுவதும் உரைக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு இயலின் முடிவிலும் இயலின் முடிவுகள் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன. ஆய்வின் வழி கண்டறியப்பட்ட முடிவுகள் ஆய்வு முடிவுரை என்னும் பகுதியில் தரப்பட்டுள்ளன. இதனையடுத்து ஆய்விற்குப் பயன்பட்ட நூல்களின் பட்டியல் இடம்பெறுகிறது. பின்னிணைப்பில் காப்பியங்களில் இடம்பெற்றுள்ள கருவிகள் குறித்தப் படங்கள் இணைக்கப்பட்டுள்ளன.

நாடோடிகளாக வாழ்ந்த பழங்கற்கால மனிதர்கள் கருவிகளின் தேவையை உணர்ந்து இயற்கையில் கிடைக்கும் கல், மரம் போன்றவற்றை மூலங்களாகக் கொண்டு கருவிகளை வடிவமைத்துள்ளனர். தென் தமிழகத்தின் கற்காலத்தைப் பழைய கற்காலம், இடைக்கற்காலம், புதிய கற்காலம் என மூன்றாக வரலாற்று அறிஞர்கள் பகுத்துள்ளனர். பழைய கற்கால நிகழ்வுகளை விளக்குவதற்குத் தொடக்கக் காலப் பழங்கற்காலம், இடைக்காலப் பழங்கற்காலம், கடைக்காலப் பழங் கற்காலம் என மேலும் மூவகையாகப் பிரிக்கப்படுகிறது. பழங்கற்கால மனிதன் கருவிகள் செய்ய கற்களைப் பயன்படுத்தியுள்ளான். நீரினைச் சேகரித்து வைக்க எந்த ஒரு கலனும் இல்லாமல் வாழ்ந்தவர்கள் பழங்கற்கால மனிதர்கள். எனவேதான் அவர்கள் ஆற்றங்கரை ஓரங்களில் வாழ்ந்துள்ளனர்.

இந்தியாவில் முதன் முதலில் பல்லாவரத்தில் பழங்கற்காலக் கருவிகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. “1863-இல் இராபர்ட் புரூஸ் புட் என்பார் சென்னைக்கு அருகிலுள்ள பல்லாவரத்தில் கைக்கோடாரியைக் கண்டுபிடித்தார்.”[1] காஞ்சிபுரம், செங்கற்பட்டு, வடஆற்காடு, மதுரை மாவட்டம், தஞ்சாவூர் மாவட்டம் ஆகிய இடங்களில் கிடைத்துள்ள பழங்கற்கால கைக்கோடரியும், பல்லாவரத்தில் கிடைத்துள்ள கைக்கோடாரியும் ஒன்று போல உள்ளன. கற்கருவிகளை மூன்று விதமாகச் செய்துள்ளனர். மூலக்கற்களைக் கருவியாகச் செய்தல், சில்லாகச் சிதறும் கற்களைக் கருவியாகச் செய்தல், கற்களைப் பட்டை தீட்டுதல் என கற்கருவிகளை உருவாக்கியுள்ளனர்.

இடைப் பழங்கற்காலத்தில், சிதறிய கற்களைக் கொண்டு செய்யும் சில்லுக்கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இக்கருவிகள் வெட்டுவதற்குப் பயன்படுத்தப்பட்டமையால் வெட்டுக் கருவிகள் அல்லது வெட்டிகள் என்றும் அழைக்கப்பட்டன. “முனைகள், சுரண்டிகள், பட்டைக் கத்திகள் ஆகிய கருவிகளும் இங்கே பயன்படுத்தப்பட்டன. இடைப்பழங்கற்காலத்தின் கருவிகளில் சுரண்டிகள் அதிகம் கிடைத்துள்ளன.”[2] என்கிறார்

அ.ஹ.முகைதீன் பாதுஷா. தமிழ்நாட்டில் வடமதுரை, அத்திரம்பாக்கம், வதியூர், பரந்தூர், கிருஷ்ணாபுரம், ஆரம்பாக்கம், ரங்கபுரம், தெ.புதுப்பட்டி, சிவரக்கோட்டை, மெஞ்ஞானபுரம் ஆகிய ஊர்களில் இடைப்பழங்கற்கால கருவிகள் கிடைத்துள்ளன.

கடைப் பழங்கற்காலத்தில் சிறிய கற்களைக் கொண்டு கருவிகளைச் செய்துள்ளனர். இயற்கையிலேயே பளபளப்பான விலை மதிப்பு மிக்க கற்களைக் கொண்டு ஓர் அங்குலம் அல்லது அதற்கும் குறைவான அளவுள்ள கருவிகளைச் செய்துள்ளார்கள். எனவே இக்காலம் சிறுகற் காலம் என்றும் நுண்கருவிக்காலம் என்றும் அழைக்கப்பட்டது. இக்காலத்தில் எலும்பு அல்லது கொம்பின் நுனியில் இறுக்கிக் கட்டிய கூர்மையான சிறுகல் கருவிகளும், சிறிய கல்லுளியும் கிடைத்துள்ளன. தமிழகத்தில் திருநெல்வேலி, தூத்துக்குடி ஆகிய இரு மாவட்டங்களிலுள்ள பல்வேறு ஊர்களிலும் கடைப் பழங்கற்காலக் கருவிகள் கிடைத்துள்ளன.

இடைக்கற்காலம் நுண்கற்காலம் என்றும் நுண்கருவிகள் காலம் என்றும் சிறுகல் ஆயுதகாலம் என்றும் அழைக்கப்படுகிறது. இதற்குக் காரணம் மிகச் சிறிய கற்கருவிகள் அக்காலத்தில் புழக்கத்தில் இருந்தமையே ஆகும்.

**தமிழர் நாகரிகம்**

பழங்கால நாகரிகங்களில் 'தமிழர் நாகரிகம்' மிக முக்கியமானதாகும். மனித வரலாறு தொடங்கியதாகக் கூறப்படும் லெமுரியாவில் தோன்றியவர்கள் தமிழர்கள். ஆதிச்சநல்லூர், கீழடி போன்ற அகழ்வாய்வுகள் தமிழரின் நாகரிக வரலாற்றைச் சான்றுகளுடன் நமக்குப் பறைசாற்றுகின்றன. கி.மு.700 முதல் கி.பி.300 வரையுள்ள சங்க இலக்கியங்களில் தமிழரின் நிலப்பகுப்பு முறை, பொருள்வையிற் பிரிவு, பண்டமாற்று வணிக முறை, திருமணம் போன்ற சமுதாய முறைகளால் தமிழரின் நாகரிகத்தை அறியமுடிகின்றது.

இலக்கியங்களின் தொடக்கக் காலத்தில் நாகரிகம் என்னும் சொல்லும் பண்பாடு என்னும் சொல்லும் ஒரு பொருள் குறித்ததாகவே கருதப்படுகிறது.

> **"முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்,**
>
> **நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்,"**[3]

"'பண்பு' எனப் படுவது பாடறிந்து ஒழுகுதல்"[4]

என்ற பாடலடிகளில் நாகரிகம், பண்பாடு என்ற இரு சொற்களும் ஒரே பொருண்மையில் கையாளப்பட்டுள்ளது. இங்கு நாகரிகம் எனும் சொல் பண்பாடு என்ற பொருண்மையில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

தேவநேயப் பாவாணர் நகர அமைப்பிலிருந்தே நாகரிக நிலை தோன்றியது என்கிறார். "நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை"[5] என்றும், "பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம்"[6] என்றும் பாவாணர் சிறப்பானதொரு விளக்கம் தந்துள்ளார். நாகரிகம் என்பது வாழ்க்கையில் ஏற்படும் புதுமை, எளிமை, திருந்திய வாழ்க்கை முறைகளாகும். பண்பாடு என்பது நாகரிகத்தினும் உயர்ந்தது. புதியவர்களுக்கும் தக்க சூழ்நிலையில் எதையும் எதிர்பாராமல் வேண்டுவன செய்வது. மனிதனுடைய வளர்ச்சி அகவளர்ச்சி, புறவளர்ச்சி என இருவகையாகப் பிரிக்கப்படுகிறது. அகவளர்ச்சி பண்பாடாகவும், புறவளர்ச்சி நாகரிகமாகவும் உருவாகுகிறது.

உழவுத் தொழில் செய்யும் மருத நிலத்தில் நாகரிகமும், நகர அமைப்பும் தோன்றியுள்ளன. உழவுத் தொழிலால் நிலையான குடியிருப்பு, ஊர்த்தோற்றம், செல்வ வளம் ஆகியவற்றால் நாகரிகமும் தோன்றியுள்ளது. "எல்லா நாட்டிலும் மாந்தர் முதன்முதல் நகர நிலையிலேயே நாகரிகமடைந்துள்ளனர். அதனால் நகரப் பெயரினின்று நாகரிக பெயர் தோன்றியுள்ளது."[7] தமிழிலக்கணம் கூறும் இடுகுறி, மரூஉ, மங்கலச்சொல், குழூஉக்குறி போன்ற வழக்குகளும், இலக்கியத்திலும், வாழ்வியலிலும் அதன் பயன்பாடும் தமிழரின் உயர்ந்த நாகரிகத்தை வெளிப்படுத்துகின்றன. இத்தகைய நாகரிகமான வாழ்க்கை முறை கருவிகள் தோன்ற காரணமாய் இருந்துள்ளது.

**கருவிகளின் தோற்றம்**

பழங்காலத்தில் ஒரு செயலைச் செய்வதற்குப் பயன்படும் ஒவ்வொரு பொருளும் கருவியாகப் பார்க்கப்பட்டுள்ளது. வாழ்வின் இன்றியமையாத தேவைகளுள் ஒன்று உணவு. இவ் உணவிற்காகப் போராடும் மனிதனிடமிருந்துதான் முதல் கருவி தோன்றியிருக்கும் என்பதில் ஐயமில்லை.

வில், வாள், அம்பு, ஈட்டி போன்ற கருவிகள் நாடோடி மக்களின் அன்றாட வாழ்விற்குப் பயன்பட்ட இன்றியமையாத பொருள்களாகும். இவை தவிர சக்கரம், கலப்பை, குதிரை வண்டி, பரிசல், நெசவுக் கருவி போன்றவையும், இல்லப் பொருள்களான தட்டு, பானை, அடுப்பு, தாழி, தானியம் சேமிக்கும் கலன்கள் போன்றவையும், செய்தியை அறிவிக்கும் கருவிகளான பறை, சங்கு, கொம்பு போன்ற கருவிகளும் மக்களின் நாகரிக வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாக இருந்துள்ளன.

இவற்றை முதலில் மண்ணாலும், கல்லாலும், மரத்தாலும் செய்து பயன்படுத்தியுள்ளனர். "இயற்கையோடு வாழ்ந்த ஆதிகால மனிதன் எலும்புகளையும், கற்களையும் கருவியாகப் பயன்படுத்தி வந்தான். அவை சில முழுமையான வடிவம் இல்லாததாகவும் கரடுமுரடானதாகவும் இருந்தன."[8] இவை காலத்திற்கும் இதன் பயன்பாட்டைத் தருவனவாக இல்லை. எனவே இதற்கு மாற்றாக இரும்பைக் கண்டுபிடித்தனர். இது மிகவும் பயனுடையதாக இருந்துள்ளது. இதன் காரணமாக இரும்பைப் 'பொன்' என்று சுட்டியுள்ளனர். இப் பொன்னைக் கரும்பொன் என்றும் இரும்பொன் என்றும் அழைத்துள்ளனர்.

**இரும்புக் கருவிகள்**

மக்களின் வாழ்க்கையில் நாகரிக மாற்றம் ஏற்படுவதற்கு இரும்பிற்கும் பெரும் பங்குண்டு. தனிமனித வாழ்விற்கும். குழுக்களாகச் செய்யும் தொழிலுக்கும் இரும்பின் பயன் அளப்பறியதாக இருந்துள்ளது.

அன்றைய மக்கள் கண்ட உலோகங்கள் அனைத்திலும் மிகவும் உறுதியானதும் அதிக பயன்பாடுள்ளதுமான உலோகம் இரும்பு. இது அனைத்துக் கருவிகளிலும் மிகவும் பயனுடையதாகவும், உறுதியானதாகவும் இருந்துள்ளது. இதனால் இரும்பை 'இராஜலோகம்' என்று அழைத்துள்ளனர். தென்னிந்தியர்கள் பழங்காலத்திலே இரும்பைக் கண்டறிந்தது மட்டுமின்றி, அதன் பயனையும் நன்கு அறிந்துள்ளனர். தமிழகத்தில் நிகழ்ந்த அகழ்வாய்வுகள் இதனை மெய்ப்பிக்கின்றன. "திருநெல்வேலி மாவட்டம் ஆதிச்சநல்லூரில் இந்திய அரசு தொல்லியல் துறை அகழாய்வு நடத்திய போது கி.மு.7-8-ஆம் நூற்றாண்டிற்குரிய இரும்புக் கொழு

கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன"[9] என்று கோ.முத்துசாமி கூறுகிறார். ஆராய்ச்சியாளர்களும் அகழ்வாய்வும் மட்டுமின்றி, தமிழிலக்கியங்களும் இதற்குச் சான்று பகர்கின்றன. "கி.மு.மூன்றாம் நூற்றாண்டு முதல் கி.மு.இரண்டாம் நூற்றாண்டு வரையுள்ள காலக் கட்டத்தில் கொடுமணல் என்னும் ஊரில் இரும்பு உருக்கும் தொழில் நடைபெற்றிருப்பதாகவும், அத்தொழிலுக்கு இன்றியமையாத மூலக்கூறுகளான இரும்புத் தாதுக்கள் அங்கே கிடைத்திருக்கின்றன."[10] இச்சான்றுகள் அனைத்தும் தமிழர்கள் இரும்பின் பயனை அறிந்திருந்ததை மெய்ப்பிக்கின்றன.

**ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வும் கருவிகளும்**

தமிழகத்தில் நிகழ்ந்த முதல் அகழ்வாய்வு ஆதிச்சநல்லூர் ஆய்வாகும். இதுவே இந்தியாவின் முதல் அகழ்வாய்வாகும். இந்தியாவில் 1876 இல் தான் தொல்லியல் துறை தோற்றம் பெற்றது. இவ்வாய்விற்காக ஜெர்மனியில் இருந்து வந்த ஜாகர். இந்தியாவிலிருந்து தமிழகத்திலுள்ள ஆதிச்சநல்லூரை அடைய நீண்ட நாள் பயணம் செய்தார். பிறகு அன்றைய திருநெல்வேலி மாவட்ட ஆட்சியர் சூடுவர்டு ஒத்துழைப்புடன் அகழ்வாய்வைத் தொடங்கினார். இவ்வாய்வில் அவர் கண்ட பொருட்கள் ஜெர்மன் பொருட்காட்சியகத்தில் உள்ளன.

'உலக நாகரிகத்தின் தொட்டில் தமிழகம்' என்பதை வெளியுலகிற்குக் கூறியவர் ஜாகர். இதனைத் தொடர்ந்து கிழக்கிந்திய கம்பெனியால் பிரெஞ்சைச் சேர்ந்த எம்.உலூயிசு இலாம்பியூ 1903 இல் ஆய்வு செய்தார். இவர்களின் ஆய்வுகளில் கிடைத்தப் பொருள்களை ஆய்வு செய்த அறிஞர்கள் பல்வேறு காலங்களை நிர்ணயிக்கின்றனர். "இந்திய வரலாறு கி.மு.8000 ம் ஆண்டிற்கு முன் ஆதிச்சநல்லூரில் இரும்புப் பண்பாடு தோன்றி உள்ளது எனக் கூறலாம்."[11] என்கிறார் முத்தாலங்குறிச்சி காமராசு.

ஆத்திச்சநல்லூர் அகழ்வாய்வில் மண்ணாலான பானைகள், இரும்பாலான பொருள்கள், கருவிகள், செம்புப் பொருள்கள், வீட்டு உபயோகப் பொருள்கள், வேட்டைக் கருவிகள், சமையல் பானைகள், சேமிப்புக் கலன்கள் என பல்வேறு வகையான பொருள்கள்

கண்டெடுக்கப்பட்டுள்ளன. “சமையலுக்குப் பயன்படுத்திய 50 வகைக்கும் மேற்பட்ட மண்பாண்டங்கள், இரும்புப் படைக்கலன்கள், கத்திகள், குட்டையான வாள்கள், கைக்கோடாரிகள், சிறிய அணிகலன்கள் ஆகியவையும் மனித எலும்புகளும் தோண்டி எடுக்கப்பட்டன.”[12] என்று முத்தாலங்குறிச்சி காமராசு ஆதிச்சநல்லூர் ஆய்வுகள் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். இவை தவிர சிறிய குடங்கள், சிறிய குவளைகள், கிண்ணங்கள், பானைகளை வைக்க வளையங்கள், மூடிகள், தீபக் கிண்ணங்கள், ஈட்டி போன்றவையும் கிடைத்துள்ளன. முதுமக்கள் தாழிகளுக்குள் சிறிய வாள்கள், கோடாரிகள், கத்திகள் ஆகியவை கிடைத்துள்ளன. ஆதிச்சநல்லூரில் வாழ்ந்த மக்கள் பொன், செம்பு, ஈயம் ஆகிய உலோகங்களைப் பயன்படுத்தினர். தங்க நெற்றிப்பட்டம், செம்பு, வளையல் ஆகியனவும் கிடைத்துள்ளன. அங்குக் கிடைத்துள்ள பாதாளக் கரண்டி தமிழர்களின் நாகரிகம் பற்றி அறிஞர்களிடையே ஆராய்ச்சியை ஏற்படுத்தும் வகையில் அமைகின்றது.

ஆதிச்சநல்லூரில் கிடைத்துள்ள இரும்பாலான பொருள்களில், “எரிவேல், ஈட்டி, குத்துவாள் அல்லது பட்டாக்கத்தி, அம்பு போன்ற வேல், இருபுறமும் கூர்மையான வாள், மூவிலைவேல் (திரிசூலம்), கூரிய அம்புதலை, கைகோடாரி, வாள், வளைந்த கத்தி, இருவளைவான கொக்கித்தடி, பலி வாள், அம்புதலை, வேலாயுதம், கோடாரி, சூலாயுதம், கேடயம், அரிய ஆயுதம், சிறிய உடைவாள், சிறிய ஈட்டி, செங்கோணவாயுள்ள ஈட்டி, கூம்புவாய் ஈட்டி, கூரிய வாயுள்ள ஈட்டி, ஈட்டிப் பிடியுள்ள குழிவான குழாய், குழிவான விழிம்புள்ள குத்துவாள், அகன்ற வாய்ப் பரசு, நீண்ட வட்டக் குழிவான ஈட்டி, குழிவான இரும்புக் கைப்பிடி ஈட்டி, வளைவுகளுள்ள வாள், சிறிய நுனியுள்ள வாயுடைய ஈட்டி, கத்தி”[13] ஆகியவை உள்ளதாக முத்தாலங்குறிச்சி காமராசு சுட்டுகிறார்.

**பெண்களும் கருவிகளும்**

ஓரிடத்தில் தங்கி வாழத் தொடங்கிய காலத்தில் ஆண்கள் வேட்டைத் தொழிலையும், பெண்கள் மற்றும் குழந்தைகள் குடும்பத்தைப் பேணுதலையும்

மேற்கொண்டனர். இக்காலத்தில் பெண்கள் தங்களின் இருப்பிடத்திற்கு அருகிலுள்ள நிலங்களைக் கிளறி, உண்ணக்கூடிய கனி தரும் விதைகளைப் போட்டு வளர்த்தனர்.

“மனிதன் வேட்டையாடி உணவு தேடிய காலத்தில் ஆண்களே வேட்டைத் தொழில் செய்தனர். அவர்களே சமுதாயத்தில் ஆதிக்கம் வகுத்தனர். அதனால் பெண்கள் குகைகளிலும், குடிசைகளிலும் தங்கினர். அவர்கள் செடி, கொடிகளைக் கண்டனர். அவற்றின் இனப்பெருக்கத்தை அனுபவத்தில் கண்டனர். இயற்கையைப் பின்பற்றி தாங்களும் கொட்டைகளைப் பூமியில் விதைத்தனர். விதைகளை நிலத்தில் ஊன்றினர். கிழங்குகளை நிலத்தை அகழ்ந்து புதைத்து மூடினர். அவை வளர்ச்சியுற்றுப் பலனளித்தன. இவ்வாறு பண்டைப் பயிர்த்தொழில் தோன்றிற்று, பயிர்த் தொழிலிலிருந்து, வேட்டைத் தொழிலிலிருந்து கிடைப்பதை விட அதிகமாக உணவு கிடைத்தது. முதலில் பெண்களே பயிர்த் தொழிலில் ஈடுபட்டனர். அவர்களே பயிர்த்தெரிலை கண்டுபிடித்தனர். பயிர்த்தொழில் செய்ய ஆள்பலம் வேண்டும். அதற்குரிய மக்களை ஈன்றதும், அவர்களுக்குப் பயிர்த் தொழிலைக் கற்றுக் கொடுத்ததும் பெண்களே. ஆண்கள் வேட்டைக்காக நெடுந்தூரம் சுற்றி அலைவார்கள். சில நாட்களுக்கு ஒருமுறையே குடில்களுக்கு திரும்புவார்கள். ஆகவே பயிர்த்தொழிலின் தொடக்க காலத்தில் ஆண்களுக்க அதில் அதிகப் பங்கு இருந்ததில்லை. குடும்ப வளர்ப்பிலும் அதிக பங்கு இருந்ததில்லை. பெண்களே புராதனப் பண்பாட்டை உருவாக்குவதில் முக்கியப் பங்கு பெற்றனர். வேட்டை முக்கியத் தொழிலாக இருந்தது மாறி பயிர்த் தொழில் முக்கியத் தொழிலாயிற்று. பயிர்த் தொழிலில் பங்கு பெற்ற பெண்களும் ஆண்களைவிட உயர்வு பெற்றனர்.”[14] என்கிறார் நா.வானமாமலை.

இதுபோன்ற வேலைகளுக்குப் பயன்படக்கூடிய மண்ணைக் கிளற மண்வெட்டி, நிலத்தைத் தோண்ட கடப்பாறை போன்ற கருவிகள் பெண்களால் உருவாக்கப்பட்டிருக்கிறது. தானியங்களைச் சேமித்து வைக்கக் கலன்களும்,

உணவு தயாரிக்க, சமையல் தொடர்பான பொருள்கள் பெண்களால் உருவாக்கப்பட்டிருக்க வேண்டும்.

ஆற்று ஓரங்களில் தங்கி வாழத் தொடங்கியவர்கள் அங்குக் கிடைக்கும் கோரைப் புல்லைக் கொண்டு பாய் பின்னுதல், கூடை முடைதல் போன்ற பயனுள்ள வேலையிலும் தம்மை ஈடுபடுத்தியுள்ளனர். பிற்காலத்தில் இதனை அழகு செய்யும் பொழுதுபோக்கு வேலையையும் செய்துவந்தனர். பெண்கள் தோற்றுவித்துள்ள கருவிகள் நிலம் மற்றும் நீருடன் தொடர்புடையகாக இருந்துள்ளன.

பெண்கள் உருவாக்கியுள்ள கருவிகள் காலப்போக்கில் அழியும் தன்மையுடையதாக இருந்துள்ளன என்னும் கருத்தை சிலர் முன்வைக்கின்றனர். ஆனால் இக்கருத்து ஏற்புடையதன்று. பெண்கள் உருவாக்கியதாக நம்பப்படும் பாய், கூடை, சேமிப்பு கலன்கள், சமையல் கலன்கள், மண்வெட்டி, கடப்பாரை போன்ற பொருட்கள் தேவையான மாற்றங்களுடன் இன்றும் அதிக பயன்தரும் சிறப்பான கருவிகளாகப் பயன் நல்குகின்றன.

பெண்கள் தோற்றுவித்த வேளாண் தொழில் இன்று உலகிற்கே மிக இன்றியமையாத ஒன்றாக உள்ளது. பெண்களின் வாழ்க்கை நெறிமுறைகள் நாகரிகம் தோன்றுவதற்கு வித்திட்டிருக்கின்றன. ஓரிடத்தில் நிலையாகத் தங்கி வாழ்தல், உணவுகளைச் சேமித்தல், உழவுத் தொழில், வீட்டை அலங்கரித்தல், தன்னை அலங்கரித்தல் என்று பெண்களிடமிருந்து நாகரிகம் துளிர்விட்டுள்ளது.

**ஆண்களும் கருவிகளும்**

ஓரிடத்தில் இல்லாமல் வேட்டையாடுவதற்காக ஓடித் திரிந்த ஆண்கள் பல இடங்களிலும் கிடைக்கும் கூர்மையான, பளபளப்பான கற்களைக் கொண்டு தமது கருவிகளைச் செய்துகொண்டனர். வேட்டை மற்றும் போர்த் தொழிலுக்குத் தேவையான அம்பு, வில், வாள், கத்தி, ஈட்டி போன்ற கருவிகள் ஆண்களால் உருவாக்கப்பட்டுள்ளன. கருவிகள் செய்யும் போது கற்களை உரசி நெருப்பையும் கண்டுபிடித்துள்ளனர். ஆண்கள் உருவாக்கிய

கருவிகள் கடினத்தன்மையுடையதாக இருக்கின்றன. உலோகக் கருவிகளான இரும்பு, செம்பு, பித்தளைக் கருவிகள் ஆண்களுடன் தொடர்புடையதாகவே உள்ளன. “பெண்கள் முற்றிலும் பங்கேற்காத மூன்றாம் வகைத் தொழில்களான தச்சுவேலை, இரும்பு வேலை, சிற்பவேலை, பித்தளைப் பாத்திர வேலை, பொன்வேலை ஆகியவற்றுக்கான மூலப்பொருள்களைப் பண்டைக் காலத்தில் தட்டார்கள் மலைப்படுகைகளில் ஓடும் ஆற்றுப் பரப்பிலிருந்து தங்கத்துகள்களை எடுத்துள்ளனர். அதுபோல மலைப்பகுதிகளின் இரும்புக் கனிமங்களைச் சேகரித்து அவற்றைக் காய்ச்சி இரும்புக் கருவிகள் செய்துள்ளனர்”[15] என்கிறார் சீ.பக்தவச்சலபாரதி.

மனிதனின் பயன்பாட்டிற்கு ஏற்ப கருவிகள் தோற்றம் பெற்றாலும், அவர்கள் வாழ்ந்த இடங்களில் கிடைத்த பொருள்களுக்கு ஏற்ப கருவிகள் உருவாக்கப்பட்டுள்ளது. இவை வாழிட மாற்றத்தின் போதும், உலகியல் முன்னேற்றத்தின் போதும் பல்வேறு மாற்றங்களையும், வளர்ச்சியையும் பெற்று தக்காருக்குத் தகுந்த பயன்தரும் வகையில் இன்று மாறியுள்ளன.

**காப்பியங்கள்**

காப்பியம்=காப்பு+இயம் என்று பிரித்து ஒரு மொழியைச் சிதையாது காப்பது காப்பியமாகும் என்று கூறுகிறார் செந்துறைமுத்து. “காப்பியம் என்ற சொல் தமிழ்ச் சொல்லே; அது இடைக்காலத்தில் காவியம் என்ற வடசொல்லின் செல்வாக்கால் தொடர்நிலைச் செய்யுளைக் குறிக்கப் பயன்பட்டது”[16] என்று விளக்கம் தருவர் இரா.காசிராசன்.

காப்பியம் என்ற சொல் “நால்வகை உறுதிப்பொருளையும் கூறுவதாய், கதை பற்றி வரும் தொடர்நிலைச் செய்யுள்”[17] என்று விளக்கம் தருகிறது தமிழ்ப் பேரகராதி.

காப்பியம் என்பதற்கு “மொழியியல்பைக் காக்கும் இலக்கண நூலுக்கும், வாழ்வியல்பைக் காக்கும் மந்திர நூலுக்கும் இது பெயராகி பின் கதைப் பொருளுடைய காவியத்திற்கும் ஆயிற்று”[18] என்று விளக்கம் தருகிறார் ச.வே.சுப்பிரமணியர்.

காப்பியம் என்பது தமிழ்ச்சொல். இது தமிழ்மொழின் தொடக்க காலம் முதல் வழக்கில் இருந்துள்ளது என்று பல தமிழறிஞர்களும் கூறுகின்றனர். ஆனாலும் காப்பியம் என்ற தமிழ்ச்சொல் ‘காவியம்’ எனும் வடமொழிச் சொல்லின் திரிபு என்பரும் உண்டு.

முற்காலத் தமிழ் இலக்கிய, இலக்கண நூல்களில், காப்பியம் என்ற சொல் தனித்து இடம்பெறவில்லை. தொல்காப்பியம் ‘தொல்’ என்ற அடைமொழியுடன் இச்சொல்லைப் பெற்று வந்துள்ளது. அதுபோல சங்கப் புலவர்களுள் ஒருவரான காப்பியாற்றுக் காப்பியனார் என்ற புலவரின் பெயரிலும் ‘காப்பியம்’ என்ற சொல் வந்துள்ளது. இதிலிருந்து ‘காப்பியம்’ என்பது அக்காலத்தில் குடிப்பெயராக இருந்திருக்கலாம் என எண்ண வாய்ப்பளிக்கிறது. இதனையே, “ஆரிய குலத்துச் சுக்கிராச்சாரியாரின் காவிய குலத்துப் பிறந்ததால் காவியர் என்பது காப்பியர் என வந்தது என்றும், திரண தூமாக்கினி என்பது தொல்காப்பியரின் இயற்பெயர் என்றும் கூறுகின்றார்.”[19] என்ற ரா.இராகவையங்காரின் கருத்தும் கூறுகிறது. தொல்காப்பிய ஆராய்ச்சியில் ஈடுபட்ட டாக்டர்.சி.இலக்குவனார் “காப்பியம் என்பது பழமரபுகளைக் காத்தியம்புவது என்றும் எனவே காப்பியம் என்னும் இலக்கண நூலைச் செய்ததால் காப்பியன் என வழங்கப்பட்டார்”[20] என்றும் விளக்குவர். எனவே காப்பியம் தமிழ்மொழிச் சொல் என்றாலும் அதன் பொருள் குறித்துப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

**காப்பியம் தமிழ்ச்சொல்**

‘காப்பியம்’ என்னும் சொல் ‘காவியம்’ என்ற வடசொல்லின் திரிபன்று. இது தமிழ்ச்சொல் ஆகும். காப்பியத்தைக் காப்பு+இயம் எனப் பிரித்துப் பொருள் கொண்டால் இவ்வுண்மை விளங்கும். காப்பு என்ற சொல் பாதுகாத்தல் என்னும் பொருள்படும். இயம் என்னும் சொல்லிற்குச் சொல், ஒலி, வாத்தியம் எனப் பொருள் கூறுவர். இதனை இயல், இசை, நாடகம் எனக் கொண்டால், இயல், இசை, நாடகத்தைக் காப்பது காப்பியம் எனவாகும்.

முற்காலத்தில் ‘காப்பியக்குடி’ என்னும் பெயரில் ஓர் ஊர் இருந்துள்ளது. அதுபோல ‘காப்பியர்’ என்ற குடி பெயர் கொண்ட மக்களும் வாழ்ந்துள்ளனர். ஆரியர்கள் தமிழகத்திற்கு வருவதற்கு முன்னரே தமிழ்நாட்டில் காப்பியம் என்னும் சொல் வழக்கில் இருந்ததை, சங்க இலக்கியம் உணர்த்துகின்றது. “தொல்காப்பியர், தொல்காப்பியக்குடி தொல்காப்பியர், வெள்ளூர்த் தொல்காப்பியர், காப்பியஞ் சேந்தனார், காப்பியாற்றுக் காப்பியனார் என்னும் புலவர்கள் பெயர்களையும்; காப்பியம், காப்பியக்குடி, காப்பியாறு முதலிய ஊர்ப் பெயர்களையும் நோக்கினால் காப்பியம் என்பது காவ்யம் என்ற சொல்லின் திரிபு அன்று என்றும், முத்தமிழையும் பாதுகாக்கும் மக்கள் வாழும் ஊர் என்றும், முத்தமிழையும் பாதுகாக்கும் குடி என்றும் பொருளாவது தெளியலாம். அதுபோல் முத்தமிழ்களையும் சிதையுறாமல் பாதுகாக்கும் நூல் காப்பியம் எனப்பட்டது”[21] என்பர் துடிசைக் கிழார் அ.சிதம்பரனார்.

காலந்தோறும் ‘காப்பியம்’ என்ற சொல்லின் பொருள் மாறுபட்டுள்ளது. முதலில் இலக்கண நூல்களையே இச்சொல் குறித்து நின்றுள்ளது. தொல்காப்பியம், பல்காப்பியம், பல்காப்பியப் புறநடை போன்ற இலக்கண நூல்களைக் ‘காப்பியம்’ என்ற சொல் குறித்துள்ளது. “பாலகாப்பியம் என்ற முனிவர் இயற்றிய பாலகாப்பியம் என்ற யானை வைத்திய நூலும் இலக்கணம் என்ற பொருள்பட அமைவதே”[22] என்றும், “காப்பியத்தைக் குறிக்கும் எபிக் (Epic) என்ற சொல் ‘எபோஸ்’ என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து ஆக்கப்பட்டது. இக்கிரேக்கச் சொல்லின் பொருள் ‘சொல்’ அல்லது ‘பாடல்’ என்பதாகும். காலப்போக்கில் இதன் பொருள் விரிவடைந்து வீரயுகப் பண்பினைக் கருவாகக் கொண்ட நீண்ட கூற்றுவகைப் பாடலைக் குறிக்கப்பயன்பட்டது”[23] என்று இரா.காசிராசன் குறிப்பிடுகிறார்.

சிலப்பதிகாரத்தில் “காப்பியத்தொல் குடிக் கவின்பெற வளர்ந்தது” என்று குடியைக் குறிப்பதாக வந்துள்ளது. மணிமேகலையில் “நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்” என்று காக்கும் இயல்புடைய நூல் என்னும் பொருளில் கையாளப்பட்டுள்ளது. முதன் முதலில் சீவகசிந்தாமணியில்

‘காப்பியம்’ (Epic) என்னும் பொருள் குறிக்கப்பட்டுள்ளது. இதனைத் தொடர்ந்து தமிழில் எழுந்த இலக்கிய, இலக்கண நூல்களான பெருந்தொகை, தமிழ்விடுதூது, நன்னூல், தண்டியலங்காரம், மாறன் அலங்காரம், பன்னிரு பாட்டியல், நவநீதப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், வீரசோழியம், வச்சணந்தி மாலை ஆகியவற்றில் காப்பியம் எனும் சொல் 'Epic' என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது.

**காப்பியத்தின் வேறு பெயர்கள்**

காப்பியம் என்ற ஒரு சொல் மட்டுமன்றிக் காப்பியத்தைக் குறிப்பிடுவதற்கு மேலும் பல சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

❖ பாட்டுடைச் செய்யுள் என்று சிலப்பதிகாரமும்,

❖ சரிதம் என்று சீவகசிந்தாமணியும்

❖ புராணம் என்று பெரியபுராணமும்

❖ உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என சிலப்பதிகாரமும்

❖ கதை என்று உதயணகுமாரகாவியமும்

❖ மாக்கதை என்று பெரியபுராணமும்

❖ காதை என்று தேம்பாவணியும்

❖ காவியம் என்று யசோதர காவியமும்

❖ மாப்பெருங்காப்பியம் என்று மகாபாரதமும்

❖ மாக்கவி என்று கம்பராமாயணமும்

காப்பியத்திற்கு வழங்கப்பட்டு வந்த பல்வேறு பெயர்களைக் கூறுகின்றன. இவைதவிர,

❖ பொருட்தொடர்நிலைச் செய்யுள்,

❖ அகலக்கவி,

❖ கதைச் செய்யுள்,

- விருத்தச் செய்யுள்,
- தொடர்நிலைச் செய்யுள்

என்ற பெயர்களும் வழங்கப்படுகின்றன.

**தொல்காப்பியத்தில் காப்பியத்திற்கான இலக்கணம்**

தமிழின் முதல் இலக்கண நூலான தொல்காப்பியத்தில் காப்பியத்திற்கான வரையறைகள் கூறப்பட்டுள்ளன. “காப்பியச் சுவைகளை மெய்ப்பாட்டியலிலும், காப்பிய அலங்காரமாகிய அணிகளை உவமையியலிலும், காப்பிய வகைநடை குறித்த செய்திகளை வனப்பு, வண்ணங்கள் பற்றிப் பேசும் செய்யுள் இயலிலும், காப்பிய மரபு பற்றி இன்ன பொருளை இன்ன சொல்லால் முந்தையோர் மரபு கண்டு கூற வேண்டும் என்று பழைய மரபிற்கு அரண் அமைக்கும் மரபியலிலும் தருகின்றார் தொல்காப்பியர்”[24] என்ற இரா.காசிராசன் கருதுகின்றார். தொல்காப்பியர் உரையின் வகைகளாகக் கூறிய,

**“பாட்டிடை வைத்த குறிப்பி னானும்**
**பாவின் றெழுந்த கிளவி யானும்**
**பொருள்மர பில்லாப் பொய்ம்மொழி யானும்**
**பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும்”**[25]

என்ற நான்கினுள் பொருளொடு புணராப் பொய் மொழி, பொருளொடு புணர்ந்த நகைமொழி என்ற இருவகையும் பழமரபுக் கதைகளைக் குறிப்பது புலனாகின்றது. இதன் மூலம் காப்பியங்கள் பெரும்பாலும் பழமரபுக்கதைகளைத் தழுவி அமையும் என்பது புலப்படும்.

எண்வகை வனப்புகளுள் தொன்மை, தோல், விருந்து தொடர்பாக வந்த,

**“தொன்மை தானே சொல்லுங் காலை**
**உரையொடு புணர்ந்த பழமை மேற்றே”**[26]
**“இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்**
**பரந்த மொழியால் அடிநிமிர்ந் தொழுகினுந்**

**தோலென மொழிப தொன்னெறிப் புலவர்''**[27]

**"விருந்தே தானும்**

**புதுவது புனைந்த யாப்பின் மேற்றே''**[28]

என்ற நூற்பாக்களில் காப்பியத்தின் பொருண்மை விளக்கப்பட்டுள்ளது. தொன்மை என்பது உரையோடு கூடிய பழமையான கதை என்று கூறி இதற்கு எடுத்துக்காட்டாகச் சிலப்பதிகாரத்தைக் கூறியுள்ளார் நச்சினார்க்கினியர்.

தோல் என்பது தொன்மையான மொழியால் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப்பொருள்களையும் கூறி, ஆசிரியப்பாவில் தொடர்நிலைச் செய்யுளாக அமைவதாகும்.

விருந்து என்பது தொன்மை, தோல் இரண்டிலிருந்தும் மாறுபட்டதாகும். இது ஆசிரியரே புதுமையாகப் படைப்பதாகும். பழங்கதையைக் கூறாமல் புதுமையாகக் கற்பனையிலும் அமையலாம் என்கிறது இவ்விருந்து. இவை அனைத்தும் காப்பியத்திற்குரிய பண்புகளாகும். இவ்விலக்கண நூலில் காப்பியம் என்ற சொல் கையாளப்படவில்லை என்றாலும் காப்பியத்திற்கான பொருண்மை கூறப்பட்டுள்ளது.

"தற்போது கிடைக்கப்பெறும் யாப்பிலக்கண நூற்களான தொல்காப்பியம் (செய்.166, 229, 230, 231), யாப்பருங்கலம் (95), வீரசோழியம் (176), இலக்கண விளக்கம் (122, 626, 631, 854), தொன்னூல் விளக்கம் (254-256), முத்துவீரியம் (1258, 1263, 1265-1267), சுவாமிநாதம் (162-164) ஆகியவற்றில் காப்பியத்துடன் தொடர்புடைய விளக்கங்கள் பல காணப்படுகின்றன."[29] என்ற கருத்து ஏற்புடையதாய் உள்ளது.

**தண்டியலங்காரம்**

காப்பியத்திற்கான இலக்கணத்தை நேரடியாகக் கூறும் முதல் நூல் தண்டியலங்காரம். இது காவியாதர்சம் என்ற வடமொழி இலக்கண நூலின் தழுவலாகும். இந்நூலில் கூறப்பட்டுள்ள காப்பியத்திற்கான இலக்கணமும் தமிழ்க் காப்பியத்தின் இலக்கணமும் பெரும்பான்மை ஒத்தும் சிறுபான்மை மாறுபட்டும் காணப்படுகின்றன. காப்பியத்தின் வடிவமைப்பில் தண்டியலங்காரம்

கூறும் பரிச்சேதம் என்னும் உறுப்பு தமிழில் எக்காப்பியத்திலும் காணப்படவில்லை. அதுபோல, தண்டியலங்காரத்தில் கூறப்படாத 'காண்டம்' என்னும் பெரும் பிரிவும், 'காதை' எனும் சிறு பிரிவும் தமிழ்க் காப்பியங்களில் காணப்படுகின்றன. காப்பியத்திற்குரிய இலக்கணமாக,

**"பெருங்காப் பியநிலை பேசுங் காலை**
**வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினொன்**
**நேற்புடைத் தாகி முன்வர வியன்று**
**நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித்**
**தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்**
**மலைகட னாடு வளநகர் பருவம்**
**இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து**
**நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்**
**பூம்பொழி னுகர்தல் புனல்விளை யாடல்**
**தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்**
**புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்**
**றின்னை புனைந்த நன்னடைத் தாகி**
**மந்திரந் தூது செலவிகல் வென்றி**
**சந்தியிர் றொடர்ந்து சருக மிலம்பகம்**
**பரிச்சேத மென்னும் பான்மையின் விளங்கி**
**நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்**
**கற்றோர் புனையும் பெற்றிய தென்ப"**[30]

என்று கூறுகிறது.

- காப்பியத்தின் முதல் உறுப்பு வாழ்த்து, வணக்கம், வருபொருள் உரைத்தல் என்ற முறையில் அமைந்திருத்தல் வேண்டும்.
- காப்பியம் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் உணர்த்த வேண்டும்.

- காப்பியம் தன்னிகரில்லா நற்பண்புள்ளவர்களைத் தலைமையாகக் கொண்டிருக்க வேண்டும்.
- மலை, கடல், நாடு, நகரம், பருவ காலங்கள், சூரியன், நிலவு ஆகியவற்றின் வருணனை இடம்பெற வேண்டும்.
- காப்பிய மாந்தர்களின் வாழ்வில் திருமண நிகழ்ச்சி, பொன்முடி சூட்டுதல், பூம்பொழில், புனல் விளையாட்டு, குழந்தைப்பேறு, புலவி, கலவி என்பன நிகழ்தல் வேண்டும்.
- காப்பிய மாந்தர்கள் மந்திரம், தூது, செலவு, இகல், வெற்றி கொண்டவர்களாய் வாழ்தல் வேண்டும்.
- காப்பியத்தின் போக்குச் சந்திகளாய் அமைய வேண்டும்.
- காப்பியம் சருக்கம், இலம்பகம், பரிச்சேதம் ஆகிய பிரிவுகளைப் பெற்று அமைய வேண்டும்.
- காப்பியம் படிப்பவர்களுக்குச் சுவையுடையதாகவும், உணர்ச்சியுடையதாகவும் இருக்க வேண்டும்.

தண்டியலங்காரத்தைப் பின்பற்றி மாறனலங்காரமும், காப்பியத்தின் இலக்கணத்தை விரிவாகத் தருகின்றது. மாறனலங்காரம் அக்காலத்தில் தோன்றிய காப்பியங்களுக்கேற்ற புதிய இலக்கணங்களைக் கூறுகின்றது. இல்வாழ்க்கை, தென்றலின் வருகை, ஆறு வருணனை, ஒற்றாடல், நிரைகோடல், நிலையாமையை மிகுத்துக் கூறல், கைக்கிளை, படலம், காண்டம் ஆகியன கூறப்பட்டுள்ளன.

**காப்பியப் பாகுபாடு**

இலக்கிய வகையில் காப்பியங்கள் பெருங்காப்பியங்கள் சிறுகாப்பியங்கள் என்ற இருபிரிவாகப் பிரிக்கப்படுகின்றன. இது மேலும் ஐந்து வகையாகப் பாகுபாடு செய்யப்படுகிறது. பெருங்காப்பியங்கள், சிறுங்காப்பியங்கள் என்று இரு பிரிவுகளாவே பிரித்துக் கூறுவர். இப்பிரிவு இலக்கிய வகையில் அமைந்தது. நாம் இதனை ஐந்து வகையாகப்

பகுக்கலாம். இவ்வைந்து பகுப்புகளும் உட்பிரிவுகளைக் கொண்டு அமைந்துள்ளன.

- பொருள் தொடர்நிலையின் சிறப்பு நோக்கி அமையும் பகுப்பு,
- எண்ணிக்கை அடிப்படையில் அமையும் பகுப்பு,
- அமைப்பு அடிப்படையில் அமையும் பகுப்பு,
- கதையின் இறுதிநிலை கொண்டு அமையும் பகுப்பு.

**பொருள் தொடர்நிலையின் சிறப்பு நோக்கி அமையும் பகுப்பு**

தமிழ்மொழியில் காப்பியங்கள் 'பொருள் தொடர்நிலைச் செய்யுள்' என்ற பெயரில் சுட்டப்படுகின்றன. செய்யுளின் பல அடிகளானாலும் அல்லது பல செய்யுள்களானாலும் பொருள் தொடர்ந்து வருவது பொருள் தொடர்நிலை செய்யுளாகும். இதனை மூவகையாகப் பிரிப்பர்.

1. கதை தழுவாது பொருள் மட்டும் தொடர்ந்து வரும் தொடர்நிலைச் செய்யுள். இதற்குச் சான்றாகப் பத்துப்பாட்டு, பிரபந்தங்கள் போன்றவை.
2. கதை தழுவி, பொருள் தொடர்ந்து வரும் தொடர்நிலைச் செய்யுள்களில் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப்பொருள்களில் ஏதேனும் ஒன்றையோ அல்லது ஒன்றிற்கு மேற்பட்டவற்றையோ விட்டு வருவது. எடுத்துக்காட்டாக மணிமேகலை, நீலகேசி, பெரியபுராணம் போன்றவை.
3. கதை தழுவி வரும் தொடர்நிலைச் செய்யுள்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப்பொருள்களையும் பெற்று வருவது. உதாரணமாக நாடகக் காப்பியங்கள், பெருங்காப்பியங்கள் முதலியவை.

**எண்ணிக்கை அடிப்படையில் அமையும் பகுப்பு**

சிலர் காப்பியங்களைப் பெருங்காப்பியங்கள், சிறுங்காப்பியங்கள் எனப் பகுத்தல் கூடாது என்பர். ஆனாலும் இது உயர்வு, தாழ்வு கருதி ஏற்பட்ட

பகுப்பு அன்று. இலக்கிய ஆய்வுகள் பகுப்புக்களின் அடிப்படையில் அமைந்தால்தான் ஆய்வு செம்மையாக அமையும் என்பது அவர்களின் கருத்து.

1. ஐம்பெருங்காப்பியம் என்னும் சொல்லை முதலில் மயிலைநாதரே கையாண்டார் என்பர். அவர் கூறும் ஐம்பெருங்காப்பியங்கள் என்பவை,

    **"சிந்தாமணி யாம்சிலப்பதி காரம் படைத்தான்**
    **நந்தாமணி மேகலை புனைந்தான் - நந்தா**
    **வளையாபதி தருவான் வாசவனுக் கீந்தான்**
    **திளையாத குண்டல கேசிக்கும்"**[31]

    என்ற நூல்களே என்று கந்தப்பதேசிகர் கூறியுள்ளார். பிற்காலத்தில் இதனைக் காலமுறைப்படி சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி என வரிசைப்படுத்தியுள்ளனர். இவற்றில் மணிமேகலை, குண்டலகேசி இரண்டும் பௌத்தசமயக் காப்பியங்கள். ஏனைய மூன்றும் சமண காப்பியங்கள் ஆகும்.

2. யசோதர காவியம், உதயணகுமார காவியம், நாககுமார காவியம், சூளாமணி, நீலகேசி என்னும் ஐந்து நூல்களும் ஐஞ்சிறுகாப்பியம் என்ற பகுப்பில் அடங்கும். இவை அனைத்தும் சமணக் காப்பியங்கள் ஆகும். பெருங்காப்பியம் என்ற பகுப்பினைக் கண்டவர், இதனை உருவாக்கியிருக்கலாம். இதைத்தவிர இப்பகுப்பினை உருவாக்கியவர் யார் என்பதும், இப்பகுப்பிற்கான காரணமும் காணமுடியவில்லை.

**அமைப்பு அடிப்படையில் அமையும் பகுப்பு**

காப்பியத்தின் அமைப்பு அடிப்படையில் காப்பியங்களை இயற்கைக் காப்பியம், செயற்கைக் காப்பியம் என இருவகையாகத் தமிழ்க் கலைக்களஞ்சியம் பகுத்துக் கூறுகிறது. "படைப்பாளிகளை அடிப்படையாகக் கொண்டு காப்பியங்களை இரு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று தனிஒரு

புலவனின் புலமைத் திறத்தால் உருவாக்கப்பட்டவை. மற்றது, மக்கள் மத்தியில் பரவலாகக் காணப்படும் வரலாற்றுப் பழங்கதைகளைப் பயன்படுத்திப் பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு பெயர் அறியப்படாதத புலவர் பெருமக்களால் படைக்கப்பெற்றவை."[32] என்ற இரா.காசிராஜனின் பகுப்பு முறை இம்முறையை ஒத்துள்ளது குறிப்பிடத்தக்கது.

1. இதனை மேலும் கேள்விக் காப்பியம், கல்விக் காப்பியம் என்றும் பகுத்துள்ளனர். கேள்விக் காப்பியம் மக்கள் விரும்பும், அவர்களின் வாழ்வியலுடன் ஒன்றிய கதைக்கருவுடன், அவர்களின் வாழ்க்கை அனுபவங்களை ஒட்டிய கற்பனையுடனும் அமையும். இது அனைவருக்கும் எளிதில் புரியும் வகையில் அமைந்திருக்கும். எ.கா.நாட்டுப்புறக் கதைப்பாடல்கள்.

2. கல்விக் காப்பியம் என்பது கவிஞர் தாம் வாழும் காலத்திற்கு ஏற்ற பொருளைத் தேடி, அதனை, தம் திறமையால் மக்கள் மனத்தைக் கவரும் வகையில் இயற்றுவார். இதன் நடைப்போக்கும், கருத்துச் செறிவும் கற்றவர்களுக்கென்றே உருவாக்கப்பட்டதாக இருக்கும். இதன் குறிக்கோள் எளிதில் அனைவருக்கும் விளங்குவதில்லை.

**காப்பியத்தின் இறுதிநிலை அடிப்படையில் அமையும் பகுப்பு**

ஒரு காப்பியத்தின் முடிவைக் கொண்டு அதனை இன்பியல் காப்பியம், துன்பியல் காப்பியம், நடுவுநிலைமைக் காப்பியம் என மூன்றாகப் பகுக்கப்படுகிறது.

1. காப்பியத்தின் இறுதியில் இன்பமாக முடிந்து, கற்பவர்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தினால் அது இன்பியல் காப்பியமாகும். சான்றாக, கம்பராமாயணம்.

2. காப்பியத்தின் முடிவில் துன்பமாக முடிந்து, கற்பவர்களுக்கு துன்பத்தை ஏற்படுத்தினால் அவ்வகைக் காப்பியம் துன்பியல் காப்பியமாகும். சான்றாக, மகாபாரதம்.

3. காப்பியத்தின் கடைசியில் இன்பமாகவும் இன்றி, துன்பமாகவும் இன்றி, காப்பியத்தின் தலைமை மாந்தர்கள் தெய்வீக நிலையை அடைவதாகவும், அல்லது துறவு சென்று முக்தி பெற்றதாகவும் அமையுமானால் அது நடுவுநிலைமைக் காப்பியமாகும். சான்றாக, சீவகசிந்தாமணி.

**காப்பியங்களின் வளர்ச்சி**

காப்பிய காலங்களில் மட்டுமின்றி அதனைத் தொடர்ந்தும் காப்பியங்கள் தோன்றியுள்ளன என்பதை,

“அ. முதற்காப்பியம்-முத்தமிழ்க் காப்பியம், நாடகக் காப்பியம், சிலப்பதிகாரம்

ஆ. இரட்டைக்காப்பியம் - சிலப்பதிகாரம், மணிமேகலை

இ. பெருங்கதை

ஈ. சீவகசிந்தாமணி, சூளாமணி

உ. ஐம்பெருங்காப்பியங்கள் - சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, குண்டலகேசி, வளையாபதி

ஊ. ஐஞ்சிறு காப்பியங்கள் - யசோதர காவியம், உதயண குமார காவியம், நீலகேசி, நாககுமார காவியம், சூளாமணி

எ. இராமயணம் - இராமகாதை / கம்பராமாயணம்

ஏ. புராணக் காப்பியங்கள் - பெரியபுராணம், கந்தபுராணம், திருவிளையாடற் புராணம்

ஐ. பாரத நூல்கள் - பெருந்தேவனார் பராதம், பாரத வெண்பா, வில்லிபாரதம், நல்லாப் பிள்ளை பாரதம், நளவெண்பா, நைடதம்,

ஒ. சமயக் காப்பியங்கள் - இசுலாமியம்: சீறாப்புராணம், கிறிஸ்துவம்: தேம்பாவணி, இரட்சண்ய யாத்திரிகம்

ஓ. இக்காலக் காப்பியங்கள் - பாஞ்சாலி சபதம், பாண்டியன் பரிசு, இராவண காவியம்”[33] என்று மு.பாலகுமார் குறிப்பிடுகிறார். தமிழில் காப்பியங்கள் பண்டைய காலம் தொட்டு இன்று வரையிலும் வளர்ந்து கொண்டே வருவதை அறியமுடிகின்றது.

தொகுப்புரை

- மனித வாழ்க்கையில் நாகரிகம் என்பது மிகவும் இன்றியமையாததாகும். நாகரிகத்தின் வளர்ச்சியே பண்பாடு ஆகும். பண்பாடு என்பது பண்பட்ட உள்ளம் அகவயமனது. நகர வாழ்க்கையின் மாற்றமே நாகரிகம் இது புறவயமானது. "கந்தையானாலும் கசக்கிக் கட்டு" என்பது நாகரிகம். "பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பு" என்பது பண்பாடு.
- தமிழகத்தில் நிகழ்ந்த அகழ்வாராய்ச்சிகளில் கிடைத்த பொருள்களைக் கொண்டு நம் தமிழரின் நாகரிக வாழ்வையும் வளர்ச்சியையும் அறிய முடிகின்றது.
- எரிவேல், ஈட்டி, குத்துவாள் அல்லது பட்டாக்கத்தி, அம்பு போன்ற வேல், இருபுறமும் கூர்மையான வாள், மூவிலைவேல் (திரிசூலம்), கூரிய அம்புதலை, கைக்கோடாரி, வாள், வளைந்த கத்தி, இருவளைவான கொக்கித்தடி, பலிவாள், அம்புதலை, வேலாயுதம், கோடாரி, சூலாயுதம், கேடயம், அரியஆயுதம், சிறியஉடைவாள், சிறியஈட்டி, செங்கோணவாயுள்ள ஈட்டி, கூம்புவாய்ஈட்டி, கூரிய வாயுள்ளஈட்டி, ஈட்டிப்பிடியுள்ள குழிவான குழாய், குழிவான விழிம்புள்ள குத்துவாள், அகன்ற வாய்ப் பரசு, நீண்ட வட்டக் குழிவான ஈட்டி, குழிவான இரும்புக் கைப்பிடி ஈட்டி, வளைவுகளுள்ள வாள், சிறிய நுனியுள்ள வாயுடைய ஈட்டி, கத்தி ஆகியவை ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வில் கிடைத்த கருவிகளாகும்.
- இயற்கையின் சூழலுக்கு ஏற்ப வாழ்ந்த ஆண்களும், பெண்களும் அவரவர் வாழ்வியல் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளத் தேவையான கருவிகளைக் கண்டுபிடித்துள்ளனர்.
- போர், தொழில், இசை, இல்லம், நாகரிகம், பண்பாடு, சடங்குகள் சார்ந்த கருவிகள் தமிழரின் வாழ்வியலுக்குச் சாட்சியாகின்றன.

- ஒரு கருவி பல தேவைகளைப் பூர்த்தி செய்துள்ளது. போர்க் கருவிகள் தொழிலுக்கும், இல்லக் கருவிகள் போருக்கும், இசைக் கருவிகள் சடங்குகளுக்கும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

- பழங்காலக் கருவிகள் பல இன்று அருங்காட்சியகத்தில் வைத்துப் பாதுகாக்கும் பொருட்களாக உள்ளன. தமிழ் இலக்கியங்களில் பதிவு செய்யப்பெற்ற கருவிகள் மூலம் அன்றைய கால மக்களின் வாழ்வியலை மதிப்பிட முடியும்.

- எந்தக் கருவியின் பயன்பாடு இன்றியமையாததாக இருந்துள்ளதோ அந்தக் கருவி விரைவில் பல்வேறு மாற்றங்களை அடைந்து, அதிக பயன்தரும் சிறப்பானதொரு வடிவத்தைப் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

- உழும் கலப்பை ட்ராக்டராகவும், உரல் அரவை இயந்திரமாகவும் பல பயன் தரும் பொருளாக மாறியிருக்கின்றன. மரபு மாற்றத்திற்கு ஏற்ப கருவிகளும் மாற்றம் பெறுவதைக் காணமுடிகின்றது.

- கருவிகளின் பயன்பாட்டை மட்டும் கருத்தில் கொள்ளாது, அவற்றைப் பயன்படுத்தும் மக்களின் நம்பிக்கைகள், உணர்வுகளைக் கருத்தில் கொள்ளும் போது இன்னும் சிறப்பான இடத்தைப் பெறுகின்றன.

- தொல்காப்பியம், காப்பியாற்றுக் காப்பியனார், காப்பியஞ் சேந்தனார் போன்ற சங்கத் தமிழ்ப் புலவர்களின் பெயர்களையும், காப்பியக்குடி, காப்பியம், காப்பியாறு என்ற ஊர்ப் பெயர்களையும், காப்பியர் என குடி பெயரையும் கொண்டு “காப்பியம்” தமிழ்ச்சொல் என்பது தெளிவாகிறது.

- தொல்காப்பியம், பல்காப்பியம் என்னும் இலக்கண நூல்களைக் கொண்டு முதலில் காப்பியம் என்னும் சொல் இலக்கண நூல் என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

- முதலில் Epic என்னும் சொல் காப்பியம் என்னும் பொருள் சீவகசிந்தாமணியிலேயே பயன்படுத்தப்பட்டது.

- தொல்காப்பியத்தில் காப்பியம் என்னும் சொல் கூறப்படவில்லை. என்றாலும், காப்பியத்திற்கான இலக்கணம் கூறப்பட்டுள்ளது. உரையின் வகைகளிலும் வனப்பின் வகைகளான தொன்மை, தோல், விருந்து என்பதன் மூலமும் இதனைக் கூறியுள்ளார்.

- தண்டியலங்காரத்தில் முதன் முதலில் காப்பியத்திற்கான வரையறை தெளிவாகத் தரப்பட்டுள்ளது. இதனைத் தொடர்ந்து எழுந்த அணியிலக்கண நூல்களும், யாப்பியல் நூல்களும், பாட்டியல் நூல்களும் காப்பியம் பற்றிப் பேசுகின்றன.

- தண்டியலங்காரம் வடமொழியின் தழுவல் நூலானாலும் இதன் காப்பிய வரையறைகள் தமிழ்க் காப்பியங்களுக்கு ஒத்துள்ளன. ஓரிரு மாற்றங்கள் தவிர, அதிக வேறுபாடுகள் இல்லை.

- காப்பியங்களை உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள், பொருள் தொடர்நிலைச் செய்யுள், காவியம், மாகாவியம், கதை, மாக்கதை எனப் பல்வேறு பெயர்களில் வழங்கியுள்ளனர்.

- 19-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கந்தப்பதேசிகர் ஐம்பெருங்காப்பியங்களைச் சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்ற வரிசையில் செய்யுளாக்கியுள்ளார். பின்னர் இது தோன்றிய காலத்திற்கேற்ப வரிசைபடுத்தப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. தொல்லியல் விதிகளும், வகைகளும், அ.ஹ.முகைதீன் பாதுஷா, ப.123
2. மேலது, ப.125
3. குறுந்தொகை, பா:355:
4. கலித்தொகை, பா:133:8
5. பண்டைத் தமிழக நாகரிகமும் பண்பாடும், மொழிஞாயிறு ஞா.தேவநேயப் பாவானர், ப.6
6. மேலது, ப.6
7. மேலது, ப.1
8. தொல்லியல் விதிகளும்-வகைகளும், முனைவர் அ.ஹ.முகைதீன் பாதுஷா, ப.22
9. சங்க கால நாகரிக பண்பாட்டு வளர்ச்சியில் இரும்பின் பங்கு, கோ.முத்துசாமி, பக்.24-25
10. பழந்தமிழகத்தில் இரும்புத் தொழில், முனைவர் வே.சா.அருள்ராசு, ப.22
11. ஆதிச்சநல்லூர் ஆய்வுகள், முத்தாலங்குறிச்சி காமராசு, ப.33
12. மேலது, ப.62
13. மேலது, ப.295
14. நா.வானமாமலை, தமிழர் வரலாறும் பண்பாடும், ப.71
15. தமிழர் மானிடவியல், சீ.பக்தவத்சலபாரதி, ப.309
16. இரா.காசிராஜன், காப்பியம், ப.11
17. தமிழ்ப் பேரகராதி, தொகுதி-2, பகுதி-1, ப.868
18. காப்பிய புனைதிறன், ச.வே.சுப்பிரமணியன், ப.5

19. இரா.காசிராஜன், காப்பியம், ப.2
20. மேலது. ப.5
21. மேலது, ப.5
22. மேலது, பக்.6-7
23. இரா.காசிராஜன், உலகக் காப்பியங்கள், ப.1
24. இரா.காசிராஜன், காப்பியம், ப.13
25. தொல்காப்பியம், பொரு.செய்.163
26. மேலது, நூ.225
27. மேலது, நூ.226
28. மேலது, நூ.227
29. தமிழ்க் காப்பியங்களில் அவல மகளிர், ஆய்வேடு, ப.22
30. தண்டியலங்காரம், பொதுவணியியல், நூ.8
31. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.253
32. இரா.காசிராஜன், உலகக் காப்பியங்கள், ப.3
33. மு.பாலகுமார், இலக்கியத்தின் பொதுமைக் கூறுகள் கருத்தியல் விளக்கம், பக்.64-65

மனித வாழ்வில் நாகரிகம் தோன்றிய பொழுது இசையும் தோன்றியது. கருத்துப் பரிமாற்றக் கருவியாகத் தோன்றிய இசை, மொழியோடு ஒத்து தன் வளர்ச்சிப் பயணத்தைத் தொடங்கியது. பிற்காலத்தில் மக்களின் செல்வ வளம், பொழுதுபோக்கில் அவர்களின் ஈடுபாடு ஆகியவை இசையின் வளர்ச்சிக்குக் காரணமாயின. சங்க காலத்தில் 'இசைக்கு மயங்கிய அ.்.றிணைகளும்', பக்தி இலக்கிய காலத்தில் 'தமிழோடு இசைப்பாடல் மறந்தறியேன்' என்ற அடிகளும், இசை நூல் என்று கூறும் அளவிற்கு இசைக் குறிப்புகளைத் தரும் சிலப்பதிகாரமும் அன்றைய தமிழகத்தில் இசையின் நிலை மற்றும் வளர்ச்சியைக் கூறுகின்றன. இசையினை மக்களின் மகிழ்ச்சிக்காக மட்டுமல்லாமல் பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்துச் சடங்குகளிலும் இன்றளவும் பயன்படுத்தி மகிழ்ந்து வருகிறோம்.

மனித வாழ்வில் நாகரிகம் தோன்றும் முன்பே இசை ஒலிகள் தோன்றின. மனிதன் பிறருடன் தொடர்புகொள்ள தன்னுடைய கருத்துகளை வெளிப்படுத்த சைகை முறையைக் கையாண்டான். அதைத் தொடர்ந்து 'பூப்-பூப்' எனப்படும் இசைமொழிக் கொள்கையைக் கையாண்டான். அதை இசையின் தொடக்கமாகக் கருதுகின்றனர். நாளடைவில் 'மொழி' என்னும் பேச்சு வழக்கும் தொடங்கலாயிற்று.

**இசை - பொருள் விளக்கம்**

இசை என்பதற்கு "இசைப்பாட்டு, ஒலி, ஓசை, பண், கூடி நிற்றல், கொடைப்பண்பு, பாட்டினிசை, பொன், சொல், புகழ், முத்தமிழின் ஒன்றாகிய இசைத்தமிழ்"[1] என்று கழகத் தமிழ் அகராதி பொருள் விளக்கம் தருகிறது.

இசை என்ற சொல்லினைத் தொல்காப்பியர் 'ஓசை' என்றும், 'இன்னிசை' என்றும் குறிப்பிடுகிறார்.

**"துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்**
**இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர்"**[2]

எனும் நூற்பாவில் இசை என்னும் சொல்லினை 'ஓசை' என்னும் பொருளில் பயன்படுத்தியுள்ளார்.

**“அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீட்டலும்**
**உளவென மொழிப இசையொடு சிவணிய**
**நரம்பின் மறைய என்மனார் புலவர்”**[3]

எனும் நூற்பாவில் இசை என்ற சொல்லை ‘இன்னிசை’ என்னும் பொருளில் கையாண்டுள்ளார்.

**இசை பற்றி அறிஞர்களின் கருத்துக்கள்**

“மிடற்றுப்பாடலும் குழல், யாழ் முதலிய இசைக்கருவிகளின் ஒலியும் இவற்றின் கால அளவினை வரையறுக்கும் தாள அமைப்பும் ஆகிய இவை மூன்றும் ஒத்திசைந்து இயங்குவது இசையாகும்.”[4] என்று வெள்ளைவாரணார் சுட்டுவதாக இசைத்தமிழ் நூல் ஆசிரியர் தி.நா.அறிவுஒளி குறிப்பிடுகிறார்.

“இசை என்பது செவிவழியாகச் சிந்தைக்குப் புலனாகி உயிர்களுக்கு இன்ப துன்பங்களை விளைவிக்கும் ஒரு கலை. செவிப்புலனுக்குரிய பொருள் நாதம். அது ஓசை, இசை, ஒலி என முக்கூறாக அமையும். விண்வெளி, காற்று, கடல், மலைச்சாரல், மழை முதலியவற்றின் இயற்கை இயக்கத்தினின்று வெளிப்படும் நாதம் ஓசை எனப்படும். இடி, நிலநடுக்கம், பெருவெள்ளம், புயற்காற்று, பறவை, விலங்குகளின் வாயாலும் நடையாலும் விளையும் நாதம் ஒலி எனப்படும். ஓசை, ஒலிகளை ஓரளவுக்கு உட்படுத்தி ஏற்றம், இறக்கம், சமம், தெளிவு சுளிவுகளோடு மக்கள் குரலால் வெளிப்படுத்தும் நாதம் இசை எனப்படும்.”[5] என்று இசை மருத்துவம் என்ற நூலில் சே.பிரேமா உரைக்கிறார்.

“தமிழை இயல், இசை, நாடகம் என மூன்று பகுதியாக்கி தனித்தனியே நுகர்ந்தும் அவற்றை ஒன்றிணைத்து முத்தமிழாக்கியும் முறை செய்தவன் தமிழன்”[6] என்றுரைக்கிறார் குமரிச்செழியன். தமிழர் வாழ்வில் இசையானது ஓர் முக்கிய அங்கமாக விலங்கியுள்ளது. ஆதலால் தான் முத்தமிழில் இசைத்தமிழை நடுவில் வைத்துள்ளனர்.

“இசை என்னும் சொல்லிற்கு இசைவிப்பது, வகைப்படுத்துவது எனப் பொருள் கொள்ளலாம்”[7] என்று சு.வித்யானந்தனும், “கவின்கலைகளுள் முதன்மையானது இசையே. இசை எக்காலத்திலும் எந்நாட்டு மக்களாலும்

ஏற்றுக் கொள்ளப்படக் கூடிய, விதி முறைகளைக் கொண்டு வளர்க்கப்பட்ட ஒரு முழுமையான கலையாகும்."[8] என்று வாழ்வியற் களஞ்சியமும் இசை பற்றிய பல்வேறு கருத்துக்களை முன்வைக்கின்றனர். ஆனாலும் இசை என்பது கருத்துப் பரிமாற்றத்தின் தொடக்கம்; பொழுதுபோக்கின் வளர்ச்சி; கலையின் உச்சம். இசைக் கலையின் வளர்ச்சி, அந்நாட்டு மக்களின் நாகரிக வளர்ச்சியையும் பண்பாட்டு உயர்ச்சியையும் காட்டுகிறது. இசைக்கு மிக முக்கியமான மொழி வளர்ச்சியையும், சொல் வளத்தையும் இக்கலை உணர்த்துகின்றது.

**இசை வகை**

மனித நாகரிகத்துடன் தொடங்கிய இசை, நாகரிக வளர்ச்சியுடன் அதுவும் வளர்ந்து வருகிறது. ஒவ்வொரு சமுதாயக் குழுக்களிடமிருந்தும் ஒவ்வொரு விதமான இசை வகைகள் பிறந்துள்ளது. இன்றைய நிலையில் இசையைப் பாடல்களின் அடிப்படையில் பலவாகப் பகுக்கலாம்.

- நாட்டுப்புற இசை
- கானாப்பாடல்
- கர்நாடக இசை
- வெளிநாட்டு இசை

என்று கூறுவதுடன் நின்றுவிடவில்லை. காலத்தின் வளர்ச்சிக்கு ஏற்பவும், இசையின் வளர்ச்சிக்கு ஏற்பவும் இதன் வகை பெருகிவருகிறது.

இசையைச் சுரத்தின் அடிப்படையில் மூன்றாகப் பிரிக்கலாம். அவை

- இன்னிசை,
- ஒத்திசை,
- தொகையிசை

ஆகும்.

- ஒற்றைச் சுரங்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வந்து தரும் ஓசை இன்னிசை எனப்படும்.

- வெவ்வேறு சுரங்களாக மாறிமாறி தொடர்ந்து வராமல், ஒரே சுரங்களிள் கார்டுகள் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வந்து தரும் ஓசை ஒத்திசை எனப்படும்.
- ஒத்த இரு சுரங்களை ஒத்து இசைக்காமல், ஒரு சுரத்தோடு வேறொரு சுரம் இணையாகச் சேர்த்து ஒரே நேரத்தில் ஒசையை எழுப்புமானால் அது தொகையிசை எனப்படும்.

**இசைக்கருவிகள்**

உலகின் முதல் இசைக்கருவி மனிதனின் குரல். இதனை மிடற்றுக் கருவி என்பர். இது இயற்கை நமக்குத் தந்த கொடையாகும். மனிதன் போலச் செய்தல் மூலம் ஒலிக் குறிப்புகளைத் தோற்றுவித்தான். குயிலைப் போல கூவவும், ஆர்ப்பறிக்கும் அருவிபோல அலரவும் செய்தான். பிறகு இயற்கையால் உண்டான இசைக் கருவிகளைப் போல தானே உருவாக்கவும் செய்தான். கைகளைத் தட்டியும், அதிர்வுடன் குதித்தும் மனிதன் இசையொலிகளைத் தோற்றுவிக்க முயன்றுள்ளான். இயற்கையில் தோன்றும் பல ஒலிகள் இசை வகையைச் சேர்ந்தவை. மரத்திலிருந்து பிரிந்து தொங்கும் பட்டையும், புதராக வளர்ந்த நாணலும், காற்றில் அசைந்து ஒலியைத் தருவதைக் கண்டு, மரத்தில் கிடக்கும் விலங்கின் தோல்கள் மேல் தற்செயலாகக் கற்களும் கொம்புகளும் மழைத்துளிகளும் விழும்போது உண்டாகும் ஒலியைக்கேட்டும் ஆதிமனிதன் தன் இசைக்கருவிகளை அமைத்திருக்க வேண்டும்.

வேட்டையாடும் ஆதிமனிதன் தன் வில்லின் நாணை இழுத்துவிடும் போது அது செய்த ஒலியில் ஈடுபட்டு, நரம்புக்கருவியைக் கண்டுபிடித்திருக்க வேண்டும். கல்லினாலான செண்டையும் கொம்புகளும் முதலில் தோன்றிய இசைக்கருவிகள். கல்லைக் குடைந்து அதன் மேல் விலங்குகளின் தோலை இழுத்துக்கட்டி அதை இசைக்கருவியாகக் கையாண்டான். அதனைத் தொடர்ந்து உலோகத்தாலான செண்டை, தாளம் போன்ற கருவிகளைச் செய்யவும் கற்றான். முரசு போன்ற தோற்கருவிகள் மிகப் பழமையான இசைக்கருவிகள். கொம்பு, மகுடி, சங்கு போன்ற தொளைக்கருவிகளும்

(துளைக்கருவிகள்). யாழ் போன்ற நரம்புக்கருவிகளும் இறுதியாகத் தோன்றியிருக்க வேண்டும்.

பழங்காலத்திலிருந்து மனிதர்கள் பல்வேறு இசைக்கருவிகளைப் பயன்படுத்தி வந்துள்ளனர். கல், மரம், எலும்பு, விலங்குகளின் தோல் போன்ற பல்வேறு இயற்கை மூலங்களை இசைக்கருவிகளுக்காகப் பயன்படுத்தியுள்ளனர். ஒலி எழுப்பக்கூடிய எல்லாப் பொருள்களையும் இசைக்கருவியாக்க முடியும். ஆனால் இசையோடு தொடர்புடைய கருவிகள் மட்டுமே இசைக்கருவிகள் எனப்படும். இசையின் தொடக்கக் காலத்தில் அனைத்து இசைக்கருவிகளும் அதிக ஒலி எழுப்பக்கூடியனவாக உருவாக்கப்பட்டிருந்தன. இக்கருவிகள் வன்மை ஒலி எழுப்பும் இசைக்கருவிகள் எனப்படும்.

மனிதனிடம் நாகரிகம் வளரத் தொடங்கியவுடன் மெல்லிய இனிய ஒலி எழுப்பக்கூடிய கருவிகள் உருவாக்கப்பட்டன. இவை மென்மை ஒலி எழுப்பும் இசைக்கருவிகள் எனப்படும். “குகைச் சுவர்ச் செதுக்குச் சித்திரங்கள், பிரான்சின் தென்பகுதியில் உள்ள இலை திராய் பிரெரை (Les Trois Frers) என்னும் இடத்தில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அச்சித்திரங்களுள் ஒன்று விலங்கின் தோலைப் போர்த்திக் கொண்டிருக்கும் மந்திரவாதி ஒருவன், குழல் இசைப்பதைக் காட்டும் சித்திரம் ஆகும்.”[9] இச்சித்திரம் மூலம் பழங்காலந் தொட்டே மக்களின் வாழ்க்கை முறைகளுக்கும், சடங்குகளுக்கும் இசைக்கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

சங்க காலத்திலும் அதனைத் தொடர்ந்து இன்று வரையிலும் மனித வாழ்வில் பிறப்பு முதல் இறப்பு வரை இசைக்கருவிகள் பயன்படுவதைச் சங்கப் பாடல்களும், நாட்டுப்புறப் பாடல்களும் அதனைத் தொடர்ந்து இன்றைய இசை உலகமும் உறுதி செய்கின்றன. இந்தியாவில் மட்டும் ஏறத்தாழ 500-க்கும் மேற்பட்ட இசைக்கருவிகள் இருப்பதாகக் கூறப்படுகிறது. இன்று உலகம் முழுவதும் பரவிக்கிடக்கும் இசைக்கருவிகள் எண்ணில் கிடைத்தில. ஓசையின் தேவைகளுக்கு ஏற்ப அனைத்துப் பொருள்களும் இசைக்கருவிகளாக்கப்படுகின்றன. “இனிய நாதத்தை உண்டாக்கி

அதிலிருந்து இசையை வகைப்படுத்தி வெளியிடும் கருவியே இசைக்கருவியாகும்."[10] என்கிறார் கே.ஏ.பக்ரிசாமி.

**இசைக்கருவிகளின் வகைகள்**

இசைக்கருவிகளை நான்காக வகைப்படுத்துவர். அவை

- நரம்புக்கருவிகள்,
- துளைக்கருவிகள்,
- தோற்கருவிகள்,
- கஞ்சக்கருவிகள்

என்பனவாகும். பேரிகை, படகம், இடுக்கை, உடுக்கை, மத்தளம், சல்லி, கரடி போன்றவை தோற்கருவிகள். வங்கியம், கொம்பு, சங்கு முதலியன துளைக்கருவிகள். யாழ், வீணை, கின்னரி (கின்னரம்) என்பவை நரம்புக்கருவிகள். கைமமணி, தாளம், கஞ்சதாளம், கொண்டி (கொடி) முதலியவை கஞ்சக் கருவிகள் ஆகும். பாடகனின் குரல் இசையானது மிடற்றுக் கருவி எனப்படும். இதனைப் பண்டைய பஞ்ச மரபு நூலும் குறிப்பிடுகின்றது. "தோற்கருவிகள், துளைக்கருவிகள், நரம்புக் கருவிகள், கஞ்சக் கருவிகள் எனப்படும். இந்நான்கு வகைக் கருவிகளும் சேர்த்து இசைக்கும் பொழுது இசையை மிடற்றினால் பாடுபவரின் ஒலியுடன் சேர்ந்து ஒலிக்கும் இசை 'பஞ்சமாசத்தம்' எனப்பட்டது."[11] என்று வாழ்வியல் களஞ்சியம் உரைக்கிறது. பஞ்சமாசத்தம் என்பதைப் பஞ்சகருவிகள் என்றும் கூறுகின்றனர்.

பெரியபுராணத்தில் இசைக்கருவிகளை ஐந்து வகையாகக் கூறுகிறார். இதனை,

> **"எண்ணிய ஓசை ஐந்தும்**
> **விசும்பிடை நிறைய எங்கும்"** **(பெரியபு. 215.1)**
> **"மேல் நிறைந்த ஐந்துபே**
> **ரிய ஒலியும் விரிஞ்சன் முதல்"** **(பெரியபு. 1698.2)**

**"மங்குல் வானின் மிசை ஐந்தும் முழங்கும்"** (பெரியபு. 245.2)

என்ற பாடலடிகளின் மூலம் இசைக்கருவிகளானது ஐந்து வகைப்படும் என்பதை அறியமுடிகின்றது.

**தோற்கருவிகளின் தோற்றம்**

விலங்குகளை வேட்டையாடி மாமிசத்தை மட்டும் உண்ட மனிதன், விலங்கின் தோலை அதன் பயனறியாது எறிந்தான். விலங்குகளால் அல்லது மனிதனால் வேட்டையாடப்பட்ட விலங்கின் தோல்கள் மரக்கிளைகளிலும் பாறைகளின் பள்ளங்களிலும் சிக்கிக் காய்ந்து கிடந்தன. இதில் பட்ட மரத்தின் கொம்புகளும் கற்களும் பேரொலி எழுப்புவதைக் கேட்டான். சுற்றிலும் இழுத்துக் கட்டப்பட்ட காய்ந்த விலங்கின் தோல் ஒலி எழுப்பும் என்பதை அறிந்த மனிதன் தோற்கருவிகளைத் தோற்றுவித்தான்.

"ஒரு ஈரக் களிமண் உருண்டையின் நடுவில் தோண்டிப் பள்ளம் செய்து அதனைத் தோலால் மூடித் தட்டினான். இவ்வாறு பறை கண்டுபிடித்தான். மூங்கற்குழாயினின்றும் குடத்தினின்றும் பானையினின்றும் உடைந்து விழுந்த வாயின் மேலே தோலை மூடி அடித்தான். மரக் கட்டையின் நடுவில் பள்ளம் தோண்டி அதன் மீது தோலால் மூடி வாசித்தான். வட்ட வளையங்களில் தோல் மூடி தம்பட்டை ஆக்கினான். பல நூறாண்டுகளாக வளர்ந்து வந்தன தோற்பறைகள்"[12] என்கிறார் வீ.ப.கா.சுந்தரம்.

**தோற்கருவிகள்**

பஞ்சகக் கருவிகளில் முதலாவதாக இடம்பெறுவது தோற்கருவிகள் ஆகும். தோற்கருவிகள் என்பன உள்ளே வெற்றிடத்துடன் உருளை, வட்டம், அரைவட்டம் போன்ற ஒரு பொருளின் மீது இழுத்துக்கட்டப்பட்ட தோலினைக் கைகள் அல்லது குச்சியால் தட்டி இசைக்கின்ற கருவிகள். "மரம் முதலியவற்றைக் குழலாகவும் கிண்ணமாகவும் உருளையாகவும் அமைத்து அதன் ஒரு புறத்திலோ இரு புறத்திலுமோ தோலால் விரித்துக்கட்டிக் கையாலும் சிறுகோல்களாலும் தட்டி தாள ஓசையைப் பெறும் கருவி தோற்கருவியாகும்."[13] என்கிறது இசைமருத்துவம் என்னும் நூல்.

தோற்கருவிகளின் பெயர்களைச் சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்குநல்லார் முப்பது வகையாக உரைக்கிறார். இதனை,

**"பேரிகை படக மிடக்கை யுடுக்கை**
**...**
**மிக்க நூலோர் விரித்துரைத் தனரே"**

**(சிலம்பு. 3:27 அடியார்க்கு நல்லார் உரை)**

என்ற பாடலில் 1. பேரிகை, 2. பாடகம், 3. இடக்கை, 4. உடுக்கை, 5. மத்தளம், 6. சல்லிகை, 7. கரடிகை, 8. திமிலை, 9. குடமுழா, 10. தக்கை, 11. கணப்பறை, 12. தமருகம், 13. தண்ணும்மை, 14. தடாரி, 15. அந்தரி, 16.முழவு, 17. சந்திரவளையம், 18. மொந்தை, 19. முரசு, 20. கண்விடுதூம்பு, 21. நிசாளம், 22. துடுமை, 23. சிறுபறை, 24. அடக்கம், 25. தகுணிசம், 26. விரலேறு, 27. பாகம், 28. உபாங்கம், 29. நாழிகைப்பறை, 30. துடி ஆகிய கருவிகள் அனைத்தும் தோலாற் செய்யப்பட்ட தோல் இசைக்கருவிகள் ஆகும்.

**தோற்கருவி வகைகள்**

தோற்கருவிகள் ஏழு வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை

1. வன்மைக் கருவிகள்,
2. மென்மைக் கருவிகள்,
3. சமக்கருவிகள்,
4. தலைக்கருவிகள்,
5. இடைக்கருவிகள்,
6. கடைக்கருவிகள்,
7. வீரக்கருவிகள்

ஆகும்.

**வன்மைக் கருவிகள்**

**"நிசாளந் துடுமை முரசே பேரிகை**
**பறையே யடக்கம் சிறுபறை மொந்தை**

**முறையே பெரும்பறை நாழிகைப் பறையொடு**

**துடியென வைத்துத் தொகுத்தனர் புலவர்"**[14]

என்ற செய்யுளில் நிசாளம், துடுமை, முரசு, பேரிகை, தேசி, திமிலை, குடமுழா, பாகம் ஆகிய கருவிகள் வன்மைக் கருவிகளாகக் கூறப்பட்டுள்ளன.

**மென்மைக்கருவிகள்**

**"தக்கை குடுக்கை தகுணிச்சம் தண்ணும்மை**

**மிக்க உடுக்கை விரலேறு பாங்கி**

**அந்தரி முழவொடு சந்திர வளையம்**

**மொந்தை மொழிந்த பைந்தொழிற் றடாரி**

**கண்விடு தும்பே தமருக மென்றிவை**

**மண்மிசை மென்மைக் கருவியாய் வைத்தே"**[15]

இச்செய்யுளில் தக்கை, குடுக்கை, தகுணிச்சம், தண்ணும்மை, உடுக்கை, பாங்கி, முழவு, சந்திர வளையம், மொந்தை, தடாரி, தூம்பு, தமருகம் ஆகியவை மென்மைக் கருவிகளாகும்.

**சமக்கருவிகள்**

**"மத்தளஞ் சல்லி படகங் கரடி**

**இத்திற நான்குஞ் சமமென மொழிப"**[16]

இச்செய்யுள் மத்தளம், சல்லி, படகம், கரடி போன்ற கருவிகளைச்சமக்கருவிகளாக உரைக்கின்றது.

**தலைக்கருவி**

**"மன்னியசீர் மத்தளஞ் சல்லி யிடக்கையுடன்**

**பின்னங் கரடிகைநற் பேரிகையுஞ் - சொன்ன**

**படகஞ் குடமுழவம் பாங்காயில் வேழும்**

**அடைவே முதற்கருவி யாம்"**[17]

என்ற செய்யுள் மத்தளம், சல்லி, இடக்கை, கரடிகை, பேரிகை, படகம், குடமுழவம் போன்ற கருவிகளை முதன்மைக் கருவியாக எடுத்துரைக்கிறது.

**இடைக்கருவிகள்**

> **“தண்ணும்மை தக்கை யுடுக்கை தகுணிச்சம்**
> **கண்விடு நூம்பு விரலேறு - வண்ணந்**
> **தமருகந் தடாரி சார்துடியு பாங்கி**
> **அமுதகுண் டலியந்த தரி”**[18]

இச்செய்யுளின் மூலம் தண்ணும்மை, தக்கை, உடுக்கை, தகுணிச்சம், கண்விடு தூம்பு, விரலேறு, தமருகம், தடாரி, துடி, உபாங்கி, அமுதகுண்டலி, அந்தரிமுழவு போன்றவை இடைக்கருவியாகக் கூறப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

**கடைக்கருவிகள்**

> **“பறையே பாகஞ் சிறுபறை யடக்கம்**
> **கறைவேற் கண்ணாங் கருவி”**[19]

என்ற செய்யுள் பறை, பாகம், சிறுபறை அடக்கம் போன்றவற்றைக் கடைக்கருவியாக உரைக்கிறது.

**வீரக்கருவிகள்**

> **“முரசே நிசாளந் திமிலை துடுமை**
> **யரசர்க் கெய்தும் பிறர்க்கல வென்ப”**[20]

என்ற செய்யுள் முரசு, நிசாளம், திமிலை, துடுமை ஆகியவற்றை வீரக்கருவியாக எடுத்துரைக்கிறது.

**பறை**

பறை தோற்கருவிகளுள் முதன்மையானது. இது பழமையான இசைக்கருவியாகும். “உலக இசைக்கருவிகளின் வரலாற்றில் தோற்கருவிகளே முதலில் கண்டுபிடிக்கப்பட்டன என்பது ஆராய்ச்சியாளரின் துணிபு. அதிலும் விலங்குகளை விரட்டவும், எச்சரிக்கை ஒலி எழுப்பவும், மாலை நேரக் கொண்டாட்டங்களுக்காகவும் முழக்கப்பட்ட பறைதான் முதன்முதலில் மனிதன் உருவாக்கிய ஆதி இசைக்கருவி பறை இசைத்த கலைஞர்கள் பறையர்கள் எனப்பட்டார்கள்.”[21] மக்கள் செய்த தொழிலைக் கொண்டு அவர்களின் சாதி முறைகள் பகுக்கப்பட்டுள்ளன. இதனை,

**“துடியன் பாணன் பறையன் கடம்பனென்று**
**இந்நான்கல்லது குடியும் இல்லை.”[22]**

என்னும் நூற்பா குறிப்பிடுகிறது.

சங்ககாலம் தொடங்கி இன்று வரை அதிக அளவு பயன்பட்டு வந்த இசைக்கருவி பறை. மன்னராட்சியில் மன்னர் போருக்குச் செல்லும் செய்திகளை அறிவித்தல், அரண்மனை நிகழ்வுகளை அறிவித்தல் போன்ற செய்திகளைப் பறை இசை எழுப்பி அறிவித்தனர். போருக்குச் செல்லும்போதும் பறை ஒலி எழுப்பிச் சென்றனர். பறையினை வாசிப்பவர் பறையறைவோன் எனப்பட்டார். பறை தோலால் ஆன மேளமாகும். “இது ஒருமுகத் தோற்கருவி. இதனை ஆதிமாந்தன் உடைந்த பானை, குடம் இவற்றின் வாயின் மேல் தோலை இழுத்துப் போர்த்திச் சுற்றிலும் கட்டிக் கொண்டு முழக்கத் தொடங்கினான். ஒருமுகப் பறை பின் இருமுகப் பறைகள், பன்முகப் பறைகள் தோன்றின. பறை என்பது முழங்கும் தோற்கருவிகட்குப் பொதுப் பெயர்”[23] என்கிறது தமிழிசைக் களஞ்சியம்.

பறை என்ற இசைக்கருவி செய்திகளை அறிவிக்கும் முறை குறித்து, தொல்காப்பியம்,

**“தெய்வம் உணவே மாமரம் புட்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப”[24]**

என்கிற நூற்பா உணர்த்துகிறது.

பழங்காலத்தில் தமிழர்களின் வாழ்வியல் நிகழ்வுகளை, தகவல்களைப் பிறர் அறிந்து கொள்வதற்குச் செய்தியைக் கொடுக்கும் ஊடகமாக இருந்துள்ளது பறை. பறையின் ஒலி பேரொலியாக இருக்கும். இதனால் பழஙகாலத்து மக்கள் காட்டு விலங்குகளிடமிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும் பறையைப் பயன்படுத்தியுள்ளர். மக்களுக்குக் கொண்டு சேர்க்கப்பட வேண்டிய செய்தியை ஒரே நேரத்தில் பலரையும் அடையச் செய்ய நல்ல வாய்ப்பாக அமையும். மாட்டுத் தோலைக் கட்டிப் பறையினை உருவாக்கி இசைத்த பின்னர் ஒலியின் அளவு அதிகரித்தது. இதனால்

தேய்மானங்களைத் தவிர்த்து வாசிக்கும் வகையில் பறையினைத் தீயில் வாட்டிப் பயன்படுத்தினர்.

பழம் பெரும் நாடாகிய காந்தாரம் என்னும் நாட்டில் நிலநடுக்கம் ஏற்பட்டு அகன்ற பாதாலத்தினிடத்தே வீழ்ந்து அழிவு ஏற்படும். இதுபோன்ற காலத்தில் மக்கள் அனைவரும் தமது பசுக்களையும் பிற விலங்குகளையும் அழைத்துச் சென்று இந்நகரினை விட்டு வெளியேறுக என்று பறையறைந்து செய்தியினை மக்களுக்கு அறிவித்துள்ளனர். இதனை,

**"பறையற் சாற்றி நிறையருந் தானையோ" (மணி.பீடிகை.9:26)**

எனும் அடிகளின் மூலமாக அறியமுடிகின்றது. இதேபோல் சிவநேசரின் மகளான பூம்பாவையைப் பாம்பு தீண்டி நஞ்சானது அவளின் உடல் முழுவதும் பரவிய நிலையில் நஞ்சை அகற்றிடும் வித்தையில் கைதேர்ந்த அறிஞர்கள், மந்திரம் செய்பவர், தியானம் செய்பவர், நஞ்சுதீர்க்கும் மருத்துவம் செய்பவர், மந்திரச் சிகிச்சை செய்பவர் ஆகியோரின் முயற்சியாலும் நஞ்சினை நீக்கமுடியா நிலையை எய்தினர். இந்நிலையை உணர்ந்த சிவநேசர் என் மகளின் நஞ்சை இறக்குவோர்க்கு எல்லையற்ற என் செல்வத்தை ஈவேன் எனப் பறை அடித்து அறிவித்தார். இதனை,

**"சிந்தை வெந்துயர் உறுசிவ நேசரும் தெளிந்து**

**...**

**அந்த மில்நிதிக் குவை எனப்பறை அறைவித்தார்"**

**(பெரியபு.2966)**

என்று பாடலின் வாயிலாகப் பறை, விரைவில் ஒரு செய்தியைப் பிறருக்கு அறிவிக்கும் ஊடகமாக இருந்துள்ளமை புலனாகுகிறது.

**பறையின் உறுப்புகள்**

ஆதனூரில் பறை அடிப்பதற்கு என்று தோட்டம் விடப்பட்டுள்ளது. அத்தோட்டத்தில் இருந்து வரும் மானிய வருவாயைக் கொண்டு தோல் இசைக்கருவிகள் செய்வதற்கான தோலும், வாரும் வாங்கி தோற் இசைக்கருவிகள் செய்துள்ளதை, (பெரியபு.1058) என்ற பாடலின் மூலமாக அறியமுடிகிறது.

**பறையின் வகைகள்**

பறையின் வகைகளாகத் தொண்டகப்பறை, அரிப்பறை, ஆறெறிப்பறை, உவகைப்பறை, சாப்பறை, சாக்காட்டுப்பறை, வெட்டியாண்பறை, பம்பைப்பறை, மீன்கோட்பறை, மருதநிலப்பறை, கல்லவட்டம், குரவைப்பறை, தடறு, கோட்பறை, பன்றிப்பறை, வெறியாட்டுப்பறை, சிறுபறை, கரடிப்பறை, சகடை, கும்பிகை ஆகிய பறை வகைகள் உள்ளன.

**ஆறெறிப்பறை**

பாலை நில மக்களின் தொழில் வழிப்பறி செய்தல். அதன் மூலம் ஈட்டும் பொருள் கொண்டு வாழ்க்கை நடத்தினர். பாலை நிலத்து மக்களான மறவர்கள் வழிப்பறி செய்யும் போது கொட்டும் பறை ஆறெறிப்பறை எனப்படும்.

மறவர்கள், கொற்றவை தெய்வத்திற்க்கு நேர்த்திக்கடன் செலுத்த மறவர்குல இளம் பெண் ஒருத்திக்குக் கொற்றவை போல் ஒப்பனை செய்து கொற்றவை முன் அப்பெண்ணை நிறுத்தும் போது ஆறெறிப் பறையினை இசைத்துள்ளனர். இதனை,

> **"ஆறெறி பறையுஞ் சூறைச் சின்னமும்**
> **கோடுங் குழலும் பீடுகெழு மணியும்**
> **கணங்கொண்டு துவைப்ப வணங்கு முன்னிறீஇ"**
>
> **(சிலம்பு.வேட்டு.40-42)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது.

**கிணைப்பறை**

"சிறு கோலால் இயக்கப்படும் ஒரு கண் பறை"[25] ஆகும்.

கிணைப்பறை - மருதப்பறை. மருத நிலத்து உழவர்கள் கிணைப்பறையை இசைத்து வயல்களில் ஆடிப்பாடி மகிழ்கின்றனர். இதனை,

> **"கிணைநிலைப் பொருநர் வைகறைப் பாணியும்"**
>
> **(சிலம்பு.புறஞ்சேரி.148)**

என்ற பாடலடி விளக்குகிறது.

**சாப்பறை**

சாப்பறை நெய்தல் ஓசை உடையது. உயிர்விடாது எஞ்சி வாழ்ந்திருப்போரின் பக்கத்தே இறப்பு உள்ளதாகும் என்பதை அறிவித்து அவர்களின் நெஞ்சத்தையும் நடுக்கமுறச் செய்கின்ற பறை சாப்பறை. இப்பறையானது இறப்பு போன்ற அமங்கல நிகழ்வுகளில் இசைக்கப்படுகின்றது. இதனை,

> **"எஞ்சியோர் மருங்கி னீமஞ் சாற்றி**
>
> **நெஞ்சு நடுக்குறூஉ நெய்த லோசையும்"** (மணி.சக்கரவாளக்.70-71)

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது.

**ஆகுளிப்பறை**

"ஆகுளி என்பது சிறிய பறை"[26] ஆகும்.

வேட்டைக்குச் செல்லும் வேடர்கள் இசைக்கும் கருவியாகச் சிறுமுகம் கொண்ட ஆகுளிப் பறை இருந்துள்ளதை, "பகைவர்களை வெல்லும் ஆயுதங்களும் அஞ்சாமையும் கடுஞ்சொற்களும் உடையவர்கள் வேடர்கள். அவர்கள் கூட்டம் இருக்குமிடத்தில் கொல், குத்து, எறி என்கிற ஓசைகள் கேட்கும். அதுவேயன்றி துடியோசை, கொம்பு ஓசை, சிறுபறையின் ஓசை ஆகிய ஓசைகளை வட அருவி ஓசை பெரிதாகக் கேட்கும்" (பெரியபு.654) என்றும், "ஊதுகொம்புகள் முழங்கவும் சிறிய கண்ணையுடைய சிறுபறைகள் ஒலிக்கவும் பம்பை அடிக்கப்படவும் வேடர்கள் திரண்டு கைதட்டி ஓசை எழுப்பவும் திரண்டெழுந்த வேடர் கூட்டம் திண்ணனார் இரண்டு பக்கங்களிலும் சேர்ந்து சென்றது" (பெரியபு.721) என்றும் கூறும் பெரியபுராண பாடலடிகளில் ஆகுளிப்பறை சிறுபறை என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளமை புலனாகிறது.

மேலும் போருக்குச் சொல்லும் போது ஆகுளிப்பறையை இசைத்துப் போர்க்குச் சென்றுள்ளனர். இதனை,

> **"முரசு மாமுரு டும்முரல் சங்கமும்**
>
> **உரைசெய் காளமு மாகுளி யோசையும்"** (கம்ப.யுத்த..997:1-2)

என்றும்,

**“சங்கொலி வயிரி னோசை யாகுளி தழங்கு காளம்”**

**(கம்ப.யுத்த. 2399:1)**

என்றும் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

**சல்லரிப்பறை**

சல்லரிப்பறை என்பது “ஒரு வாய் திறந்த ஒருமுகப்பறை, ‘சல்,சல்’ என ஒலித்தலால் பெற்ற ஓசையடிப் பெயர்”[27] என்கிறது மம்மது தமிழிசைப் பேரகராதி. போருக்குச் செல்லும் வீரர்கள் சல்லரிப் பறையினை இசைத்துப் போர்க்குச் சென்றுள்ளனர். இதனை,

**“வெங்குரல் பம்பை கண்டை**

**வியன்துடி திமிலை தட்டி” (பெரியபு.581.2)**

பாடலடிகள் விளக்குகின்றன. இப்பாடலில் சல்லரிப்பறை என்பதற்குத் திமிலை என்னும் சொல் கையாளப்பட்டுள்ளது.

**கரடிப்பறை**

கரடிப்பறை என்பது காரணப்பெயர். கரடி கத்துதல் போன்று ஒலி எழுப்புவதனால் இப்பறைக்குக் கரடிப்பறை எனப் பெயர் வந்தது. போருக்குச் செல்லும் போர் வீரர்கள் கரடிப் பறையினை இசைத்துப் போருக்குச் சென்றுள்ளனர். இதனை,

**“வெங்குரல் பம்பை கண்டை**

**வியன்துடி திமிலை தட்டி” (பெரியபு.581.2)**

என்ற பாடல் விளக்குகிறது. இவ்வடிகளிலுள்ள தட்டி எனும் சொல் கரடிப்பறையைக் குறிப்பதாகும்.

**படகம்**

சீர்காழி ஊரின் பெருமையைக் கூறுமிடத்துப் ‘படகம்’ என்னும் ஒரு கண் பறையானது இயக்குவோர் இன்றி காற்றின் தாக்கத்தால் தாமே ஒலியை எழுப்புகின்றது என்றுரைக்கிறார் சேக்கிழார். இதனை,

**“சங்கபட கம்கருவி தாரைமுதல் ஆன**

**எங்கும் இயற்றுபவர் இன்றியும் இயம்பும்” (பெரிய.1936:2-3)**

என்ற பாடலடிகளின் மூலமாக அறிய இயல்கிறது. மேலும் திருஞானசம்மந்தரை வழி அனுப்புதல் நிகழ்வின் போது படகத்தினை இசைத்துள்ளதை, 'மேகம் போலச் சங்கும் படகமும் பேரிகையும், தாரையும் எக்காளமும் தாளமும் ஒலித்தன கொடியாடைகள் விண்ணைத் துழாவின' (பெரியபு.2523) என்ற பாடற் குறிப்புகளின் வாயிலாக அறியமுடிகிறது.

**தொண்டகப்பறை**

முருகனை வழிபடும் குறிஞ்சி நில மக்கள் இசைக்கும் பறை தொண்டகப்பறை. கண்ணகிக்குக் கோவில் எடுத்து வழிபடுங்கள் என்ற செய்தியை அறிவிக்கத் தொண்டகப் பறையை இசைத்துள்ளனர். இதை,

**"தொண்டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்"**

**(சிலம்பு.குன்றக்.16)**

என்ற பாடலடிகள் சுட்டும்.

**சிறுபறை**

சிறுபறை வன்மைக் கருவி வகையைச் சார்ந்ததாகும். இப்பறையைக் கடைக்கருவி என்றும், புறப்புற முழவு என்றும் வகைப்படுத்தப்படுகின்றன. களி, சாத்தன், காடுகள் ஆகிய கடவுளர் மூவர்க்கும் இசைக்கப்படுவனவாகக் கூறப்படும் கருவிகளுள் சிறுபறையும் ஒன்றாகும். என்ற மங்கல நிகழ்வினை அறிவிக்கச் சிறுபறையை இசைத்துள்ளனர். இதனை,

**"தொண்டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்"**

**(சிலம்பு.குன்றக்.16)**

என்ற பாடலடிகள் விளக்கும். கும்பிகை 'பறை வகைகளுள் ஒன்று' சகடை 'வட்டமானப் பறை' ஆகும். இவ்விரு பறைகளையும் போருக்குச் செல்லும் போர் வீரர்கள் இசைத்துச் சென்றுள்ளதை,

**"கும்பிகை திமிலை செண்டை குறடுமாப் பேரி கொட்டும்**
**...**
**அம்பலி கணுவை யூமை சகடையோ டார்த்த வன்றே"**
**(கம்ப.யுத்த. 2397)**

என்ற பாடலின் வழியாக அறியமுடிகின்றது.

**பறை உவமையாக இடம் பெறல்**

உவமையானது "கவிஞர் தாம் கூறக் கருதிய பொருளை அதன் தன்மை கொண்ட மற்றொரு பொருளோடு உவமஉருபுகள் வெளிப்படையாக வரும்படி ஒப்பிட்டுக் கூறுவது உவமையணி எனப்படும். அதாவது உவமை ஒரு வாக்கியமாகவும் நிற்க, அவற்றிற்கிடையே 'போல' என்ற பொருள் தரும் உவமஉருபுகள் வெளிப்படையாக வரவது உவமையணி ஆகும்."[28] என்று பொன்.ராஜன்பாபு உரைக்கிறார்.

பறையினைக் குறுந்தடி கொண்டு இசைக்கின்றனர். இக் குறுந்தடிக்கு நாவும், பறைக்கு வாயும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதை,

**"நாக்கடிப் பாக வாய்ப்பறை யறையினும்**

**யாப்பறை மாக்க ளியல்பிற் கொள்ளார்"**

**(சிலம்பு.ஊர்காண்.29-30)**

எனும் பாடலடிகளின் மூலமாக அறியமுடிகின்றது.

மலைகளில் இருந்து விழுகின்ற அருவி நீரின் ஓசைக்குப் பறையின் ஓசையானது உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதை,

**"பறையிசை யருவிப் பயங்கெழு மோதையும்"**

**(சிலம்பு.காட்சி.28)**

எனும் அடியின் மூலம் அறியமுடிகிறது.

தன் கன்றினை இழந்த தாய்ப்பசு கலங்கி சோழனின் அரண்மனை வாயிலின் கண் சென்று அங்குப் பொன்னினால் செய்யப்பட்ட ஆராய்ச்சி மணியினைத் தன் கொம்பினால் ஒலிக்கச் செய்தது (பெரியபு.112). இம்மணியோசையின் ஒலியைப் பழிப்பறையின் ஒலிக்கு உவமையாகச் சேக்கிழார் குறிப்பிடுகிறார். இதனை,

**"பழிப்பறை முழக்கோ ஆர்க்கும்" (பெரியபு.113.1)**

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

மிதலை நகரில் மாலைக்காலப் பறவையொலிக்குப் பறையொலியானது உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“மீதறை பறவையாம் பறையுங் கீழ்விளி” (கம்ப.பால.625:1)**

எனும் பாடலடி விளக்குகிறது.

போர்க்களத்தில் முழங்குகின்ற யானையின் முழக்கத்திற்குப் பறையின் முழக்கம் உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“முழங்கின பெரும்பணை மூரி மால்கரி” (கம்ப.ஆரணிய.478:1)**

எனும் அடியும், வானிலிருந்து மழை பொழியும் ஓசைக்குப் பறையின் ஓசை உவமையாகக் கூறப்பட்டுள்ளதனை,

**“பாணிள மிஞறாகப் படுமழை பணையாக”**

**(கம்ப.அயோத்தி.705:1)**

எனும் அடியும், ஆகளிப்பறையின் ஓசைக்குக் கடலில் இருந்து வரும் ஓசை உவமையாகக் கூறியுள்ளதை,

**“பேரி யங்கள் முருடுஅகுளி பெட்டும்**

**தூரி யங்கடலி னின்று துவைப்ப” (கம்ப.யுத்த.816:3--4)**

எனும் பாடலடிகளும் விளக்குகின்றன.

பறையின் வாய்த்தொலின் நடுப்பகுதியில் கருப்பு நிற மண் பூசப்பட்டிருக்கும். இதனைப் பறையின் கண் என்று அழைப்பர். இக்கண்ணுடைய பறையைப் பெரிய கண்ணுடைய பெண் பேயிக்கு உவமையாகக் கூறியுள்ளதை,

**“பறைக்கட் பேய்மகள் பாணிக் காடப்” (சிலம்பு.கால்கோட்.208)**

என்ற பாவடியின் மூலம் அறியமுடிகின்றது.

**பறை ஒலியின் தன்மை**

அசுணம் என்ற இசையறி விலங்கு பறையொலியினைக் கேட்டுத் துன்புறும் என்பதை,

**“நறைய டுத்த வசுணநன் மாச்செவிப்**

**பறை படுத்தது போலுமென் பாவரோ” (கம்ப.பால.7:3-4)**

என்ற பாவடிகளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது. மேலும் பறையொலியானது அச்சத்தைக் கொடுக்கக் கூடியது என்பதை வாலி வதைப்படலத்தில், வாலி இராமனது வில்லில் தாக்கப்பட்டு இறக்கும்

தருவாயில் வாலியைக் குறித்து அங்கதன் புலம்பும் போது இராவணன் வாலியை நினைக்கும் போது அச்சத்தால் இராவணன் உள்ளம் படபடக்கும் இனி அந்த அச்சத்தை இராவனுக்கு யார் தருவார் எனக் கூறிப் புலம்பினான். இதனை,

**“பறையடிக் கின்ற தந்தப் பயமறப் பறந்த தன்றே”**

**(கம்ப.கிட்கிந்த.388:4)**

எனும் பாடலின் வாயிலாகப் பறையின் இசை அச்சத்தைக் கொடுக்கக் கூடியது என்பதையும், இராவணன் உள்ளம் படபடக்கும் ஒலிக்குப் பறையின் ஒலி உவமையாகக் கூறப்பட்டுள்ளதையும் அறியமுடிகின்றது.

**குறுந்தடி**

நேரான குறுந்தடி கொண்டு பறையானது அடித்து இசை எழுப்பப்படும் என்பதை,

**“மூக்கிற் றாக்குறு மூரி நந்துநேர்**

**தாக்கிற் றாக்குறும் பறையுந் தண்ணும்மை” (கம்ப.பால.89:1-2)**

என்ற பாடலடியின் மூலம் அறிய இயல்கிறது.

**முரசு**

முரசு என்பது தோற்கருவி. இது ஒருமுகத் தோற்கருவி. அளவில் பெரிய இசைக்கருவியாகவும் காணப்படுகிறது. இக்கருவி முதலில் அரசு நிகழ்ச்சிகளுக்கு மட்டும் பயன்படுத்தப்பட்டது. பிறகு அரசன், கோவில் என மக்களால் வணங்கப்படும் இடங்களில் இம்முரசு ஒலிக்கப்பட்டுள்ளது. போரில் தோற்ற பகை மன்னனின் காவல் மரத்தை வெட்டி அதில் செய்துள்ளனர். அக்காலத்தில் முரசிற்குப் பலியிட்டு வழிபட்டுள்ளனர். இதனைப் பெருமுரசு, சிறுமுரசு என்று இருவகையாகவும் கூறுவர். முரசினை வாசிப்பவர் முரசறைவோன் எனப்பட்டார். போருக்குச் செல்லும் முன் முரசினை அறைந்து தானைகளை வழி நடத்திச் சென்றனர். மங்கல இசைக் கருவியாகவும் முரசு விளங்கிற்று. கோவில்கமளம், திருமண நிகழ்வுகளிலும் முரசு இசைக்கப்பட்டுள்ளது.

முரசு என்பது “மேளம், உத்திரட்டாதி நாள், பல்லின் ஈறு, பேரிகை, வாச்சியப் பொது”[29] என்று பொருள் கூறுகிறது கழகத் தமிழ் அகராதி.

“முரசு பெரிய கண்ணையுடையது. ஒலிக்கும் இடம் அகன்றது. உரல் போன்ற வட்டமான வாயையுடையது. மயிர் சீவாது போர்த்தப்பட்ட கண்ணையுடையது. குறுந்தடியால் தாக்கிப் புடைத்து ஒலிக்கப்படும். இழுமென்னும் ஓசையுடையது; இன்னிசையுடையதும் இடி போலும் ஓசையுடையதும் ஆகும்.”[30] என்று முரசின் வடிவம் பற்றி தோற்கருவிகள் என்னும் நூல் விவரிக்கிறது.

தொல்காப்பியத்தில் அரசர்களுக்கு உரியவையாக முரசினைக் கூறியள்ளார் தொல்காப்பியர். இதனை,

**“படையும் கொடியும், குடையும் முரசும்”**[31]

எனும் நூற்பா விளக்கும். இதேபோல்,

**“அதிர்ந்தெழு முரசுடை யரசர் கோமகன்”**

**(கம்ப.பால.பா.250:2)**

**“மண்ணுறு முரசுடை மன்னர் மாலையில்”**

**(கம்ப.அயோத்திய.பா.157:3)**

**“முரசுடைத் தானை மன்னர்”** **(பெரிய.4104:2)**

என்ற பாடலடிகளிலும் முரசானது அரசருக்கு உரியவையாகக் கூறியுள்ளதை அறியமுடிகின்றது.

**முரசின் பயன்பாடு**

பண்டைத் தமிழர்கள் போருக்கென்று சில அறநெறிக்கோட்பாடுகளை வகுத்துக் கொண்டு, போரினை மேற்கொண்டுள்ளனர். போர் தொடங்கும் போது போர் தொடங்கிய செய்தியினை அனைத்து வீரர்களும் அறிந்து கொள்ள முரசறைந்துள்ளனர். போர் தொடங்கும் போது முரசினை இசைத்துள்ளனர் என்பதனை,

**“அறைந்த மாமுர சானைப் பதாகையால்”**

**(கம்ப.யுத்த.பா.978:1)**

எனும் பாடல் விளக்குகிறது.

இதேபோன்று போர் நிறைவடைந்த நிலையில் வெற்றி முரசு அறையப்பட்டு உள்ளதை,

**“வெ∴கிய புகழினால் தன் வென்றி வெம்முரசம் ஆர்ப்ப”**[32]

என்ற பாடலடிகள் விளக்குகிறது.

**முரசு வகைகள்**

முரசினை அதன் வடிவம் கொண்டு பெருமுரசு, சிறுமுரசு எனப் பிரிப்பர். முரசின் பயன்பாடு கருதி மூன்று வகையாகப் பிரிப்பர். அவை,

1. வீர முரசு
2. தியாக முரசு
3. நியாய முரசு

என்பனவாகும்.

**வீர முரசு**

இம்முரசு போர்க்களத்தில் பயன்படுத்தப்படுவது. போர் தொடங்கும் முன்னரும், போர் நடந்து கொண்டிருக்கும் போதும், போர் நிறைவுற்ற பின்னரும் இம்முரசினை இசைத்தல் பண்டைத் தமிழரின் மரபு. இம் முரசினை இசைத்தலின் போது அதிலிருந்து வெளிவரும் ஒலியானது வீரர்களுக்கு வீர உணர்வினைத் தோற்றுவிப்பதாக இருக்கும்.

**தியாக முரசு**

பொருட்களை மற்றவர்களுக்குக் கொடையாகக் கொடுக்க விரும்புபவர்கள், வறியவர்களை வரவேற்புச் செய்யும் போது இம்முரசு இசைக்கப்படும்.

**நியாய முரசு**

குற்றங்கள் களைய நீதி வழங்கும் காலத்தில், நீதி கேட்க விரும்புவர்களை அழைக்க அமைக்கப்பட்டது நியாய முரசு.

பகை அரசனுடன் போரிட்டுப் போரில் வெற்றி பெற்று அவனைப் புறமுதுகிட்டு ஓடச் செய்து அவனது வெண்கொற்றக் குடையையும், தலைக்கோலினையும் வெற்றி பெற்ற மன்னனின் பட்டத்து யானையின்

மீதேற்றி ஊர்வலமாக வீதியில் உலா வரும்போது வீரமுரசு, தியாகமுரசு, கொடைமுரசு எனப்படும் மூவகை முரசினையும் இசைத்துள்ளனர். இதனை,

**"பேரிசை மன்னர் பெயர்புறத் தெடுத்த**
**...**
**முரசெழுந் தியம்பப் பல்லிய மார்ப்ப"**
**(சிலம்பு.அரங்கேற்று.114-125)**

என்ற பாடலடிகளின் வாயிலாக அறியமுடிகின்றது.

**வழிபாட்டில் முரசு**

புகார் நகரத்து வீரமறவர்கள் நரபலிபீடத்தில் அரசன் நலம் பெற வேண்டி உயிர்ப்பலி உண்ணும் பூதத்திற்கு நரபலி கொடுக்கும் வழிபாட்டில் மயிர்க்கண் முரசத்தினை இசைத்துள்ளனர். இதனை,

**"வெற்றி வேந்தன் கொற்றங் கொள்கென**
**..**
**மயிர்க்கண் முரசொடு வான்பலி யூட்டி" (சிலம்பு.இந்திர.85-88)**

என்ற பாடலடிகள் மூலம் அறியமுடிகின்றது.

**திருமண நிகழ்வில் முரசு**

திருமண நிகழ்வில் திருமணத்திற்கு முந்தைய நாளில் மணமகனான நம்பியாருரரைத் மேடையில் நிறுத்தி பொன்னான நாணைக் காப்பாகக் கட்டினர். இம்மங்கல நிகழ்வில் முரசு இசைக்கப்பட்டுள்ளது என்பதை,

**"பணைமுரசு இயம்ப வாழ்த்திப்**
**பைம்பொன் நாண் காப்புச் சேர்ந்தார்" (பெரியபு.158:4)**

என்ற அடிகள் விளக்குகிறது. இதேபோல் புனிதவதியாரைத் திருமணம் செய்ய பரந்தாமன் திருமணக் கோலம் புனைந்து எழில் மிகு அழகோடு மணமுரசு இசைத்துத் திருமணத்திற்குச் சென்றார். இதனை,

**"பணை முரசம் எழுந்தார்ப்பக்**
**காரைக்கால் பதி புகுந்தார்" (பெரியபு.1731:3-4)**

என்ற பாடலடிகள் புலப்படுத்துகிறது.

திருமணத்திற்க்கு ஏழு நாட்களுக்கு முன்னதாக மணமகள் இல்லத்தார்கள் பாலிகை மீது முளை நிறைத்தல் என்னும் முளைப்பாலிகை இடுதல் எனும் மங்கல நிகழ்வில் மங்கல முரசினை இசைத்துள்ளனர். இதை,

**“பன்மணிமங் கலமுரசம்**

**பல்லியங்கள் நிறைந்து ஆர்ப்பப்” (பெரியபு.3075:3)**

என்ற பாடலடிகள் வாயிலாக அறியமுடிகின்றது.

**வரவேற்பு நிகழ்வில் முரசு**

அரச குமாரன் மாடவீதியில் உலா வரும்போது அவரை வரவேற்க முரசினை இசைந்துள்ளனர். இதை,

**“முரசொடு சங்கம் ஆர்ப்ப**

**முழங்கொலி ஒருபால் வென்றி” (பெரிய.106:3)**

என்ற பாடல் குறிப்பிடுகிறது.

**வழி அனுப்பும் நிகழ்வில் முரசு**

திருஞானசம்பந்தர் திருக்கருப்பறியலூர் தலங்களையடைந்து திருப்பதிகம் பாடி சிவபெருமானை வழிபட்ட பின்னர் சீர்காழியை நோக்கிச் செல்லும்போது திருக்கருப்பறியலூர் அந்தணர்கள் முரசினை இசைக்கச் செய்து திருஞானசம்பந்தரை வழி அனுப்பியுள்ளனர். இதனை,

**“எண்ணில் முரசு இரங்கிஎழப் பணிலம் ஆர்ப்ப**

**இலங்கியகா ளம்சின்னம் எங்கும் ஊத” (பெரியபு.2159:2)**

எனும் பாடல் புலப்படுத்துகிறது.

**முரசறைவோர்**

முரசு அறைவோரை ‘வள்ளுவர்’ என்ற பெயரால் குறிப்பிட்டதை,

**“வழுவில் வள்ளுவர் துறை தொறும் விளித்தலும்**

**வல்லைக்”(கம்ப.யுத்த.3261:2)**

**“யானையின் வள்ளுவர் முரச மெற்றினார்” (கம்ப.யுத்த.4187:4)**

என்ற பாடல்களின் மூலமாக அறிய இயல்கிறது.

**முரசு உவமையாகப் பயன்படல்**

பறவைகளின் ஒலிக்கு முரசின் ஒலியானது உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“புள்வாய் முரசமொடு பொறிமயிர் வாரணத்து”**

**(சிலம்பு.அந்தி.77)**

என்ற பாடலடி விளக்குகின்றது. கடலின் ஓசைக்கு முரசின் ஓசையானது உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“மீனீர் வேலை முரசியம்ப விண்ணோ ரேத்த மண்**

**ணிறைஞ்சத்” (கம்ப.அயோத்தி.616:1)**

என்ற பாடலடி புலப்படுத்துகிறது.

முரசின் ஓசைக்கு மேகத்தின் இடி ஓசை உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**“குரிசிலுந் தம்பியைக் கூவிக் கொண்டலின்**

**முரசறைந் திந்நகர் முறைமை வேந்தனைத்”**

**(கம்ப.அயோத்.972:1-2)**

என்ற பாடலடிகளின் மூலமாக அறியமுடிகின்றது.

**முழவு**

முழவு ஒலிக்கப்படும் போது நாற்புறமும் அதன் ஓசை முழங்குவதால் முழவு எனப் பெயர் பெற்றது. தோற்கருவிகள் அனைத்தையும் முழவு என்றும் கூறுவர். முழவு என்பது தோற்கருவிகளின் பொதுப்பெயர் ஆகும். இது சரிபாதியாக இருக்கும் பலாப்பழம் போன்ற வடிவமுடையது.

முழவு என்பதற்குப் “பறைப்பொது, முரசு, பால்கறக்கும் கலம், குடமுழா, தம்பட்டம்”[33] என்ற பொருள் விளக்கம் தருகிறது கழகத் தமிழ் அகராதி.

முழவானது நாட்டிய அரங்கில் நடனத்திற்குத் தகுந்தாற் போன்று இசைக்கப்படும். நடனத்திற்கு முழவு இசைக்கப்பட்டுள்ளமையை,

**“முழவு அறாதன மொய்குழ லியர் நட அரங்கம்”**

**(பெரியபு.3162:2)**

**“மண்ணும் முழவின்னொலி மங்கையர் பாட லோதை”**

**(கம்ப.பால.970:1)**

என்ற பாடலடிகளின் மூலமாக அறியமுடிகின்றது. மேலும் ஆகாயமாகிய நாட்டிய அரங்கில் சிவபிரான் முழவின் ஓசைக்கு நடனம் ஆடியள்ளதை,

**"மண்ணுமணி முழவதிர வானங்கி னடம் புரிவா ளிரவியான**
**கண்ணுதல்வா னவன்கனகச் சடை விரிந்தாலெனவிரிந்த**
**கதிர்க ளெல்லாம்"** **(கம்ப.பால.715:3-4)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

**மண் கணை முழவு**

செங்குட்டுவனின் பட்டத்து அரசியான வேண்மாள் என்னும் மங்கலம் கொண்ட கோப்பொருந்தேவி திங்களின் அழகைக் காண நிலா முற்றம் வந்த போது மண் பூசிய முழவு இசைந்துள்ளனர். இதனை,

**"மண்கணை முழவும் வணர்கோட் டியாழும்"**
**(சிலம்பு.நடுகற்.55)**

என்ற பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

**திருமண ஊர்வலத்தில் முழவு**

திருஞானசம்பந்தர் திருமண ஊர்வலத்தில் சிவபிரானை வணங்கி முத்துப்பல்லாக்கின் மீது ஏறி அமர்ந்து ஊர்வலம் செல்லும் போது முழவானது இசைக்கப்பட்டுள்ளமையை,

**"முழவொலி எடுப்ப முத்தின்**
**சிவிகை மேற்கொண்டபோது"** **(பெரியபு.3120:4)**

என்ற பாடல்கள் விளக்குகிறது.

**முழவு உவமையாகக் கூறப்பட்டுள்ள இடங்கள்**

முழவின் ஓசைக்கு அருவியின் ஓசையானது உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"துஞ்சா முழவி னருவி யொலிக்கும்"** **(சிலம்பு.காட்சி.6)**

**"அரம்பையர் ஆடல் முழவுடன் மருங்கில்**
**அருவிகள் எதிர்எதிர் முழங்க"** **(பெரியபு.19:1)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

முழவின் ஓசையானது மேகத்தின் முழக்கத்திற்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**“முழவு கார்கொள முல்லைகள்**

**முகைப்பன முல்லை” (பெரியபு.1092.2)**

என்ற பாடலடிகள் விளக்கும்.

மிதலை நாட்டுச் சோலைகளில் மதகுகளினால் நீர் பாய்ச்சும் போது உண்டாகும் ஒலிக்கும் முழவின் ஒலி உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“வரம்பில் வான்சிறை மதகுகண் முழவொலி வழங்க”**

**(கம்ப.பால.539:1)**

என்ற பாடலடி உணர்த்துகிறது. மேலும் தசரத மன்னனின் திரண்ட தோளுக்கு முழவு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**“மொய்பெறாத் தினவுறு முழவுத் தோளினான்”**

**(கம்ப.பால.180:2)**

என்ற பாடலடி விளக்கும்.

**முழவு ஓசையின் தன்மை**

மிதிலை நாட்டு நடன அரங்கில் மங்கையர் ஆடும்போது வயிரியர் முழவு இசைக்கின்றனர். இவர்கள் இசைக்கும் முழவின் ஒலியைக் கேட்டு எருமைகள் அஞ்சி ஓடிச் சென்று ஓடைகளில் பாய்ந்து நீரைக் கலக்குகின்றன. இதனை,

**“முழக்கு மின்னிசை வெருவியள மோட்டிள மேதி”**

**(கம்ப.பால.544:3)**

என்ற பாடலடிகள் விளக்குகிறது. இதிலிருந்து முழவின் ஓசைக்கு எருதுகள் அஞ்சும் தன்மையினைக் காணமுடிகிறது.

**துடி**

பாலை நிலத்திற்குரிய பறையின் பெயர் துடி. துடிக்கு உடுக்கை என்ற மற்றொரு பெயரும் உண்டு. இது இருமுகத் தோற் கருவியாகும். வைரமேறிய மரத்தில் செய்யப்படும் இக்கருவி கருப்பு நிறத்தில் தோற்றமளிக்கும். இக்கருவி இன்றும் கோவில்களில் இசைக்கப்படுவதுண்டு. இது மிக விரைந்து இசைக்கப்படும் கருவியாகும். துடி எனப்படும் இவ் உடுக்கை இடை சிறுத்தும், இரு ஓரங்களும் பெருத்தும் மணல் கடிகாரம் போன்ற அமைப்பில்

காணப்படும். இவ்வுடுக்கையை உடுக்கை இடை என்று பெண்களின் இடைக்கு உவமையாகக் கூறுவர்.

துடியின் அமைப்பும், ஒலிப்பும் பற்றி “நடு சிறுத்தும் ஓரங்கள் பெருத்தும் இருக்கும். இதன் உடல் மண்ணியாலாவது. மரத்தினாலாவது, பித்தளையினாலாவது செய்யப்பட்டிருக்கும் தோல்களின் சுற்றுப்பக்கத்தில் சிறு துவாரங்கள் இருக்கும். இவைகளின் மூலமாக ஒரு நீண்ட கயிறு இருமுகங்களினின்றும் மாறிமாறி இறுகப்பிண்ணப்பட்டிருக்கும். இந்தக் கயிற்றைச் சுற்றி நடுவில் ஒரு நாடா இருக்கும். வாசிப்பவர் இந்த நாடாவை அழுத்துவதினால் முகங்களின் சுருதி அதிகமாகி, ஜாருகமகம் போன்ற ஒரு நாதம் எழுப்பும்.”[34] என்று வாழ்வியல் களஞ்சியம் கூறுகின்றது. உடுக்கையின் இசை கேட்பதற்கு இனிமையாக இருக்கும். இன்றும் சிற்றூர் தேவதைகளின் கோவில்களில் இக்கருவி இசைக்கப்படுவதைக் கேட்கலாம்.

துடி என்பதற்கு “அகில், இசக்கி, உடுக்கை, உதடு, ஏலம், காலதசப்பிரமாணத்தொன்று, அதுநிமிடம், எட்டுக்கொண்டது, கால நுட்பம், குமரன் ஆடல், குறிஞ்சிப்பறை, கூதாரிஞ் சோறு, ஏழு கன்னிகைகள் ஆடல், துடியென்னேவல், பாலை நிலப்பறை, மேன்மை, வலி, வேகம், தூதுளை, சிறுமை”[35] எனக் கழகத்தமிழ் அகராதி பொருள் தருகிறது.

“தோற்கருவிகளின் ஓசையைக் கருத்தில் கொண்டு உண்மை, தொன்மை, மென்மை என்று பகுப்பர். உடுக்கை மென்மை இனவகையைச் சார்ந்ததாகும்”[36] என்கிறார் சே.பிரேமா.

துடி என்பதற்கு, “பாலை நிலப்பறை. இருமுகத்தோற்கருவி இதன் வலப்பக்கம் மட்டுமே முழக்கப்படுவது, மிக விரைந்து முழக்கப்படுவது, இடை சுருங்கிய பெரும்பறை”[37] என்கிறது. தமிழிசைப் பேரகராதி.

**துடி கால அளவு**

“தாள சமுத்திரமும் தாளதீபிகையும் இசைமரபு முதலிய வேறு நூற்களும் துடிக்கு ஒன்றிலும் குறைந்த கால அளவு கூறியுள்ளன. ஆனால் ஓர் எண்ணிக்கை அளவைத் ‘துடி’ எனப் பஞ்சமரபு குறித்துள்ளது. இம்முரண்பாடு ஆராய்ந்து அறிந்து திட்டம் செய்து கொள்ளற்குரியது.

துரிதத்திற்கு அரை என்று பஞ்சமரபு குறிப்பிட்டள்ளது. தாள சமுத்திரமும் ஓரிடத்தில் அவ்வாறே குறித்துள்ளது. அது நாலனலகு அளவில் பாதியாகிய இரண்டு எண்ணிக்கைக் காலத்தது: ‘துடி அளவு கால்’ என்று பஞ்சமரபு குறிப்பிட்டதால்-நாலன் அலகில் கால் ஆகிய ஓர் எண்ணிக்கைக் காலத்ததுவே ‘துடி’ எனத் தெளியலாம். மேலும் பஞ்சமரபுப் பாடல் சிலவற்றுள் -துரிதத்திற்கு முந்திய உறுப்பாகவே துடியைக் குறித்து வரிசைப் படுத்துவதால் அநுதுரிதம் என்பதுவே துடி எனத் தெள்ளத் தெளிய அறியலாம்.”[38] என்று துடியின் கால அளவிற்கான வரையறையை தமிழிசையியல் என்னும் நூலில் வீ.க.பா.சுந்தரம் எடுத்துரைக்கிறார்.

போர் தெய்வமான கொற்றவையை வணங்கும் போது துடி கொட்டி வழிபட்டனர் என்பதை,

> **“மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த**
> **கொற்றவை நிலையும் அகத்திணைப் புறனே”[39]**

என்ற தொல்காப்பிய நூற்பா விளக்குகின்றது. சிலப்பதிகாரத்தில் போர் மறவர்கள் வெற்றிக்கான நேர்த்திக்கடன் வழிபாட்டில் கொற்றவை தெய்வத்தை வணங்கி வெற்றிக்கு விலையாக வீரபலியிடல் நிகழ்வில் துடியினை இசைத்துள்ளனர். இதனை,

> **“துடியொடு சிறுபறை வயிரொடு துவைசெய**
> **...**
> **உருளுஞ் சகட முதைத்தருள் செய்குவாய்”**
> **(சிலம்பு.வேட்டு.20.23)**

என்ற பாடல்களின் மூலமாக அறிய முடிகின்றது. இதிலிருந்து துடியானது ‘துண்’ என்ற ஒலியை எழுப்பும் என்பதை அறியமுடிகின்றது.

போர்க் களத்தில் துடியானது இசைக்கப்பட்டுள்ளதை,

> **“வெருவர எருவை நெருங்கின**
> **விசி அறு துடிகள் புரண்டன” (பெரியபு.626:3)**

என்ற பாடலடியின் மூலமாக அறியமுடிகின்றது.

வேட்டுவ மக்களின் வாழ்வியலை நோக்கும் போது அவர்களின் இன்றியமையாத இசைக்கருவியாகத் துடி உள்ளமை புலப்படுகின்றது.

வேட்டுவர் குலம் தலைத்தோங்கும் வகையில் நாகன் மனைவி தத்தை, குழந்தை பெற்றவுடன் வானத்திலிருந்து தேவர்கள் மலர் மழை பொழிந்து வேட்டுவர்களின் இசைக்கருவியான துடியினை இசைத்துள்ளனர் என்பதை,

**"அரிக் குறுந்துடியே அன்றி**

**அமரர்துந் துபியும் ஆர்த்த" (பெரியபு.663:4)**

என்ற பாடலடியின் மூலமாக அறியமுடிகின்றது.

வேடர்களின் தலைவனான நாகன், தனது மகனான திண்ணன் வில்லினை ஏந்தி நலம் பெருகும் கல்வியினைப் பெறப் போகிறான் என்ற செய்தியைத் துடிப்பறை இசைத்துக் கூறியுள்ளான் என்பதை,

**"ஆடியல் துடியும் சாற்றி**

**அறைந்தபேர் ஒசை கேட்டு" (பெரியபு.678:3)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது. இப்பாடலின் மூலமாக துடி செய்தியை அறிவிக்கும் ஊடகமாக வேட்டுவ மக்கள் பயன்படுத்தியுள்ளமை புலனாகுகின்றது.

வேட்டுவ வீரர்கள் கொண்டாடும் வில் விழாவில் துடியினை இசைத்து ஊரினை வலம் வந்து வில் விழாவினைக் கொண்டாடியுள்ளனர். இதனை,

**"துடிகளும் துளைகொள் வேயும்**

**...**

**குறிச்சியை வலம் கொண்டார்கள்" (பெரியபு.687)**

என்ற பாடல் விளக்கும்.

வேட்டைக்குச் செல்லும் வேடர்கள் காட்டில் பதுங்கி இருக்கும் விலங்குகளை வெளிக் கொண்டுவந்து வேட்டையாடுவர். அவ்வாறு விலங்குகளை வெளிக் கொண்டுவரத் துடியினை இசைத்துள்ளனர். இச்செய்தியை,

**"மொய்குரல் துடிக்குலங்கள்" (பெரியபு.726:3)**

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**துடி உவமையாகப் பயன்படல்**

பெண்களின் இடைக்குத் துடியானது உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**“துவரிதழ்ச செவ்வாய்த் துடியிடை யோயே”** **(சிலம்பு.கடலாடு.26)**

**“துடியிடைப் பணைமுலைத் தோகை யன்னவர்”** **(கம்ப.பால.130:1)**

எனும் பாடலடிகளின் வாயிலாக அறியமுடிகின்றது.

வேடர்களின் பாதங்களுக்குத் துடியானது உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“துடியடியன மடிசெவியன”** **(பெரியபு.735:1)**

எனும் பாடலடி விளக்கும். மேலும் யானையின் பாதத்திற்குத் துடியானது உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“துடியின் பாதக் குன்றின் மிசைத் தோல் விசியின்கட்டு”**

**(கம்ப.யுத்த.3559:2)**

எனும் பாடலடி விளக்குகிறது.

**தண்ணும்மை**

இது இருமுகத் தோற்கருவி. இதனை முழவு என்றும் கூறுவர். இதன் வாயில் தோல் மடித்து வைத்துப் பின்னப்பட்டிருப்பதால், இதனை மழவாயத் தண்ணும்மை என்றும் கூறுவர். தண்மையான தாழ்ந்த இனிய ஓசையுடையது இக்கருவி. தண்மையாகத் தாழ்ந்த ஓசையை எழுப்புவதால் தண்ணும்மை எனப்பெயர் பெற்றதாக பெயர்க் காரணம் கூறுவர். இக்கருவி முதலில் வன்மை ஒலி உடையதால் போர் கருவியாகப் பயன்படுத்தப்பட்டது. காலப்போக்கில் இது வடிவிலும் தோல்வார்கள் கட்டும் அமைப்பிலும் மாற்றம் ஏற்பட்டு இனிய ஓசை தரும் கருவியாக உருவெடுத்துள்ளது. தண்ணும்மை இசையரங்கக் கருவிகளில் முக்கியமானதாகும்.

தண்ணும்மை என்பதற்கு “உடுக்கை, உறுமிமேளம், ஒருகட்பறை, பேரிகை, முழவு, மத்தளம்”[40] என்று கழகத் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது.

“குறுந்தடிகளால் இருபுறமும் முழக்கப்படுவது தண்ணும்மை”[41] என்கிறார் நா.மம்மது.

“பண்டை இசை வரலாற்றில் மிக்க பிரசித்தி பெற்ற தோற்கருவி தண்ணும்மை. யாழ், குழல், தண்ணும்மை என்ற மூன்று கருவிகளும்

இசையிலும் நாடகத்திலும் சிறப்பிடம் பெற்றிருந்தன. இவை வடமொழி மரபில் பிற்காலத்தில் வீணை, வேணு மிருதங்கம் என மோனைபடச் சொல்லப்பட்டன. இருதலையும் குவித்து உடல் பொருந்தி இருக்கும் ஒரு இருகட்பறை, பழங்காலத்தில் இது குச்சியால் அடிக்கப்படட போது ஒலி அச்சம் விளைவிப்பதாயிருந்தது என்பர். ஆயினும் இசைக்கும் நாட்டியத்துக்கும் இது பயன்பட்ட காலத்தில் மிகவும் மென்மையான ஒலியாகத்தான் இருந்திருக்க வேண்டும். நாட்டியம், மணம் முதலான எண்ணற்ற வாழ்க்கைச் செயல்பாடுகளுக்குத் தண்ணும்மை இன்றியமையாதக் கருவியாயிருந்தது. போரிலும் தண்ணும்மைக்கு மிக்க இடமிருந்தது."[42] எனத் தமிழ் இசை இலக்கண வரலாறு உரைக்கிறது.

தண்ணும்மையானது தாழ்ந்த குரலினை உடையது என்பதை,

**"தாழ்குரற் றண்ணும்மை" (சிலம்பு.அரங்கேற்று.27)**

எனும் பாடலடி விளக்கும்.

**நாட்டியத்தில் தண்ணும்மை**

நாட்டியமாடும் போது பாடப்படும் பின் பாட்டோடு, யாழும் குழலும் ஒத்து, ஒருங்கிணைந்து இசைக்கவும், அதற்கேற்ப தன் கூரிய விரல் நுனியால் தண்ணும்மை வாசிப்பைச் சீர்பட இயக்கிப் பாட்டும், இசையும் ஆட்டத்தின் அலாரிப்பையும் மீறி அதிகமாக ஆகிவிடாமலும், நாட்டியத்திற்குத் தேவையான இசை ஒலிக்குத் தாழ்ந்து போகாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும் என்பதை,

**"வார நிலத்தை வாங்குபு வாங்கி**
**...**
**அத்தகு தண்ணும்மை யருந்தொழின் முதல்வனும்"**
**(சிலம்பு.அரங்கேற்று.49-55)**

எனும் பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது. இதிலிருந்து நாட்டியத்தில் தண்ணும்மை இசைக்கப்பட்டுள்ளது என்பதை அறியமுடிகின்றது. தண்ணும்மையுடன் பிற கருவிகள் சேர்ந்து இசைக்கப்பட்டுள்ளதை,

**"தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப்**

**பின்வழி நின்றது முழவே" (சிலம்பு.அரங்கே.:140-141)**

**“தண்ணுமைக் கருவியுந் தாழ்தீங் குழலும்” (மணிமே.ஊரலரு.:21)**

**“சங்கினங் குமுறப் பாண்டில் தண்ணும்மை யொலிப்பத் தாவில்”**

**(கம்ப.யுத்த.4311:2)**

எனும் பாவடிகளின் மூலமாக அறியமுடிகின்றது.

**தண்ணும்மையாளன்**

ஆட்டம், பாட்டு, இன்னிசை, தமிழ்ப்பண், தாளம், சுரவரிசை, குறை நிறை, பண்ணடைவு, திசைச்சொல் வழக்கு என்னும் அனைத்திலும் தெளிந்த அறிவுடையோனாகத் தண்ணும்மையாளன் இருத்தல் வேண்டும் என்பதை,

**“ஆடல் பாட லிசையே தமிழே**

**பண்ணே பாணி தூக்கே முடமே**

**தேசிக மென்றிவை யாசி னுணர்ந்து” (சிலம்பு.அரங்கேற்று.45-47)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

ஓர் உருவை இரட்டிக்கு இரட்டி சேர்த்து அதிலிருந்து குறையாதபடி நிறுத்தி, பின்பாட்டை வாங்கும் அளவு வாங்கி, அப்படி வாங்கிய பின் பாட்டிற்கு ஏற்றவாறு யாழையும், குழலையும் ஒத்து, ஒருங்கிணைந்து இசைக்கவும் அதற்கு ஏற்பத் தன் கூரிய விரல் நுனியால் தண்ணும்மை வாசிப்பைச் சீர்பட இயக்கி, பாட்டும், இசையும் ஆட்டத்தின் அலரிப்பையும் மீறி அதிகமாக ஆகிவிடாமலும், நாட்டியத்திற்குத் தேவையான இசை ஒலிக்குத் தாழ்ந்து போகாமலும் பார்த்துக் கொள்ளும் இசை அறிவுடையோனாக தண்ணும்மையாளன் இருத்தல் வேண்டும். இதனை,

**“கூடை நிலத்தைக் குறைவின்று மிகுத்தாங்கு**

**…**

**அத்தகு தண்ணும்மை யருந்தொழின் முதல்வனும்”**

**(சிலம்பு.அரங்கேற்று.48-55)**

என்ற பாடலின் வாயிலாக அறியமுடிகின்றது.

**பேரிகை**

பேரிகை என்ற இசைக்கருவி பெரும்பறை வகைச் சார்ந்ததாகும். ‘காரிகை பாடி பிழைப்பதைவிட பேரிகை கொட்டி பிழைத்திடலாம்’ என்ற அக்கால முதுமொழி ஒன்று உண்டு. இதன் மூலம் பேரிகை என்ற இசைக்கருவியை இசைக்கும் குடும்பங்களும் இருந்துள்ளதை அறியமுடிகிறது.

போருக்குச் செல்லும் படை வீரர்கள் பேரிகை இசைத்துப் போருக்குச் சென்றுள்ளனர். இதனை,

**“சாங்கொடு தாரை காளம்**

**தழங்கொலி முழங்கு பேரி” (பெரியபு.581:1)**

**“கும்பிகை திமிலை செண்டை குறடுமாப் பேரி கொட்டும்”**

**(கம்ப.யுத்த.2397.1)**

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

இராமனுக்குப் பட்டாபிடேகம் என்ற செய்தியை மக்கள் அனைவரும் அறிந்து கொள்ளுமாறு வள்ளுவர் பேரிகையை அறைந்து செய்தியைக் கூறியுள்ளார். இதனை,

**“கோநக ரணிகெனக் கொட்டும் பேரியம்” (கம்ப.அயோத்தி.124:3)**

எனும் பாடல் விளக்குகிறது. இதிலிருந்து செய்தியை அறிவிக்கும் கருவியாகப் பேரிகை இருந்துள்ளமை புலப்படுகின்றது.

கிட்கிந்தைப் படலத்தில் இராமனது ஆணைக்கு இணங்கி சுக்ரீவனது அரண்மனையை இலக்குமனன் அடையும் போது பேரிகை வாத்தியங்கள் முழங்கி இலக்குவனாரை வரவேற்புச் செய்தனர் என்பதை,

**“ஆர்க்குநூ புரம்பல் பேரி யல்குலாந் தடந்தேர் சுற்ற”**

**(கம்ப.கிட்கிந்தா.620:1)**

எனும் பாடலடியின் மூலம் அறியமுடிகின்றது.

திருஞானசம்பந்தர் திருமறைக்காட்டில் சிவபெருமானை வணங்கி திருநாவுக்கரசரிடமிருந்து விடைபெற்று முத்துச் சிவிகை மேலேறி ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதி சிவபிரானை வணங்கிச் செல்லும்போது பேரிகை இசைக்கப்பட்டுள்ளது. இதனை,

**“சங்கபட கம் பேரி**

**தாரைகா ளம் தாளம்” (பெரியபு.2523:3)**

எனும் பாடலடிகள் விளக்குகின்றன. இதிலிருந்து விடை கொடுத்தல் நிகழ்வில் பேரிகை இசைக்கப்பட்டுள்ளமை புலப்படுகின்றது.

சுவர்க்கலோகத்தில் தேவேந்திரன் ஐராவதத்தின் மீது பவனி வருகின்ற போது பேரிகை இசைக்கப்பட்டுள்ளதை,

**"தழங்கு பேரியங் குறட்டொடு பாண்டிலுஞ் சங்கும்"**

**(கம்ப.பால.488:1)**

எனும் பாடல் விளக்குகின்றது.

**பேரிகை உவமையாகப் பயன்படல்**

பேரிகையின் ஓசைக்கு மேகத்தின் இடிமுழக்கம் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**"கங்கை யாறு கடுத்தது காரெனச்**

**சங்க பேரி முழங்கிய தானையே" (கம்ப.பால.842:3-4)**

**"வாரி யங்கு மழையின் குரல் மானும்**

**பேரி யங்கள் முருடுஅகுளி பெட்கும்" (கம்ப.யுத்த.816:2-3)**

எனும் பாவடிகளின் வாயிலாக அறியமுடிகின்றது. மேலும் பேரிகையின் ஓசையானது கடலின் ஓசைக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**"பின்னுடைத் தாகப் பேரி கடல்படப் பெயர்ந்த தூளி"**

**(கம்ப.யுத்த.2360:3)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

**இறப்பு நிகழ்வில் பேரிகை**

பள்ளிப்படை படலத்தில் தசரதன் உடலை யானை மீது வைத்துக் கொண்டு செல்லும் போது பேரிகை இசைத்துச் சென்றனர் என்பதை,

**"சங்க பேரியுந் தழுவு சின்னமும்"**

**(கம்ப.அயோத்தி.935:1)**

எனும் பாடலின் வாயிலாக அறிய முடிகின்றது.

**ஆமந்திரிகை**

மாதவியின் நாட்டிய அரங்கேற்றத்தில் பக்கவாத்திய இசைக்கருவிகள் எல்லாம் பாடலோடு சேர்ந்து இன்னிசை மீட்டினர். குழல் இசையோடு கூடி, யாழிசையும், யாழ் இசைக்கு ஏற்ப தண்ணும்மையும் பொருந்தி வர, தண்ணும்மை ஒலிக்கு ஈடு கொடுக்கும் வண்ணம் முழவு ஒலிக்க, முழவு

ஒலிக்கு ஏற்ப ஆமந்திரிகை எனும் இடக்கை வாத்தியமும் இன்னிசை கூட்டியது. இடக்கை வாத்திய இசையோடு மற்ற வாத்தியங்களின் இசையும் சுதி பேதம் இன்றி பருந்தும் நிழலும் போல ஒன்றாய்ப் பொருந்தி இசை எழுப்ப ஒரு தாளத்திற்கு இரண்டு பற்றாகப் பஞ்ச தாளத்திற்குப் பத்தும், தீர்மானம் ஒன்றும் ஆகப் பதினோரு கூத்தினைக் கூத்து நூல் கூறியுள்ள விதிமுறை தவறாது மாதவி ஆடினாள். இதனை,

**“பாடிய வாரத் தீற்றினின் றிசைக்கும்**
**...**
**அந்தரக் கொட்டுட னடங்கிய பின்னர்” (சிலம்பு.அரங்:137-147)**

என்ற பாடல் விளக்குகிறது. இதிலிருந்து ஆமந்திரிகை எனும் இடக்கை வாத்தியம் நாட்டியத்திற்கு இசைக்கப்படும் வாத்தியம் என அறிந்துகொள்ள முடிகிறது.

**குறடு**

குறடு என்பதற்கு “மரத்துண்டு; அச்சுப் பதிக்கும் குடம்; சந்தனக்கல்; பறை வகை; திண்ணையினுடையக் கீழ்ப்பகுதிக்கு ஒட்டிய படித் தரைக்கு மேலே போடப்பட்டு இருக்கும் தளம்; இரு கம்பிகள் இணைக்கப்பட்ட கருவி”[43] என்று நர்மதா தமிழ் அகராதி விளக்கம் தருகிறது.

குறடானது முன்புறத்தில் அடிக்கப்படுகின்ற குறுந்தடியோடு பொருந்திய தோற் இசைக்கருவி என்பதை,

**“முந்துறு குணிலோ டியைவுறு குறட்டிற்” (கம்ப.சுந்தர.419:2)**

எனும் பாடலடி விளக்கும்.

பிணி வீட்டுப் படலத்தில் அனுமனைப் பிடித்து இந்திரசித்து, இராவணன் மனையினை அடையும் போது அம்மனையில் குறடு எனும் இசைக்கருவி இசைத்துக் கொண்டிருந்தது. இதனை,

**“நிரம்பு சில்லரிப் பாணியுங் குறடுதின் றிசைப்ப”**

**(கம்ப.சுந்தர.1093:2)**

எனும் பாடலடி விளக்குகிறது. இதிலிருந்து அரசனின் மனையில் அரசன் கேட்டு மகிழ்வுற வாசிக்கப்படும் கருவியாகக் குறடு இருந்துள்ளது.

சுவர்க்க லோகத்தில் தேவேந்திரன் ஐராவரத்தின் மீது பவணி வரும் போது குறடு இசைக்கப்பட்டுத் தேவேந்திரனை வரவேற்புச் செய்யப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை,

**"தழங்கு பேரியுங் குறட்டொடு பாண்டிலுஞ் சங்கும்"**

**(கம்ப.பால.488:1)**

எனும் பாடலடி விளக்குகின்றது.

இந்திரசித்து இராமலமட்சுமனை எதிர்த்துப் போருக்குச் செல்லும் போது குறடு இசைக்கப்பட்டுள்ளது. இதனை,

**"கும்பிகை திமிலை செண்டை குறடுமாப் பேரி கொட்டும்"**

**(கம்ப.யுத்த.2397:1)**

எனும் பாடலடி குறிப்பிடுகிறது.

**முருடு**

முருடு என்னும் தோற்கருவி இருமுகங்களைக் கொண்டது. முருடு என்பதற்குப் "பெரு மத்தளம்; பறை வகையுள் ஒன்று; அகன்று நீண்டு, பெரிய வடிவம் வடிவமுடையத் தோற்கருவி"[44] என தமிழிசைப் பேரகராதி விளக்கம் தருகிறது.

கோவலன், கண்ணகி இருவரின் பெற்றோர்களும் சேர்ந்து இவ்விருவருக்கும் திருமணம் செய்து வைக்க வேண்டும் என ஒரு நன்நாளைத் தேர்வு செய்து உறுதிப்படுத்தினர். இந்நிகழ்வை யானையின் கழுத்தின் மீது மங்கல மகளிரை ஏற்றி நகரம் எங்கும் தெரிவிக்கச் செய்தனர். இம்மங்கல நிகழ்வில் முருடு இசைக்கப்பட்டது. இதனை,

**"இருபெருங் குரவரு மொருபெரு நாளான்**

**…**

**முரசியம்பின் முருடதிர்ந்தன முறையெழுந்தன பணிலம்**

**வெண்குடை" (சிலம்பு.மங்கல.41-46)**

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

தசரதன் தனக்குப் புதல்வனில்லாக் குறையை நீக்க இருசியசிருங்க முனிவனை அழைத்து வந்து ஒரு வருட காலம் அசுவமேத யாகத்தை

நடத்தினான். யாகத்திற்குரியக் கடமைகள் நிறைவேறின பொழுது முருடு இசைக்கப்பட்டது. இதனை,

**"முருடரு பல்லிய முழங்கி யார்த்தன" (கம்ப.பால.273:1)**

என்ற பாடலடிகள் உரைக்கின்றன. இதிலிருந்து யாகத்திற்க்கு இசைக்கப்படும் கருவியாக முருடு இருந்துள்ளமைப் புலனாகுகிறது.

முருடு என்னும் தோல் இசைக்கருவி இரண்டு பக்கங்களிலும் அடித்து இசை எழுப்பப்படும் கருவி என்பதை,

**"முருடி ரண்டு முழங்குறத் தாக்கொலி" (கம்ப.ஆரணிய.395:1)**

என்ற பாவடி வாயிலாக அறியப்படுகின்றது.

இந்திரசித்து விடுத்த பிரமாத்திரத்தினால் தம் பகைவர் சேனையோடு மாண்டனர் என்ற மகிழ்ச்சியான செய்தியைக் கேட்ட அரக்க மகளிர், இராவணன் காணுமாறு கள்ளைப்பருகி அரக்கர் சேனையும், வானர சேனையும் ஒன்றொடு ஒன்று போர் செய்து கொண்டிருக்கும் போது போர் வீரர்களுக்குப் போர் உணர்வை மேலும் தூண்டிவிட பெரியமுருடினைப் போர்க்களத்திலே இசைத்துள்ளனர். இதனை,

**"முரசு மாமுரு டும்முரல் சங்கமும்" (கம்ப.யுத்த.997:1)**

என்ற பாடல் விளக்குகிறது. இதிலிருந்து போர்க் களத்தில் இசைக்கப்படும் இசைக்கருவியாகவும் முருடு இருந்துள்ளமை புலப்படுகின்றது.

**முருடு உவமையாகப் பயன்படல்**

முருடின் ஓசையானது கடலின் ஓசைக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**"பேரி யங்கள் முருடுஅகுளி பெட்கும்**
**தூரி யங்கடலி னின்று துவைப்ப" (கம்ப.யுத்த.816.3-4)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

**பம்பை**

அக்காலத்திலிருந்து இந்நாள் வரை வழக்கிலிருக்கும் தோற்கருவி பம்பையாகும். இது இருமுகத் தோல் இசைக்கருவியாகும்.

“பம்பை என்பது நீள் உருளை வடிவமுள்ள இருபறைகள் ஆகும். அதனால் இதனைப் பறை என்பர். இவ்விசைக் கருவியை நான்முகப்பறை என்றும் அழைப்பர்.”[45]

போருக்குச் செல்லும் போர் வீரர்கள் பம்பை என்னும் கருவியை இசைத்துப் போருக்குச் சென்றுள்ளனர் என்பதை,

**“வெங்குரல் பம்பை கண்டை**

**வியன்துடி திமிலை தட்டி” (பெரியபு.581:2)**

**“பம்பைதார் முரசஞ் சங்கம் பாண்டில்போர்ப்**

**பணவம் தூரி” (கம்ப.யுத்த.2397:2)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது.

வேட்டைக்குச் செல்லும் வேடர்கள் காட்டில் பதுங்கி இருக்கும் விலங்குகளை வெளிக் கொண்டுவந்து வேட்டையாடுவர். அவ்வாறு விலங்குகளை வெளிக்கொண்டு வர பம்பை என்னும் இசைக்கருவியை இசைத்துள்ளனர். இதனை,

**“மொய்குரல் துடிக்குலங்கள்**

**பம்பை முன் சிலைத்தெழக்” (பெரியபு.726:3)**

என்ற பாடல் விளக்குகிறது. இப்பாடலின் மூலம் பம்பையின் இசைக்கு விலங்குகள் அச்சம் கொள்ளும் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

கம்பராமயணத்தில் பம்பை எனும் பறை உடைய சேனையைக் கொண்டவன் குகன் எனக் கம்பர் குறிப்பிடுகிறார். இதனை,

**“பம்பை பம்பு படையினன் பல்லவத்து” (கம்ப.அயோத்தி.654:)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது. இதிலிருந்து போர்க்களத்தில் இசைக்கும் இசைக்கருவியாகப் பம்பை இருந்துள்ளமை புலனாகிறது.

பம்பையானது வாரினாற் கட்டப்படுதலைக் கொண்டிருக்கும் என்பதைக் கம்பர்,

**“வார்மிசைப் பம்பையுந் துடியும் மற்றவும்”**

**(கம்ப.அயோத்தி.984:2)**

எனும் பாலடியில் உரைக்கிறார்.

**டமருகம்**

டமருகம் என்பது "உடுக்கை எனும் சிறு பறை"[46]. சிவபெருமானின் வலக்கையில் 'டமருகம்' எனும் உடுக்கை இருந்துள்ளது. சிறுத்தொண்டரின் வரலாற்றினை வருணித்துக் கூறும் போது, சிவபெருமான் தமது வலக்கையில் உள்ள டமருகம் எனும் உடுக்கையை இசைத்துள்ள செய்தியைச் சேக்கிழார்,

> **"தயங்கு சுடர் வலத்திருக்கைத்**
>
> **தமருகத்தின் ஒலிதழைப்பப்" (பெரிய.3698:3)**

எனும் பாவடி விளக்கும்.

**தக்கை**

பெரிய உடுக்கை வடிவிலான தோற்கருவி. இத்தக்கையானது சிறுகோலால் அடித்து முழக்கப்படும். இக்கருவியிலிருந்து எழும் தன்மையான ஒலியால் இது தக்கை எனப் பெயர் பெற்றதாகத் தோன்றுகின்றது. கோவில் வழிபாட்டிற்குப் பயன்படுத்தப்பட்ட கருவிகளுள் தக்கை முக்கியமானதாகும். "திருவரங்கக் கோயிலில் வைகுண்ட ஏகாதசித் திருவிழாவில் தக்கை முழக்கப்படுகிறது. திருமெய்யம் பாறையில் தக்கை வடிவமைக்கப்பட்டுள்ளது."[47] என்கிறார் நா.மம்மது.

தோலிசைக் கருவிகள் அகமுழவு, புறமுழவு என இருவகைப்படும். அகமுழவு என்பது அரங்கங்களில் வாசிக்கப்படும் கருவிகள். புறமுழவு என்பது வீதிக் கூத்துக்கள், நாடகங்களில் வாசிக்கப்படும் கருவியாகும். தக்கை, அகமுழவாகவும், புறமுழவாகவும் பயன்பாட்டில் இருந்துள்ளது.

இக்கருவி துடி என்ற இசைக்கருவியின் தொடர்நிலைக் கருவியாக இருக்கலாம் என்பது இசையறிஞாகள் கணிப்பு. உடுக்கையை ஒத்த வடிவமைப்போடு அளவில் அதைவிடச் சற்றுப் பெரிதான அமைப்புடையது. இருபுறமும் கூர்ந்த முனையோடு கூடிய வட்டத்தில் தோல் இறுகக் கட்டப்பட்டிருக்கும். இருமுகக் கருவியாக இருந்தாலும் ஒரு முகத்தில் மட்டுமே வாசிக்கப்படும். அரளிக்குச்சி கொண்டு வாசிப்பது வழக்கம். மற்ற குச்சிகள் தோலைத் தின்றுவிடும் என்பதால் பால் தன்மை மிக்க அரளிக்குச்சி கொண்டு இசைப்பதாகச் சொல்கிறார் திருவரங்கம் கோவிலின்

தக்கை கலைஞர் கேசவன். இரண்டுமாத ஆட்டுக்குட்டியின் தோல் கொண்டு வார்க்கப்படும் இக்கருவி, 'தக்..தக்' என்று ஒலியெழுப்புவதால் "தக்கை" எனப் பெயர் பெற்றதாகவும் பெயர்காரணம் கூறலாம்.

கம்பராமாயணத்தில் இந்திரசித்து இராமலட்சுமணனை எதிர்த்துப் போர் புரியச் செல்லும் போது வீரர்களுக்குப் போர் உணர்வைத் தூண்டுவதற்குத் தக்கை எனும் தோற்கருவி இசைத்ததை,

**"கம்பலி யுறுமை தக்கை கரடிகை துடிவேய் கண்டை"**

**(கம்ப.யுத்த.2397:3)**

எனும் பாடலடி விளக்குகிறது.

**ஊமை வாத்தியம்**

வீ.ப.கா.சுந்தரம் ஊமை வாத்தியம் என்பதற்குச் "சுருதியோடு சேராமல் மந்தமாக ஒலிக்கும் ஒரு வாத்தியம். ஊம்+ஐ=ஊமை; ஊம்+ஆர்=ஊமர். "ஊம் ஊம்" என்ற ஒலிப்பால் கருத்துக்களைத் தருபவர் ஊமை. சுருதி அற்ற கொட்டு - ஊமைக் கருவி"[48] என்கிறார்.

ஊமை என்னும் இசைக் கருவியானது கம்பராமாயணத்தில் ஓர் இடத்தில் மட்டுமே இசைக்கப்பட்டுள்ளது. இந்திரசித்து போருக்குச் செல்லும் போது இக்கருவி இசைக்கப்பட்டுள்ளது. இதனை,

**"கம்பலி யுறுமை தக்கை கரடிகை துடிவேய் கண்டை"**

**(கம்ப.யுத்த.2397:3)**

எனும் பாடலடி வாயிலாக அறிய இயல்கிறது.

**செண்டை**

செண்டை என்பது ஒரு பக்கத்தில் மட்டும் வாசிக்கப்படும் இருமுக வாத்தியம். இது பண்டையத் தமிழரின் இசைக் கருவிகளுள் ஒன்று. கேரள நாட்டில் தற்காலத்தில் பரவலாகக் கையாளப்படுகின்றது. செண்டை கதகளி ஆட்டத்தில் சிறப்பாக இடம் பெறுகிறது. நீள் உருளை வடிவம் கொண்ட இக்கருவி, உயரத்திலும் அகலத்திலும் வேறுபாடுகள் கெண்டு பல வடிவங்களில் காணப்படுகிறது. கேரளாவில் கோயில் பூசைகளிலும், சிற்றூர்

விழாக்களிலும் செண்டை என்னும் இவ்விசைக்கருவி முக்கியத்துவம் பெற்றுள்ளது. இக்கருவி கூட்டமாய் முழக்கப்படுவது சிறப்பாகும்.

இந்திரசித்து இராமலட்சுமணரை எதிர்த்துப் போருக்குச் செல்லும் போது செண்டையானது இசைக்கப்பட்டுள்ளது. இதனை,

**“கும்பிகை திமிலை செண்டை குறடுமாப் பேரிகொட்டும்”**

**(கம்ப.யுத்த.2397:1)**

என்ற பாடலடி மூலம் அறிய முடிகிறது. இதிலிருந்து செண்டையினைப் போருக்குப் பழந்தமிழர்கள் இசைத்துள்ளனர் என்பதை உணரமுடிகிறது.

**குடமுழா**

குடமுழவு என்பதற்கு “குடமுழா. ஒருமுகமுழவு இது. இதன் வாய் தோலால் மூடப்பட்டது என்று கூறப்பட்டுள்ளதால் இது தோற்கருவி வகையைச் சார்ந்தது. ஐம்முக முழவு, மும்முக முழவு, இருமுக முழவு என்பவை போன்று இது ஒருமுக முழவு”[49] என தமிழிசைக் கலைக்களஞ்சியம் உரைக்கிறது.

சித்தியர் குல மகளிர் அழகு மிக்க குடமுழாவின் தாள ஒத்துக்கேற்று உள்பட்ட பாடலைப் பாடியுள்ளனர் என்பதை,

**“தென்னகு குடமுட் பாடல் சித்திய ரிசைப்பத் தீஞ்சொற்”**

**(கம்ப.சுந்தர.281:1)**

என்ற பாடலடி விளக்குகிறது.

**துந்துபி**

இது தோற்கருவிகளுள் ஒன்று. துமதுதம் என்று ஒலிப்பதனால் துந்துமி எனப் பெயர் பெற்றதாகக் கூறுவர். ஒலிக்குறிப்பினால் பெயர் பெற்ற இக்கருவியைத் துந்துமி என்றும், துந்துபி என்றும் குறிப்பிடுவர்.

தேவர்கள் இசைக்கும் கருவி துந்துபி. வேட்டுவர் குலம் விளங்கும் வகையில் நாகன் மனைவி தத்தை, குழந்தை பெற்றவுடன் வானத்துத் தேவர்கள் தேவ துந்துபியை இசைத்தனர். இதனை,

**“வரிச் சுரும்பு அலைய வானின்**

**மலர்மழை பொழிந்தது எங்கும்**

**அரிக் கநற்துடியே அன்றி**

**அமரர்துந் துபியும் ஆர்த்த''** (பெரியபு.663:3-4)

எனும் பாடலடிகள் விளக்குகின்றன.

சிவபெருமான் நந்தனாரின் கனவில் தோன்றி 'இப்பிறவியைப் போக்குவதற்கு நீ ஏரியில் மூழ்கி முப்புரி நூலோடு மீண்டு எழுவாயாக' என்று அருள் செய்தார். இதனால் தில்லை நடராசனின் காலைத் தொழுது அனலில் புகுந்தார். புகுந்த அப்போதே எரிகுழியில் இம்மாயப் பொய்மேனியை ஒழித்துப் புண்ணிய மாமுனிவர் வடிவில் உடலில் வெண்ணூல் விளங்க சடைமுடியயோடு தோன்றினார். அப்போது வானத்தில் உள்ள தேவர்கள் தேவவாத்தியக் கருவியான துந்துபிகளை இசைத்து வாழ்த்தொலி தெரிவித்தனர். இதனை,

**"அந்தரதுந் துபிநாதம்**

**வந்தெழுந்தது இரு விசும்பில்''** (பெரியபு.1078:2)

என்ற பாடல் விளக்குகிறது.

காரைக்கால் அம்மையார் திருமன்றுள் நடனம் புரியும் நடராசப் பெருமான் திருவருளால் பேய் வடிவம் அடைந்த போது தேவர்கள் துந்துபிகளை இசைத்தனர் என்பதை,

**"மலர்மழை பொழிந்தது எங்கும்**

**வானதுந் துபியின் நாதம்''** (பெரியபு.1772:1)

எனும் பாவடி மூலம் அறியமுடிகின்றது.

திருஞானசம்மந்தர் வேத முதல்வனாகிய சிவபொருமானின் சைவ நெறியின் சிறப்பினை அறியாத சமணர், பௌத்தர்களின் மார்க்கங்கள், ஈன மார்க்கங்கள் என்று மொழிந்து பின்னர் திருக்கடைக்காப்பும் அருளி சிவபிரான் முன்னர் தொழுது நின்றார். இச்செயலைக் கண்ட வானத்துத் தேவர்கள் தேவ துந்துபியை இசைத்து மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர். இதனை,

**"வேதகா ரணர் ஆய**

**எங்கள் பிராண் சம்மந்தர்''** (பெரியபு.1982:1)

**"திருப்பதிகம் நிறை வித்துத்**

....

**பிரசமலர் மழை பொழிந்தார்'' (பெரியபு.1983)**

என்ற பாடல்கள் சுட்டுகின்றன.

திருஅரத்துறையில் உள்ள சிவபிரான் கோயிலில் உள்ள சின்னத்தை எடுக்க அந்தணர்கள் செல்லும் போது துந்துபி இசைத்துச் சென்று சின்னத்தை எடுத்துச் சென்றனர். இதனை,

**"சங்கு துந்துபி தாரைபேரி இம்முதல்'' (பெரியபு.2106:1)**

எனும் பாடலின் வாயிலாக அறியலாம்.

திருஞானசம்மந்தர் திருநாவுக்கரசரிடம் திருமறைக்காட்டுக் கோவில் சன்னதிக்கு எதிர்வாயில் திறந்தே வணங்க வேண்டும். 'நீரே இவ்வாயில் திறக்க மெய்ப்பொருள் வண்டமிழ்ப் பதிகம் பாடுக' என்றார். திருநாவுக்கரசரும் திருஞானசம்மந்தரின் வேண்டுகோளுக்கு இணங்கி வண்டமிழ்ப் பதிகம் பாடியவுடன் திருகாப்பு நீங்கியது. திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தரைப் பார்த்து இரத்தினங்கள் பதிக்கப் பெற்ற கதவுகள் மூடவும், திறக்கவும் திறந்த வகை போல மீண்டும் அடைக்கவும் நீர் திருப்பதிகம் பாடி அருளும் என்றார். உடனே திருஞானசம்மந்தர் வெற்றிமேவும் இடபத்தை வாகனமாக உடைய சிவபிரானை மிகவும் விரும்பியவராய், 'சதுரம்' எனத் தொடங்கும் இன்தமிழ்ப் பதிகப் பாடலைப் பாடினார். உடனே இரண்டு பக்கக் கதவுகளும் சேர்த்து அடைக்கப்பட்டன. அப்போது வானத்துத் தேவர்களின் தேவதும்பிகள் ஐந்தும் இசைக்கப்பட்டன. இதனை,

**"பெருமையின் முழங்க பங்ச**

**நாதமும் பிறங்கி ஓங்க'' (பெரியபு.2493:4)**

என்ற பாடல்களின் மூலமாக அறியமுடிகின்றது.

பிள்ளைவரம் வேண்டி தசரதன் ஒரு வருட காலம் அசுவமேத யாகம் நடத்தினான். பன்னிரண்டாம் மாதம் முடிந்த பின் யாகம் எக்குறையுமின்றி நிறைவுபெற்றது என்று வானத்துத் தேவர்கள் தேவ வாத்தியமான துந்துபியை இசைத்துள்ளனர். இதனை,

**“தழங்கின துந்துமி வானகம்**

**விழுங்கினர் விண்ணவர் வெளியின் றென்னவே” (கம்ப.பால.264:3-4)**

எனும் பாடல் விளக்குகிறது.

**வரவேற்பு நிகழ்வில் துந்துபி**

திருஞானசம்பந்தர் மதுரைக்கு வருகின்ற போது அவரை வரவேற்கத் துந்துபிகள் இசைத்து வரவேற்புச் செய்துள்ளனர். இதனை,

**“துந்துபிகள் முதலாய**

**தூரியங்கள் கிளராமே” (பெரியபு.2552:1)**

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

குகன் துந்துபி இசைக்கும் சேனையைக் கொண்டவன் என்பதை,

**“கொம்பு துந்துபி கோடதிர் பேரிகை**

**பம்மை பம்பு படையினன் பல்லவத்து”**

**(கம்ப.அயோத்தி.654:1-2)**

என்கிறார் கம்பர்.

தேவ துந்துபியின் ஓசைக்கு மேகத்தின் முழக்கம் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**“தான மாக்கள் முழக்கமும் தாவில்சீர்**

**வான துந்துபி ஆர்ப்பும் மருங்கெலாம்” (பெரியபு.14:3-4)**

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**மத்தளம்**

பறை (முழவு) வகையில் ஒன்று. மத்தளம் என்பது இருமுகத் தோற்கருவி. மத்தளம் - மத்து ஓசைப் பெயர், இசையிடனாகிய கருவிகட்கெல்லாம் தாளமாதலின் மத்தளமென்று பெயராயிற்று என்று (சிலப்.அரங்:27) அடியார்க்கு நல்லார் விளக்குகிறார்.

காப்பியங்களில் பெரும்பாலும் முழவு, தண்ணுமை போன்ற இசைக்கருவிகளுக்கு உரை எழுதும் உரையாசிரியர்கள், பல இடங்களில் இக்கருவிகளை மத்தளங்கள் என்று குறிப்பிட்டுள்ளார்கள். மூல ஆசிரியர்கள் மத்தளம் என்று பெரும்பகுதி குறிப்பிடவில்லை. கம்பர் கம்ப இராமாயணத்தில்

ஓர் இடத்தில் மட்டும் மத்தளம் என்ற சொல்லைக் கையாண்டுள்ளார். “தோலிசைக் கருவிகளில் கண்களை அதாவது துளைகளை உண்டாக்கிக் கயிறுகள் கொண்டு அக்கண்கள் வழியே இழுத்துக் கட்டைகளுடன் இணைத்துக் கட்டிய மத்தளங்களை இசைப்பவர் கண்ணுளர் என்று நமது பழந்தமிழ் இலக்கியங்கள் சுட்டத் தெளிவு கொள்ள முடிகின்றது.”[50] என்கிறார் கரு.அழ.குணசேகரன்.

ஆறுசெல் படலத்தில் வனவாசம் சென்ற இராமனை அழைத்து வர, பரதன் தன் சேனையோடு செல்கிறான். மத்தளம் முதலிய வாத்தியங்கள் ஒலித்தல் இல்லாமையால் பரதனுடன் சென்ற படை, சித்திரம் தீட்டிய சேனை போன்று இருந்தது என்கிறார் கம்பர். இதனை,

**“மத்தள முதலிய வயங்கு பல்லியம்**
**…**
**பத்தியை நிகர்த்ததப் படையி னீட்டமே”**
**(கம்ப.அயோத்தி.1000)**

என்ற பாடல் குறிப்பிடுகின்றது.

**துளைக்கருவிகள்**

காற்றை வாத்தியங்களுள் செலுத்தி, அக்காற்றைத் தக்கப் பரிமாணத்தில் தேவையான அளவு அசைவுகளுடன் இசையை எழுப்புமாறு வாசிக்கப்படும் கருவிகள் அனைத்தும் துளைக்கருவிகள் எனப்படும்.

துளைக்கருவிகள் என்பவை, “காற்று அதிர்வினால் இசை தரும் கருவி நேராகவோ அனறிச் சீவாளியின் மூலமாகவோ காற்றுத் தருவதினால் துளைக்கருவிகளில் இசை உருவாகின்றது”[51] என நா.மம்மது உரைக்கிறார்.

**குழல்**

பாமர மக்களின் நாட்டுப்புறப் பாட்டுக்களிலிருந்து இசையின் சிகரங்களின் இராகம், தாளம், பல்லவி வரைக்கும் குழலில் இனிமையாக வாசிக்க முடியும். இது ஓரொலிப்புக் கருவியாகும். குழலில் ஒரு வேளையில் ஒரு சுரத்தை மட்டும் வாசிக்க முடியும்.

கோவலர்கள் இசைக்கும் கருவி குழல் என்பதனை,

**“கோவல ரூதுங் குழலின் பாணியும்” (சிலம்பு.நீர்ப்படை.241)**

எனும் பாவடி விளக்குகிறது.

கோவலர்கள் ஆனிரை மேய்த்தலை குலத்தொழிலாகக் கொண்டிருந்தனர். ஆனிரைகளை மேய்க்கும் பொருட்டுக் காடுகளில் செல்லும் போது புல்லாங்குழலினை இசைத்துச் சென்றுள்ளனர். இதனை,

**“மேவும்இசை வேய்ங் குழலும்**

**மிகவிளங்க வினை செய்யும்” (பெரியபு.948:2)**

எனும் பாடல் தெளிவுபடுத்துகின்றது. கோவலர்கள் ஆநிரைகளை மேயத்து வீடு திரும்பும் போது புல்லாங்குழலில் முல்லைப் பண்ணினை இசைத்து வந்துள்ளனர் என்பதனை,

**“குழல்வளர் முல்லையிற் கோவலர் தம்மொடு”**

**(சிலம்பு.அந்திமாலைச்.15)**

எனும் பாவடிகள் புலப்படுத்துகின்றன.

**குழல் அமைப்பும் வாசிப்பும்**

மூங்கில் தண்டினை எடுத்து நுனியில் நான்கு பங்கும், அடியில் இரண்டு பங்கும் வெட்டி இருபது விரல் நீளத்தில் ஓர் கணுவும், சுற்று நாலரை விரலளவும் உள்ளதாய் அரிந்து, தந்தரித்தானத்தில் செய்யப்பட்ட எண் துளைகளையும், வாய் வைத்து ஊதும் துளையையும், சிறப்புக்குன்றா அந்த எண் துளைகளையும் ஒவ்வோர் அரிசியளவாக அங்குலி விரல்கள் வரிசையாக இடைவிட்டுச் செய்ய அமைக்க வேண்டும். இதனை,

**“முந்தைமறை நூல் மரபின்**

**…**

**அங்குலி எண்களின் அமைத்து” (பெரியபு.943)**

எனும் பாடல் விளக்குகிறது.

“குழல் - வங்கியம். அதற்கு மூங்கில், சந்தனம், வெண்கலம், செங்காலி, கருங்காலியென ஐந்துமாம். இவற்றுள் மூங்கிலிற் செய்வது உத்தமம். வெண்கலம் மத்திமம்; ஏனைய அதமமாம். இக்காலத்துக் கருங்காலி, செங்காலி, சந்தனம் இவற்றாற் கொள்ளப்படும். கருங்காலி வேண்டுமென்பது பெருவழக்கு. இவை கொள்ளுங்கால் உயர்ந்த

ஒத்தநிலத்திற் பெருகவளர்ந்து நாலு காற்று மயங்கின் நாதமில்லை ஆதலான் மயங்கா நிலத்தின் கண் இளமையும் நெடும்பிராயமுமின்றி ஒரு புருடாயுப்புக்க பெரியமரத்தை வெட்டி ஒரு புருடாகாரமாகச் செய்து அதனை நிழலிலே ஆற இட்டுவைத்துத் திருகுதல், பிளத்தல், போழ்ந்துபடுதல் செய்கையறிந்து ஓர் யாண்டு சென்றபின் இலக்கணவகையான் வங்கியஞ் செய்யப்படும். நீளம் இருபது விரல்; சுற்றளவு நால்வரைவிரல்; இது துளையிடுமிடத்து நெல்லரிசியில் ஒரு பாதி மரநிறுத்திக் கடைந்து வெண்கலத்தாலே ஆணைசு பண்ணி இடமுகத்தை அடைத்து வலமுகம் வெளியாக விடப்படும்”[52] (சிலப்பதிகாரம்:3,அரங்கேற்று.26-உரை குறிப்பு) என்று குழல் செய்ய ஏற்ற மரத்தையும் செய்யும் முறைமையையும் சிலப்பதிகார உரை தெரிவிக்கின்றது. “இரும்பு, வெண்கலம், வெள்ளி, தங்கம் போன்ற உலோகங்களினாலும், தந்தம், செஞ்சந்தனம், கருங்காலி முதலியவற்றாலும் குழல் செய்யலாமாயினும், மூங்கிலால் செய்யப்பட்ட குழலுக்கே நல்ல நாதம் உளது.”[53] என்கிறது கலைக்களஞ்சியம்.

20 விரலளவு கொண்டதாகப் புல்லாங்குழல் இருக்க வேண்டும். முகப்பின் இரண்டு விரலளவு நீக்கிய பின்னர் ஏழங்குலம் விட்டு இடையில் உள்ளதில் துளையிட வேண்டும். அடுத்து எழுதுளைகளிலும் வாயின் பக்கம் உள்ளவற்றில் மூன்று விரல்களை வைத்துக் கொள்ள வேண்டும். அடுத்து வலக்கையின் பெருவிரலில்லாத நான்கு விரல்களை வைத்து, ஆக ஏழு விரல்களைக் கொண்டு இசையெழுப்ப வேண்டும் என்பதை,

> **“ஏழுவிரல் இடையிட்ட**
> **...**
> **மணி அதரம் வைத்தூத” (பெரியபு.953)**

எனும் பாடல் குறிப்பிடுகின்றது. “வங்கியத்தின் துளை அளவு நீளம் இருபது விரல்; இதிலே தூம்பு முகத்தின் இரண்டு விரல் நீக்கி முதல்வாய் விட்டு அம்முதல்வாய்க்கு ஏழங்குலம் விட்டு வளைவாயினும் இரண்டு விரல் நீக்கி நடுவில் நின்று ஒன்பது விரலினும் எட்டுத்துளையிடப்படும். இவற்றுள் ஒன்று முத்திரை என்று கழித்து நீக்கி நின்ற ஏழினும் ஏழுவிரல் வைத்து ஊதப்படும் துளைகளின் இடைப்பரப்பு ஒரு விரலகலம் கொள்ளப்படும். ஏழு விரலாவன

இடக்கையிற் பெருவிரலும் சிறுவிரலும் நீக்கி மூன்று விரலும் வலக்கையிற் பெருவிரலொழித்த நான்கு விரலும் ஆக ஏழு விரலுமென்க"[54] (சிலம்பு.அரங்.3:17, ஆய்ச்சியர் குரவை கன்று குணிலா. உரை அடியார்க்கு நல்லார்) என்பர் அடியார்க்கு நல்லார்.

ஆதாரத்தானம், மத்திமத்தானம், உச்சத்தானம் என்னும் மூன்று சுருதிகளின் முறைமைப் படியே தெரிவிக்கின்ற துளைகளை விரல்களினால் மென்மையாகப் பொத்தியும், சமமாகப் பொத்தியும் வலிவாகப் பொத்தியும், இம்மூன்றுமல்லாத மற்ற துளைகளில் விரல்தொழில்களை அளவு குறையாமல் அசைத்தும் இயக்குமாறு, வாயால், வேய்ங்குழலின் துளைவாயும் கூடி இசைக்கச் செய்ய வேண்டும் என்பதை,

**"மந்தரத்தும் மத்திமத்தும்**

**...**

**துளைவாயும் தொடக்குண்ண" (பெரியபு.957)**

எனும் பாடல் குறிப்பிடும்.

குழல் வாசிப்பின் போது எழுத்துக்களின் தன்மைகளை அறிந்து சித்திரப் புணர்வும், வஞ்சனைப் புணர்ப்பும் என்று சொல்லப்படுகின்ற இரண்டு கூற்றினையும் துல்லியமாக அறிந்து இசைத்திடல் வேண்டுமென்பதனை,

**"சொல்லிய வியல்பினிற் சித்திர வஞ்சனை**

**புல்லிய வறிந்து புணர்ப்போன் பண்பின்"**

**(சிலம்பு.அரங்கேற்று.56-57)**

எனும் பாடலடி வாயிலாக அறியமுடிகின்றது.

குழல் வாசிப்பில் சுட்டு விரல் முதலாகத் துளைகளை விட்டுப் பிடிக்கும் ஆரோகணமும், சிறுவிரல் முதலாகத் துளை விட்டுப்பிடிக்கும் அவரோகணமும் ஆகிய இசை ஏற்ற இறக்கங்கள் எனும் வர்த்தனையைப் பிழையற வாசித்தல் வேண்டும். இதனை,

**"வர்த்தனை நான்கு மயலறப் பெய்தாங்"**

**(சிலம்பு.அரங்கேற்று.58)**

எனும் பாவடி மூலம் அறிய இயல்கிறது.

குரல், இளி எனும் இருவகை இசை நரம்புகள் ஒலிக்கும் இசைக்கு ஏற்ப குழல் ஊத வேண்டும் என்பதை,

**"கேற்றிய குரலிளி யென்றிரு நரம்பின்**

**ஒப்பக் கேட்கு முணர்வின னாகிப்" (சிலம்பு.அரங்கேற்று.59-60)**

எனும் பாவடி மூலம் அறிய முடிகின்றது.

முழவு ஒலிக்கு ஏற்பத் தாளம் தவறாது இசைக்கும் தண்ணும்மை இசையோடு பொருந்தக் குழல் வாசிக்க வேண்டுமென்பதை,

**"பண்ணமை முழவின் கண்ணெறி யறிந்து**

**தண்ணும்மை முதல்வன் றன்னொடும் பொருந்தி"**

**(சிலம்பு.அரங்கேற்று.61-62)**

எனும் பாவடிகளினால் விளங்க முடிகின்றது.

இளி என்னும் நரம்பினை யாழின் மீது வைத்து, பாடிய இசையின் இயல்புகளை அறிந்து பாடுகின்ற பண் வரவுகளுக்கு ஏற்ற சுரங்களைக் குறைவுபடாமல் நிறுத்தி, அந்த பண்ணிற்குப் புறம்பாகப் போகாமல் ஒன்றி வாசிக்க வேண்டும். இதனை,

**"வண்ணப் பட்டடை யாழ்மேல் வைத்தாங்**

**கிசையோன் பாடிய விசையி னியற்கை**

**வந்தது வளர்த்து வருவ தொற்றி" (சிலம்பு.அரங்கேற்று.63-65)**

எனும் பாடலடிகளின் வாயிலாக அறிய இயலும்.

சொல்லின் தன்மையையும், அவற்றை எழுத்தாக உச்சரிக்கும் பாங்கையும் வழுவின்றி இசைத்திடல் வேண்டும். இதனை,

**"வழுவின் றிசைக்குங் குழலோன் றானும்"**

**(சிலம்பு.அரங்கேற்று.69)**

எனும் பாடலடியால் அறிய இயல்கிறது.

**குழலின் சிறப்பு**

குழலின் இசைக்கு உயர்திணை உயிர்களான மக்களும், அஃறிணை உயிர்களான மாக்களும் மயங்கியுள்ளன. இடையர்கள் கொன்றைக்

குழலையும், வேய்ங் குழலையும் வாசிக்கும் போது அவர்களின் முற்றத்தில் இருக்கின்ற கன்றுகள் அவ்வோசை கேட்டு இன்புற்றுத் தூங்கும் என்பதை,

**"கொன்றை வேய்ங்குழற் கோவலர் முன்றிலில்**

**கன்று றக்குங் குரவை கடைசியர்" (கம்ப.பால.66:1-2)**

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

குழலின் இசைக்குப் பூலோக மானிடர்கள் மட்டுமின்றி தேவலோக வானவர்களும் மயங்கி மெய்மறந்து சித்திரங்கள் போல நின்றதை, (கம்ப.பால.788:3-4) என்ற பாவடிகள் விளக்குகின்றன.

"குழலின் துளைகளிலிருந்து பிறக்கும் ஒலிகள் நிலைத்து நிற்பவை. சுருதி மாறாதவை. குழலின் பற்று (ஆதார சுருதி) மாறாமல் எப்பொழுதும் ஒன்று போல் இருக்கும். ஆனால் யாழ் நரம்புகளின் ஒலிகள் மாறக்கூடியவை. தட்பவெட்ப நிலைகளால் யாழ் நரம்புகளின் சுருதி பாதிக்கப்படும். நரம்புகளின் முறுக்கிற்கு ஏற்பவும் சுருதி மாறும். ஆகவே யாழ் வல்லுநர்கள் யாழ் நரம்புகளின் ஒலியைக் குழலின் பற்றை அடிப்படையாகக் கொண்டு நிறுத்தி நிலைப்படுத்திக் கொண்டனர். யாழ் மட்டுமல்லாமல், மிடற்றுப் பாடலின் சுருதியும் தண்ணும்மை போன்ற மற்ற இசைக் கருவிகளின் சுருதியும் குழலின் பற்றை வைத்தே சுருதி சேர்க்கப்பட்டது"[55] என்கிறார் து.ஆ.தனபாண்டியன்.

இசைக்கருவிகள் இசைத்தலின் போது குழலின் ஆதார சுருதியை வைத்தே பிற இசைக்கருவிகள் இசைக்கப்பட்டுள்ளது என்பதை,

**"குழல்வழி நின்ற தியாழே யாழ்வழித்**

**தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப்**

**பின்வழி நின்றது முழவே முழவொடு**

**கூடிநின் றிசைத்த தாமந் திரிகை"**

**(சிலம்பு.அரங்கேற்று.139-142)**

என்ற பாடல் அடிகளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது.

**வரவேற்பு நிகழ்வில் குழல்**

யமுனை அருகே காளிந்தியெனும் நதிக்கரையில் வசிக்கும் முல்லை நில ஆயர்கள், இராமன் முதலியோர் சித்திரக் கூடத்தை விட்டு யமுனையை அடையும் போது அவர்களை வரவேற்கக் கொன்றைக் குழலினையும், வேய்குழலினையும் இசைத்துள்ளனர். இதனை,

> **"என்று காதலி னேயின னடிதொழு தேத்திக்**
> **கொன்றை வேய்ங்குழற் கோவலர் முல்லை யங் குறிஞ்சி**
> **சென்று செங்கதிர்ச் செல்வனு நடுவுறச் சிறுமான்**
> **கன்று நீர்நுகர் காளிந்தி யெனுநதி கண்டார்" (கம்ப.அயோத்தி.735)**

எனும் பாடல் வெளிக்காட்டுகின்றது.

**குழல் உவமையாகப் பயன்படல்**

பெண்களின் பேச்சிற்குக் குழல் உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

> **"குழலிசை மடந்தையர் குதலை கோதையர்**
> **மழலையங் குழலிசை மகர யாழிசை" (கம்ப.பால.136:1-2)**

எனும் பாடலடிகள் உணர்த்தும். சோலைகளிலுள்ள வண்டுகளின் ஒலியானது புல்லாங்குழலின் ஓசைக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

> **"சோலைத் தும்பி மென்குழ லாகத் தொடை மேவும்"**
> **(கம்ப.பால.1007:1)**

எனும் பாடலடி விளக்கும்.

**குழல் வகைகள்**

சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் கண்ணனின் ஊது குழலைப் பற்றி விவரிக்கும் போது கொன்றைத் தீங்குழல், ஆம்பல் தீங்குழல், முல்லைத் தீங்குழல் ஆகிய மூவகை குழலைக் குறிப்பிடுகிறார். இதனை,

> **"கொன்றையந் தீங்குழல் கோளாமோ தோழீ**
> **..**
> **ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ**
> **..**
> **முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ"**
> **(சிலம்பு.ஆய்ச்சியர்.19:3,20,21)**

எனும் பாடல்களின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது.

**குழலின் பாகங்கள்**

குழலின் பாகங்களை, வாய்த்துளை, விரல் துளைகள், முத்திரைத்துளை, தூம்புமுகம், அணைசு"[56] என்று ஐந்தாக வீ.க.பா.சுந்தரமும், "முதல்வாய், தூம்புமுகம், விரல் துளைகள், முத்திரைத்துளை, வளைவாய், அணைசு"[57] என்று ஆறாக து.ஆ.தானபாண்டியனும் குறிப்பிடுகின்றனர்.

**குழல் - துளை பற்றுவன விடுப்பன**

'துளை பற்றுவன' என்பது குழல் இசைத்தலின் போது விரல்கள் கொண்டு துளைகளைத் திறந்து இசையினை உண்டாக்குவது. 'துளை விடுப்பன' என்பது குழலில் பண்ணுக்குரியதல்லாத சுரத் துளைகளினை விரல் கொண்டு மூடியிசைப்பதாகும். இதை,

> **"மேயதுளை பற்றுவன**
> **விடுப்பனவாம் விரல்நிரையில்" (பெரியபு.956:2)**

என்ற பாடலின் மூலமாக அறிய முடிகின்றது.

**சங்கு**

இயற்கை நமக்குத் தந்த இசைக்கருவி சங்கு. இக்கருவியை நெய்தல் நில மக்கள் முதலில் இசைத்திருப்பர் எனலாம். கடலில் கிடைத்த சங்கை மரங்கலங்களைச் செலுத்தத் தொடங்கும் முன்பும், நிறுத்தும் போதும் இசைத்துள்ளனர். பழங்காலம் முதல் இக்கருவி மக்களிடையே புழக்கத்தில் இருந்துள்ளது. எனவேதான் திருமணச் சடங்குகள், விழாக்கள், போர், இறப்புச் சடங்குகள், வழிபாடுகள் என அனைத்துப் பண்பாட்டுச் சடங்குகளிலும் சங்கு பயன்படுத்தப்பட்டுள்ளது. தமிழரின் பண்பாடு சார்ந்த இசைக்கருவி சங்கு. இது இறப்புச் சடங்குகளில் அமங்கல ஓசையாகவும், திருமணச் சடங்குகளில் மங்கல ஓசையாகவும் போற்றப்படுகிறது. சங்கின் சுரியின் முனையிலே ஒரு சிறு துளை செய்து, அங்கு வாயை வைத்து ஊதினால் ஒரு சிறப்பான 'பூம்' என்ற ஓசையெழும். அவ்வோசை நெடுந்தூரம் கேட்கும். தெய்வம், பெரியோர் முதலியோர் வரவையும், மரக்கலம், வருவது, புறப்படுவது ஆகியவற்றைத் தெரிவிப்பதற்கும் சங்கு ஊதி வந்தனர்.

சங்கைச் சிறப்பாக அலங்கரித்துள்ளனர். சங்கை அலங்கரிக்க உலோகங்களைப் பயன்படுத்தியுள்ளனர். தங்கம், வெள்ளி போன்ற விலையுயர்ந்த உலோகங்களைப் பயன்படுத்தி ஊதுகின்ற இடத்தில் ஒரு வாய் போன்ற உறுப்பையும், சங்கின் கடைப்புறத்தையடுத்து அன்னப்பறவையின் வால் போன்று சித்திரத்தில் அமைப்பது போன்ற வடிவில் அழகான பூங்கொடி போன்றும் அமைத்துள்ளனர்.

**சங்கின் பெயர்கள்**

தமிழரின் வாழ்வியலில் முக்கியப் பங்கு கொண்ட சங்கிற்குப் பல பெயரிட்டுள்ளனர். இச்சங்கினைக் கோடு, வலம்புரி, வளை, பணிலம் என்ற பல்வேறு பெயர்களால் அழைத்துள்ளனர். இதனை,

**“முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தன**
**பணிலம்வெண்குடை” (சிலம்பு.மங்கல.46)**

**“வால்வளை மேனி வாலியோன் கோயிலும்”**
**(சிலம்பு.இந்திர.171)**

**“தெய்வ வுத்தியொடு செழுநீர் வலம்புரி”**
**(சிலம்பு.கடல்ஆடு.106)**

**“கொம்பு துந்துமி கோடதிர் பேரிகை” (கம்ப.அயோத்தி.654:1)**

எனும் பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது. சங்கானது நந்து என்ற பெயரிலும் அழைக்கப்பட்டுள்ளது என்பதை,

**“மூக்கிற் றாக்குறு மூரி நந்துநேர்” (கம்ப.பால.89:1)**

**“நத்தொலி முரசொலி நடுக்க லாற்றலை” (கம்ப.யுத்த.1990:3)**

எனும் பாடலடிகள் விளக்கும்.

**வரவேற்பில் சங்கு**

வரவேற்பு நிகழ்வில் சங்கினை இசைத்து வரவேற்புச் செய்துள்ளனர் என்பதை,

**“முரசொடு சங்கம் ஆர்ப்ப**
**முழங்கொலி ஒருபால் வென்றி” (பெரியபு.106:3)**

என்னும் பாடலின் மூலமாக அறியலாம்.

**விடை கொடுத்தல் நிகழ்வில் சங்கு இசைத்தல்**

விடை கொடுத்தல் நிகழ்வின் போது சங்கினை இசைத்து விடை கொடுத்து அனுப்பி வைத்துள்ளனர். இதனை,

> **"எல்லைஇல் முத்தின் காளம்**
> **தாரை சங்கு எங்கும் ஓத"** (பெரியபு.2646:4)
> **"ஆர்கலியின் கிளர்ச்சி எனச் சங்கு தாரை**
> **அளவிறந்த பல்லியங்கள் முழக்கி ஆர்த்துப்"**
> (பெரியபு.2807:3)
> **"துங்க வெண்திரைச் சுரிவளை ஆர்ப்பொடு சூழ்ந்து**
> **பொங்கு பேரொலி முழக்குடன் எழுந்தது புணரி"**
> (பெரியபு.3095:4)

என்ற பாடலடிகளின் வாயிலாக விடை கொடுத்தல் நிகழ்வில் சங்கானது இசைக்கப்பட்டுள்ளமை புலப்படுகின்றது.

**திருமண நிகழ்வில் சங்கிசைத்தல்**

திருமண நிகழ்ச்சியில் சங்கு, வெற்றிலை, பாக்கு, மஞ்சல் அரிசி போன்றவை மங்கலப் பொருள்களாகும். இந்நிகழ்வில் சங்கின் ஒலியை மிக இன்றியமையாததாகவும் மங்கல ஒலியாகவும் போற்றியுள்ளனர். இன்றும் மக்களின் வாழ்வியல் சார்ந்த சடங்குகளிலும், விழாக்களிலும் சங்கிற்குச் சிறப்பானப் பங்குண்டு. திருஞானசம்மந்தர் திருமணத்தில் சங்கானது இசைக்கப்பட்டுள்ளதை,

> **"சங்கொடு தாரை சின்னம்"**
> ..
> **திருமணம் எழுந்த தன்றே"** (பெரியபு.3102)

எனும் பாடல் விளக்குகிறது. மேலும் திருஞானசம்மந்தரின் திருமண ஊர்வலத்தில் சங்கு இசைக்கப்பட்டதை,

> **"எழுந்தன சங்க நாதம்**
> **இயம்பின இயங்கள் எங்கும்"** (பெரியபு.3121:1)
> **"பொன்னணி சங்கின் வெள்ளம்**

**பொலிடன் முழங்கி ஆர்ப்ப" (பெரியபு.3129:1)**

என்ற பாடலடிகளின் வாயிலாக அறிய முடிகின்றது.

**தூது பொருளாக சங்கு**

மிதிலை நகரை நோக்கி தசரதன் தன் படையுடன் செல்லும் போது சந்திர சைல மலையிடத்து அரசன் தங்கியிருந்த இடத்தில் இசைக்கப்பட்ட சங்கின் ஒலரி மூலமாக அரசன் இருக்கும் இடத்தை அறிந்து அவ்விடம் அடைந்தார். இதனை,

**"இடிக்குமுர சக்குரலி னேங்குமுரல் சங்கின்**
**கொடிக்களி னுணர்ந்தரசர் கோநக ரடைந்தார்"**

**(கம்ப.பால.911:3-4)**

எனும் பாடலடிகளிலிருந்து அரசன் தங்கியிருக்கும் இடத்தை அறிய, சங்கின் ஒலியானது தூதுப் பொருளாக இருந்துள்ளமை புலனாகிறது.

**இறப்பு நிகழ்வில் சங்கு**

பண்டைய காலத்திலும், தற்பொழுதும் சங்கானது இறப்பு என்ற அமங்கல நிகழ்வில் இசைக்கப்பட்டுள்ளது.

பள்ளிப்படைப் படலத்தில் தசரதன் உடலை யானைமீது வைத்துக் கொண்டு செல்லும் போது சங்கு இசைக்கப்பட்டுள்ளதை,

**"சங்கு பேரியுந் தழுவு சின்னமும்**
**எங்கு மெங்குநின் றிரங்கி யேங்குவ**
**மங்கு றோய்நகர் மகளி ராமெனப்**
**பொங்கு கண்புடைத் தழுவ போன்றவவே"**

**(கம்ப.அயோத்தி.935)**

எனும் பாடலின் மூலம் அறிய முடிகின்றது.

**போரில் சங்கு**

மகாபாரதத்திலும் போரின் தொடக்கத்தில் கிருஷ்ணன் சங்கு ஊதித் தொடங்குவார். வெற்றியிலும் சங்கு ஊதி முழங்குவதைப் பாரதிதாசன் 'சங்கே முழங்கு' என்பது கொண்டு உணரலாம்.

போர்க்குச் செல்லும் போது சங்கினை இசைத்துச் சென்றுள்ளனர் என்பதை,

**“முரசு மாமுரு டும்முரல் சங்கமும்”** (கம்ப.யுத்த.997:1)

**“தாமக் குடைமீ துயரப் பெருஞ்சங்கம் விம்ம”**

(கம்ப.யுத்த.1977:3)

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. மேலும் போர் தொடங்கும் போது சங்கினை இசைத்துப் போரினைத் தொடங்கியுள்ளனர். இதனை,

**“கரந்தது வயிற்றுக் கால வலம்புரி கையின் வாங்கிச்**
**சிரம் பொதிர்ந் தமர ரஞ்ச வூதினான் திசையுஞ் சிந்த”**

(கம்ப.யுத்த.2405:3-4)

எனும் பாடலடிகளின் மூலம் இராவணன் மகனான இந்திரசித்து வலம்புரிச் சங்கினை ஊதிப் போரினைத் துவங்கினான் என்பதை அறிய முடிகின்றது. மேலும் போர் நடை பெற்றுக் கொண்டிருக்கும் போது, போர் புரியும் வீரர்களுக்குப் போர் வெறியினை ஊட்டச் சங்கினை இசைத்துள்ளனர்.

**“கண்ட சங்கர நான்முகன் கைத்தலம்**
**விண்ட சங்கத் தொல்லண்டம் வெடித்திட**
**அண்ட சங்கத் தமரர்த மார்ப்பெலாம்**
**உண்ட சங்கம் இராவண னூதினான்”** (கம்ப.யுத்த.3695)

என்ற பாடலில் போர் நடைபெற்றுக் கொண்டிருக்கும் போது இராவணன் தன் சங்கை ஊதித் தன் படைப் போர் வீரர்களை உற்சாகம் ஊட்டினான் என்ற குறிப்புக் கம்பராமாயணத்தில் காணப்படுகிறது.

போர்க்களத்தில் இசைக்கப்படும் சங்கின் ஓசையானது எதிர்ப் படை வீரர்களுக்கு அச்சத்தை உண்டாக்கும் என்பதை,

**“அன்னார் தாமு மார்கலி யேமு மெனவார்த்தார்**
**மின்னார் வான மிற்றுறு மென்றே விளிசங்கம்**
**கொன்னே யூதித் தோள்புடை கொட்டிக் கொடுசார்ந்தார்**
**என்னாம் வைய மென்படு மாலித் திசையேதாம்”**

(கம்ப.யுத்த.3446)

எனும் பாடலடிகள் கொண்டு உணரலாம்.

**சங்கு உவமையாகப் பயன்படல்**

சேவல் கூவும் ஓசைக்கு, சங்கினது ஓசை உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"முள்வாய்ச் சங்க முறைமுறை யார்ப்ப"**

**(சிலம்பு.அந்திமாலை.78)**

எனும் பாடலடியும், சங்கின் நிறத்திற்குப் பால தேவன் நிறம் உவமையாகச் சுட்டப்பட்டுள்ளதை,

**"வால்வளை மேனி வாலியோன் கோயிலும்"**

**(சிலம்பு.இந்திர.171)**

எனும் பாடலடியும், பரிசுத்தமான தன்மையையுடையவளான சீதையை உவமையாகக் கூறியுள்ளதை,

**"சங்கிற் பொலிந்த தகையாளைப்" (கம்ப.யுத்த.3:2)**

எனும் பாடலடியும்,

இராமன் கழுத்துக்குச் சங்கானது உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"இடத்துறை சங்கமொன் றிருக்க வெங்களால்"**

**(கம்ப.சுந்தர.538:4)**

எனும் பாடலடியும் கொண்டு சங்கு உவமையாகப் பயன்படுத்தியுள்ளதை அறிய முடிகிறது. சங்கில் மூக்குப் போன்ற இடத்தில் வாயினை வைத்து ஊத வேண்டும். இதனை,

**"மூக்கிற் றாக்குறு மூரி நந்துநேர்" (கம்ப.பால.89:1)**

எனும் பாடலடி விளக்குகின்றது.

**தாரை**

தாரை என்பது 12 அடி நீளத்தில் செய்யப்படும். ஊதும் பகுதி சிறுத்தும், இடைப்பகுதி மேல்நோக்கி வளைந்தும், அடிப்பகுதி அகன்றும் காணப்படும். பழந்தமிழரின் சிறப்பான ஊதுகருவி தாரை ஆகும். மரியாதையின் அடையாளமாகக் கருதப்படும் கிராமிய இசைக்கருவிகளில் இது முதன்மையானது. கோவில்களில் சுவாமி புறப்பாட்டின் போதும்,

தேர்த்திருவிழாக் காலத்திலும், விழாக் கொண்டாட்டங்களிலும் இக்கருவி இசைக்கப்படுவதுண்டு. தாரை இசைத்து, தப்பட்டை அடித்து வரவேற்பு வழங்குவதும், சடங்குகளை நிகழ்த்துவதும் தமிழ்ச் சமூகத்தின் சடங்குளில் ஒரு கூறாகும்.

**வரவேற்பு நிகழ்வில் தாரை இசைத்தல்**

மதுராபுரியின் அரசன் இறந்த நிலையில் பட்டத்து யானையினைக் கொண்டு மன்னனைத் தேர்வு செய்கின்றனர். அப்போது பட்டத்து யானை மூர்த்தி நாயரைப் பொன்னாலான அணிகலன் நிலத்தில் தோயுமாறு பணிந்து தாழ்ந்து அவரை அரசனாகத் தேர்வு செய்து தம் பிடரியில் ஏற்றி வரும் போது தாரை இசைத்துப் பட்டத்து யானையினையும், மன்னன் மூர்த்தி நாயனாரையும் வாழ்த்தொலி எழுப்பி வரவேற்புச் செய்துள்ளதை (பெரியபு.1006) என்னும் இப்பாடல் விளக்குகின்றது. இராமன் திருமணத்திற்காகத் தசரதன் திருமணம் நடக்கவிருக்கும் மண்டபத்தைச் சேனைகளோடும், மன்னர்களோடும் அடையும் போது அவர்களை வரவேற்புச் செய்யத் தாரையானது இசைக்கப்பட்டுள்ளது. இதனை,

**"மங்கல முரசின மழையி னார்த்தன**

**சங்குகண் முரன்றன தாரை போரெனப்" (கம்ப.பால.1284:1-2)**

என்ற பாடல் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

போருக்குச் செல்லும் படை வீரர்கள் தாரையினை இசைத்துச் சென்றுள்ளனர் என்பதை,

**"சங்கொடு தாரை காளம்**

**...**

**மருங்கெழுந்து இயம்பி மல்க" (பெரியபு.581)**

என்ற பாடல் உணர்த்துகின்றது.

திருஞானசம்மந்தர் சீர்காழி வந்து, அடுத்துத் திருக்கண்ணார் கோவிலுக்குச் செல்கின்றார் என்ற செய்தியைத் தாரையினை இசைத்து மக்களுக்கு அறிவித்துள்ளனர். இதனைப் பெரியபுராணப் பாடல்கள் 2522, 2523 இல் காணலாம்.

**விடைகொடுத்தல் நிகழ்வில் தாரை**

பதினான்கு ஆண்டு வனவாசம் சென்ற இராமனை மீட்டுவரப் பயணமாகப் பரதன் தம் சேனையோடு செல்லும் போது தாரையினை இசைத்து விடை கொடுத்துள்ளனர். இதனை,

**"தாரையுஞ் சங்கமுந் தாளங் கொம்பொடு" (கம்ப.அயோத்தி.984:1)**

எனும் பாடல் பதிவுசெய்துள்ளது.

**திருமண நிகழ்வில் தாரை**

திருஞானசம்மந்தர் திருமணக் கோலம்பூண்டு ஊர்வலம் செல்லும் போது தாரையினை இசைத்து ஊர்வலம் சென்றுள்ளனர். இதனை,

**"ஏரணி காளம் சின்னம்**

**இலங்குஒளித் தாரை எல்லாம்" (பெரியபு.3123:2)**

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

**சின்னம்**

" 'ஓம்..' என்ற ஒலி முகிழும் இசைக்கருவி தான் திருச்சின்னம். இது மிக நுட்பமான ஊதுகருவி. அனசு, உலவுடன் கூடிய இரண்டு நீளமான பித்தளைக் குழல்கள். குவிந்து கூர்ந்து நிற்கும் முகப்பு இரண்டையும் ஒரு சேர வாயில் வைத்து ஊத வேண்டும். மிகுந்த பயிற்சியும், வலுவும் உள்ளவர்கள் மட்டுமே வாசிக்கத்தகுந்த இந்த இசைக்கருவி, சில வழிபாட்டில் பூதகண வாத்தியங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. திருச்சீரணம், திருச்சூரணம் என்றும் அழைக்கப்படுகிறது."[58] என வெ.நீலகண்டன் உரைக்கின்றார். வழிப்பறி செய்து வாழ்வினை நிகழ்த்தும் மறவர்கள் நள்ளிரவில் சூறையாடும் போது ஊது கொம்பினை இசைத்துச் சூறையாடியுள்ளனர். இதனை,

**"துடியொடு சிறுபறை வயிரொடு துவைசெய**

**வெடிபட வருபவ ரெயினர்க ளரையிருள்**

**அடுபுலி யனையவர் குமரிநி னடிதொடு**

**படுகட னிதுவுகு பலிமுக மடையே" (சிலம்பு.வேட்டுவ.20)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

சிவபிரான் அந்தணர்கள் கனவில் தோன்றி திருஞானசம்பந்தரிடத்தில் ஊது கருவியான திருச்சின்னத்தைக் கொடுங்கள் என்று கூறியதை,

**"ஆன சின்னம் நம் பால்கொண்டு அருங்கலைக்**

**கோன வன்பால் அனைந்து கொடும்என"** (பெரியபு.2100:3-4)

எனும் பாடல் வழி அறியலாம்.

சின்னம் ஓர் ஊது கருவி என்பதை,

**"பொங்க ஊதும் பொரு அரும் சின்னமும்"** (பெரியபு.2104:3)

எனும் பாடலடி விளக்கும்.

திருஞானசம்மந்தரின் திருமண நிகழ்வில் சின்னங்கள் ஒலிக்கப்பட்டதை,

**"சங்கொடு தாரை சின்னம்**

**தனிப்பெரும் காளம் தாளம்**

**...**

**எங்கணும் எழுந்து மல்கத்**

**திருமணம் எழுந்த தன்றே"** (பெரியபு.3102)

என்றும்,

**"எண்ணில பலவும் ஏத்திச்**

**சின்னங்கள் எழுந்த போதுஅவ்"** (பெரியபு.3124:2)

என்னும் இப்பாடல்களின் வாயிலாக அறிய முடிகின்றது.

காகளம் - சிறுசின்னம். தசரதன் அங்கத நாட்டுக்குச் செல்லும் போது சிறுசின்னத்தை இசைத்துச் சென்றுள்ளனர் என்பதை,

**"காகளமும் பல்லியமுங் கனைகடலின் மேன் முழங்கக் கானம் பாட"**

**(கம்ப.பால.237:1)**

எனும் பாடற் குறிப்பு உணர்த்துகின்றது.

பள்ளிப்படைப் படலத்தில் தசரதன் இறந்த நிலையில் அவனது பூத உடலை யானையின் மீது ஏற்றிக் கொண்டு செல்லும் போது சின்னம் ஒலிக்கப்பட்டதை,

**"சங்கு பேரியுந் தழுவு சின்னமும்"** (கம்ப.அயோத்தி.935:1)

எனும் பாடல் புலப்படுத்துகின்றது.

சுரவாதத்திலும், அனல் வாதத்திலும் வெற்றி கொண்டு மீண்டும் வைகை ஆற்றில் புனல் வாதத்தில் வெற்றி கொள்ள திருஞானசம்மந்தர் வந்துள்ளார் என்ற செய்தியை எட்டுத்திசைகளிலும் அறிவிக்கச் சின்னம் பயன்படுத்தப்பட்டதை, (பெரியபு.2713:3-4) என்ற பாடலடி குறிப்பிடுகின்றது.

சின்னத்தின் ஓசைக்கு உயர்திணை உயிர்களான மக்கள் மட்டுமின்றி அஃறிணை உயிரினங்களான விலங்குகளும் மயங்கும் என்பதை,

**"பூதிநிறை கடல் அணைவது என்னச் சண்பைப்**
**புரவலனார் எழுந்தருளும் பொழுது சின்னத்**
**தீதுஇல் ஒலி பலமுறையும் பொங்கி எங்கும்**
**திருஞானசம்பந்தன் வந்தான் என்னும்" (பெரியபு.2919:2-3)**

எனும் பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

**கொம்பு**

கொம்பு என்னும் இசைக்கருவி விலங்குகளின் கொம்புகளில் துளையிட்டுச் செய்யப்படுவதாகும். இது இன்று உலோகங்களாலும் செய்யப்படுவதுண்டு. கொம்பானது வாயில் வைத்து ஊதுகின்ற பகுதி குறுகியும் மறுமுனை அகன்றும் குழல் போன்று வடிவமைக்கப்பட்டிருக்கும். இக்கருவியானது நீண்ட ஒளி எழுப்பும் தன்மையுடையது.

'சி', 'எஸ்' ஆகிய ஆங்கில எழுத்துகளைப் போன்ற வளைவுகள் கொண்டது இந்த இசைக்கருவி. இக்கருவி சுமார் ஐந்து கிலோ எடையை உடையது. இன்றையக் காலத்தில் ஊதப்படும் கொம்புக் கருவிகள் ஐம்பொன்னால் செய்யப்பட்டவை. இதன் ஊதும் பகுதி சிறுத்தும், அடிப்பகுதி சற்றே விரிந்தும் காணப்படும். இலக்கியங்களில் 'கோடு' என்ற பெயரால் குறிக்கப்பட்டுள்ளது. இக்கருவியை இசைப்பவர்கள் 'கோடியர்' என அழைக்கப்பட்டுள்ளனர். நாதம் சிதறிய நாதஸ்வரத்தின் இசை, பெரும் இரைச்சல் கலந்து பாய்வதைப் போன்ற சத்தம் எழுப்பும் இக்கருவி உக்கிரமான தெய்வங்களைச் சாந்தப்படுத்த உகந்த கருவியாகக் கோவில்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

வழிப்பறி செய்து வாழ்வதைத் தொழிலாகக் கொண்டு வழிநடப்போர்க்குத் துன்பம் தருவது அல்லாமல், வேறு நல்லதைச் செய்யாத இரக்க குணம் அற்ற மறவர்கள் வரும் போது கொம்பினை ஊதிக் கொண்டு வருவார்கள் என்பதை,

**“துடியொடு சிறுபறை வயிரொடு துவைசெய**

**வெடிபட வருபவ ரெயிணர்க ளரையிருள்”**

**(சிலம்பு.வேட்டுவ.20:1-2)**

எனும் பாடலடிகள் விளக்கும்.

வில்விழாவில் வேட்டுவ வீரர்கள் கொம்பினை ஊதி ஆரவாரம் செய்து ஊரினை வலம் வந்ததை,

**“தொண்டக முரசும் கொம்பும்**

**...**

**குறிஞ்சியை வலம் கொண்டார்கள்” (பெரியபு.687)**

என்ற பாடல் குறிப்பிடுகின்றது.

இராவணன் மகனான இந்திரசித்து இராமன், இலக்குவணனை எதிர்த்துப் போர்புரியச் செல்லும் போது ஊது கொம்பு இசைக்கும் சேனையோடு போருக்குச் சென்றான். இதனை,

**“சங்கொலி வயிரி னோசை யாகுளி தழங்கு காளம்”**

**(கம்ப.யுத்த.2399:1)**

எனும் பாடலடியின் மூலமாக அறியமுடிகின்றது.

**வரவேற்பு நிகழ்வில்**

திருஞானசம்மந்தரைப் பகுவூர் அந்தணர்கள் வரவேற்புச் செய்த போது கொம்பினை ஊதி வரவேற்புச் செய்தனர் என்பதை,

**“மறைமு ழங்கின தழங்கின**

**வண்தமிழ் வயிரின்” (பெரியபு.2136:1)**

என்ற பாடல் விளக்குகிறது.

**விடை கொடுத்தல் நிகழ்வில்**

தசரதன் விதேக நாட்டை நோக்கிப் பயணம் செல்கையில் அவரை வழி அனுப்பும் நிகழ்வில் கொம்பினை இசைத்து வழி அனுப்பி வைத்துள்ளனர். இதனை,

**"சங்கமும் பணையுங் கொம்புந் தாளமுங் காளத் தோடு"**

**(கம்ப.பால.892:1)**

என்ற பாடல் உணர்த்துகின்றது.

**எக்காளம்**

எக்காளம் என்பது 'பொம்' என்ற ஓலியை எழுப்பும் பித்தளையால் ஆன நீண்ட ஊது கருவி. "தாமிரம் அல்லது பித்தளையால் செய்யப்பட்ட நான்கு குழாய்கள் பொருந்தும் அமைப்புள்ள அக்குழாய்களை இணைத்து நாதசுவரத்தைப் போல் வாய் வைத்து ஊதுகிற ஊது கருவியே எக்காளம்"[59] என்று வெ.நீலகண்டன் குறிப்பிடுகின்றார்.

செம்மை விளங்கும் மெய்ஞ்ஞானம் பெற்ற திருஞானசம்மந்தர் திருப்பாச்சிலாசிரமம் எனும் ஊரை வந்தடைந்தார் என்ற செய்தியை அறிவிக்க எக்காளத்தினை இசைத்துள்ளனர். இதனை,

**"அவ்வளவில் ஆளுடைய பிள்ளையார்**

**...**

**தனிக்காளத்து எழுந்த ஓசை"** (பெரியபு.2216:1-3)

எனும் பாடலின் வாயிலாக அறிய முடிகின்றது. இதிலிருந்து எக்காளம் செய்தியை அறிவிக்கும் ஊடகமாக இருந்துள்ளமைப் புலனாகுகிறது.

திருஞானசம்மந்தரைப் பழுவூர் அந்தணர்கள் வரவேற்புச் செய்யும் போது எக்காளத்தினை இசைத்து வரவேற்றுள்ளனர். இதை,

**"குறைந ரன்றன முரன்றன**

**வளைக் குலம் காளம்**

**முறைஇ யம்பின இயம்பல**

**ஒலித்தன முரசப்"** (பெரியபு.2136:2-3)

எனும் பாடலடிகள் விளக்குகின்றது.

திருஞானசம்மந்தர் சீர்காழியில் இருந்து திருக்கண்ணார் கோவிலுக்குச் செல்லும் போது, விடை கொடுத்தல் நிகழ்வில் எக்காளத்தினை இசைத்து விடையனுப்பியுள்ளனர் என்பதை,

**"எண்ணில் முரசு இரண்கிளழப் பணிலம் ஆர்ப்ப**

**இலங்கியகா ளமசின்னம் எங்கும் ஊத"** (பெரியபு.2159:2)

எனும் பாவடி மூலம் அறிய முடிகின்றது.

திருமண நிகழ்விற்காக அலங்காரம் செய்யப்பட்ட வீதியில் திருஞானசம்பந்தர் திருமணக் கோலம் பூண்டு ஊர்வலம் செல்லும் போது எக்காளம் இசைத்துச் சென்றுள்ளனர். இதனை,

**"ஏரணி காளம் சின்னம்**

**இலங்குஒளித் தாரை எல்லாம்**

**பேரொலி பெருக முன்னே**

**பிடித்தன மறைக ளோடு"** (பெரியபு.3123:2-3)

எனும் பாடல் விளக்குகிறது.

தசரத சக்கரவர்த்தி விதேக நாட்டை நோக்கித் தம் சேனைகளோடு செல்லும் போது எக்காளம் இசைக்கப்பட்டுள்ளதை,

**"சங்கமும் பணையுந் கொம்புந் தாளமுங் காளத் தோடு**

**...**

**திங்கள்வெண் குடைகண் டோடத் தேவரு மருளச் சென்றான்"**
(கம்ப.பால.892)

என்னும் பாடல் மூலம் அறியமுடிகின்றது.

போருக்குச் செல்லும் சேனைகள் எக்காளத்தினை இசைத்துப் போருக்குச் சென்றுள்ளனர் என்பதை,

**"சங்கொலி வயிரி னோசை யாகுளி தழங்கு காளம்"**

(கம்ப.யுத்த.2399:1)

**"சங்கு பேரியுங் காளமுந் தாளமுந் தலைவர்"** (கம்ப.யுத்த.2496:1)

எனும் பாவடிகள் சுட்டுகின்றன.

**நரம்புக்கருவி**

நரம்பபுக்கருவிகளைத் தந்தி கருவிகள் என்றும் கூறுவர். இருபுறமும் இழுத்துக் கட்டப்பட்ட நரம்புகளை மீட்டுவதால் இனிய இசை பிறக்கின்றது. நரம்புக்கருவிகள் "தந்தி அசையும் போது காற்றில் துடிப்புகளை ஏற்படுத்தி ஒலி உருவாகி இசை பிறக்கிறது"[60] என்கிறார் நா.மம்மது.

**யாழும் வீணையும்**

யாழும், வீணையும் ஒன்று என்ற கருத்தும், யாழின் படிப்படியான வளர்ச்சிதான் வீணை என்றும் சிலர் கூறுகின்றனர். யாழும், வீணையும் வெவ்வேறு என்ற கருத்தினையும் சிலர் முன் வைக்கின்றனர். தொல்காப்பியம் மற்றும் சங்க இலக்கியங்களில் யாழ் பற்றிய குறிப்புகள் உள்ளன. வீணை பற்றிய குறிப்புகள் இடம்பெறவில்லை. காப்பியங்களில் வீணை பற்றிய குறிப்புகள் இடம் பெறுகின்றன. ஐம்பெரும் காப்பியங்களில் முதன்மைக் காப்பியமான சிலப்பதிகாரத்தில் யாழ் பற்றிய குறிப்புகள் அதிக அளவில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் இந்திரலோக புராண நிகழ்வினை உரைக்கும் போது,

**"நாரதன் வீணை நயந்தெரி பாடலும்" (சிலம்பு.கடலாடு.18)**

**"மங்கலமிழப்ப வீணை மண்மிசைத்" (சில்பு.கடலாடு.22)**

என்ற இரண்டு இடத்தில் மட்டும் குறிப்பிட்டுள்ளார். இதன் வழி நோக்கும் போது இளங்கோவடிகள் காலத்திற்கு முன்னர், 'வீணை' என்ற ஓர் இசைக்கருவி, மக்கள் வழக்கில் இருந்ததாகத் தெரியவில்லை.

**யாழ் பெயர்க் காரணம்**

யாழ் என்பது தென்னாட்டின் தமிழ்ச்சொல். தொன்மையான தமிழ் இலக்கியங்களிலும் இலக்கணங்களிலும் இடம்பெற்றுள்ள இசைக்கருவி. மக்களின் வாழ்க்கையோடு கலந்து மிகுந்த புகழ் பெற்று விளங்குகிறது. 'யாழ்' எனும் சொல் - தொன்மையும் சிறப்பு ழகரமும் பெற்றுள்ளது. இக்கருவியின் பெயர் 'யா' என்னும் வேர்ச்சொல்லால் உருவானதாகும். யா+ழ்=யாழ். யா=கட்டு. யாழ்=கட்டப்பட்டது. நரம்புகளால் கட்டப்பெற்றது. எனவே யாழ் என்பது காரணப்பெயராக அமைந்துள்ளது. "யாப்பு - யானைத்

தந்தத்தால் நுண்பலகைகளால் செய்யப்பட்டு யாழ்ப் பத்தரின் குறுக்கே வலிவுபெற ஒட்டப்பட்டது; இவ்வாறு தொன்மைத் தமிழ் வேர்வழி பிறந்து, யாழ் எனும் சொல் தொன்மை வாழ்வியலிலும் வாழ்க்கையியலிலும் நல்ல இடம் பெற்று - இலக்கியம் ஏறி, இலக்கணம் ஏறி, இசைகளைத் தோற்றுவித்து. சிறப்பு ழகரம் பெற்று விளங்கியது. எனவே யாழ் என்பது தமிழ்ச் சொல் என்றும், பிறமொழி சென்று ஏறியது என்றும் கூறலாம்."[61] என்கிறார் வீ.ப.கா.சுந்தரம்.

**யாழின் அமைப்பு**

சீவகசிந்தாமணி யாழின் அமைப்பை,

> **"விளக்குஅழல் உறுத்தபோலும் விசிஉறு போர்வைத்தீந்தேன்**
> **துளக்குஅற ஒழுகி அன்ன துய்யறத்திரண்டதிண்கோல்**
> **கொளத்தகு திவவுத் திங்கள் கோள்நிரைத்தனையஆணி**
> **அளப்பரும் சுவைகொள் நல்யாழ்ஆயிரம்அமைகஎன்றான்"**[62]

என்கிறது. இதில் விளக்கின் சுடரைச் சேர்த்து ஒளிகுன்றாமல் போர்த்த போர்வையும், தேன் அசைவின்றி ஒழுகினாற் போன்ற நார் இன்றித் திரண்ட நரம்பையும், வார்க்கட்டையையும் உடையனவாய், பாதிமதி போல் அணிகளை உடையனவாய் அளவிட முடியாத இனிமை கொண்ட அமைப்பில் யாழ் அமைக்கப்பட்ட முறை கூறப்பட்டுள்ளது.

**நரம்புகள்**

யாழில் இடம் பெற்றுள்ள நரம்புகளை,

> **"இணைகிளை பகைநட் பென்றிந் நான்கின்**
> **இசைபுணர் குறிநிலை யெய்த நோக்கிக்"**
>
> **(சிலம்பு.வேனிற்.33-34)**

என்ற பாடலின் மூலம் அறிய முடிகின்றது. யாழில் இணை நரம்பு, கிளை நரம்பு, பகை நரம்பு, நட்பு நரம்பு இடம் பெறுகின்றன. இசை புணர் குறிநிலை இளி, விளரி, தாரம், குரல், துத்தம், கைக்கிளை, உழை என ஏழு நரம்புகள் உள்ளன. இணை நரம்பு - இரண்டு நரம்புகள். கிளை நரம்பு - ஐந்தாவது

நரம்பு. பகை நரம்பு - ஆறாவது நரம்பு. மூன்றாவது நரம்பு, நான்காவது நரம்பு நட்பு நரம்புகள்.

யாழில் நான்கு வகைகள் காணப்படுகின்றன. அவை பேரியாழ், மகரயாழ், சகோட யாழ், செங்கோட்டு யாழ் என்பனவாகும். இவை அவற்றில் உள்ள நரம்புகளின் எண்ணிக்கைக்குத் தகுந்தவாறு வகைப்படுத்தப்படுகின்றன. அதன்படி, பேரியாழுக்கு 21 நரம்புகளும், மகர யாழுக்கு 19 நரம்புகளும், சகோட யாழுக்கு 14 நரம்புகளும், செங்கோட்டு யாழுக்கு 7 நரம்புகளும் கொண்டு அமைக்கப்படுகின்றன. இதனை,

**“ஒன்றும் இருபதும் ஒன்பதும் பத்துடனே**
**நின்றபதி னான்கும் பின்னேழும் குன்றாத**
**நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே**
**மேல்வகை நூலோர் விதி”**[63]

என்னும் நூற்பா விளக்குகிறது.

**யாழின் சிறப்பு**

யாழின் இசைக்கு உயர்திணைக்குரிய மனிதர்கள் மட்டுமின்றி அ.்.றிணை உயிரினங்களும் மயங்குகின்றன. அசுணம் - இசையறிவிலங்கு: இது இனிய யாழோசை கேட்டு இன்புறும் என்பதை,

**“உறைய டுத்த செவிகளுக் கோதில்யாழ்**
**நறைய டுத்த வசுணநன் மாச்செவிப்”** (கம்ப.பால.7:2-3)

என்ற பாடலின் வாயிலாக அறியமுடிகின்றது. இதேபோல் அயோத்திய நகரத்து இசையொலியின் சிறப்பைக் கூறுமிடத்து மகர யாழினை விரல் கொண்டு தடவிட எழும் இனிய சுரங்களுடன் மகளிர் பாடுகின்ற பாடலினைக் கேட்டு மகளிருடனே கொஞ்சிப் பேசுவதில் பழகியுள்ள கிளிகள் மயங்கிக் கண்களை மூடிக் கொண்டு தூங்கும் என்பதை,

**“இறங்குவ மகரயா ழெடுத்த வின்னிசை**
**…**
**உறங்குவ மகளிரோ டோதுங் கிள்ளையே”** (கம்ப.பால.141)

என்ற பாடல் விளக்குகிறது.

திருநீலகண்டர் தம் மனைவியான மதங்க சூளாமணியாருடன் இணைந்து பாடி யாழ் வாசிக்க, யாழிசையோடு இருவர் பாடும் குரல் இசையும் ஒன்றிச் சிறப்புடன் விளங்க இசைப்பறவைகளான சின்னரம், மிதுனம் எனும் பறவைகள் வானத்தில் இருந்து வந்து இவ்விசைக்கு மயங்கின என்பதை,

**“யாழில் எழும் ஓசையுடன்**

**இருவர் மிடற்று இசைஒன்றி**

**…**

**தாழும் இருசிறைப் பறவை**

**படிந்த தனி விசும்பிடை நின்று”** (பெரியபு.2039:1-3)

என்ற பாடல் மூலம் அறியமுடிகின்றது.

சீதையின் திருமணம் விரைவில் நடக்கப்போவதை எண்ணிப் பாணர்கள் இசைத்த யாழ் இசையின் ஒலியைக் கேட்டு வானவர்கள் எழுத்துச் சித்திரங்கள் போல மெய் மறந்து நின்றனர் என்பதை,

**“செயிரியர் மகர யாழின் றேம்பிழி தெய்வ கீதம்”** (கம்ப.பால.788:2)

என்ற பாடல் குறிப்பிடும்.

மானிடர்களுக்கு மதுவானது, பரவசப்படுத்திக் களிப்பைத் தருவது போல யாழின் இசையும் மனதுக்கு மிக்கக் களிப்பைத் தருகிறது. இதை,

**“இன்னிசை மணியாழி னிசைமது நுகர்வாரும்”**

(கம்ப.பால.1274:2)

என்ற பாடல் உணர்த்துகின்றது.

இராவணனது மாளிகையில் மண்டோதரி படுத்துக் கொண்டிருந்த நிலையைக் கூறும்போது அவளுக்குப் பணிவிடை செய்து மகிழ்விக்க அவளை உறங்கச் செய்ய சில மகளிர் யாழினை வாசித்துள்ளனர். யாழின் இசையானது மனதினை இலகுவாக்கித் துயில் கொள்ளச் செய்யும் என்பதை,

**“கரும்பை யுஞ்சுவை கைப்பித்த சொல்லியர் காமரங் கனியாழின்**

**நரம்பி னின்னிசை செவிபுக நாசியிற் கற்பக விரைநாற”**

(கம்ப.சுந்தர.292:3-4)

என்ற பாடல் குறிப்பிடுகின்றது.

நிந்தனைப் படலத்தில் இராவணன் சீதையை வருணிக்கும் போது உலகத்தில் சிறந்தவைகளாக குழந்தை, யாழ், விளரி எனும் பண் ஆகியவற்றைக் கூறுகிறான். இதிலிருந்து உலகத்தில் சிறந்தவைகளில் யாழும் இடம் பெற்றுள்ளதை,

**"பொருளும் யாழும் விளரியும் பூவையும்**

**மருள நாளும் மழலை வழங்குவாய்" (கம்ப.சுந்தர.436:1-2)**

என்ற பாடலடியில் கம்பர் உரைக்கிறார்.

மிதிலை நாட்டு மகளிர் கைவளைகளையும், காதணிகளையும், இரத்தினங்களையும், விலையுயர்ந்த போர்வைகளையும், மகர யாழையும் பந்தையப் பொருளாக வைத்து விளையாடியுள்ளனர். பந்தையம் வைத்து ஆடக்கூடியப் பொருள் சிறப்பானதாகவும் விலையுயர்ந்த பொருளாகவும் இருக்கக்கூடும். அவ்வகையில் நோக்கும் போது யாழ் இவ்விருபண்பிற்கும் பொருந்தும். யாழினை வைத்து மகளிர்கள் பந்தையம் ஆடியதை, (கம்ப.பால.579) என்ற பாடலின் வாயிலாக அறியமுடிகின்றது.

**இசை விருந்து**

வளைந்த தண்டினை உடைய சிறப்பான சீறிய யாழினை வாங்கி மார்பில் அணைத்துத் தழுவி, இசை பொருந்திய நரம்பினைத் தடவிப் பொருள் பொதிந்த பாடலைப் பத்தர் என்னும் உறுப்பில் வைத்துக் குரல் குரலாகப் பிறக்கின்ற செம்பாலை முதலிய பண்களுடன், துத்தம் குரலாகத் தோன்றும் படுமலைப் பண்ணையும், செவ்வழிப் பண்ணையும், குறிஞ்சிப் பண்ணையும், இசைத்துப் பாடும் மகளிர் இசையின் மூலம் தம் காதலருக்கு, இசை விருந்தை அளித்துள்ளனர் என்பதை,

**"வணர்கோட்டுச் சீறியாழ் வாங்குபு தழீஇப்**

**...**

**மைந்தர்க் கோங்கிய வருவிருந் தயர்ந்து" (சிலம்பு.நடுகற்.31-37)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

**யாழ் இசைக்கும் முறை**

இருக்கையில் நன்கு அமர்ந்து வலக்கையின் குவிந்த விரல்களை யாழின் வளைந்த தண்டின் மேல் வைத்து, யாழினை அசையாது பிடித்துக்

கொண்டு இடது கையின் நான்கு விரல்களையும் மாடகத்தின் மீது பொருத்தி, சுதிகூட்டி இன்னிசையைக் கெடுக்கும் செம்பகை, வல்லோசை தரும் ஆர்ப்பு, சிதறி ஒலிக்கும் ஆர்ப்பு, குறையொலி தரும் கூடம் ஆகிய நான்கு பெரும் குறைகள் வாசிப்பின் போது வந்து விடக்கூடாது. அவற்றைத் தவிர்க்கும் வழி அறிந்து நீக்கி; குறைகள் நீங்கிய, பதினான்கு கோவை உடைய சாகோட யாழை உழை குரலாகவும், கைக்கிளை தாரமாகவும் அமைத்து இணையாகவும், உறவாகவும் பகையாகவும், நெருக்கமாகவும் உள்ள நான்கினுள் இசை ஒத்துவரும் நிலையையும், தன் குரலோடு அது பொருந்தி வரும் சுதிச் சேர்க்கையைக் காதாலும் கேட்டு இசைபாடும் முறைப்படி கிளை நரம்பாகிய ஐந்திலும், இணை நரம்பாகிய ஏழிலும், அகநிலை மருதம், பெருகியல் மருதம் ஆகிய நான்கு வகையான பண்களையும் அவற்றின் இயல்பு கெடாத வகையில் ஏற்றம், இறக்கம், விளம்பல் என்னும் மூன்று நிலையிலும் யாழிசைத்துப் பாட வேண்டும் என்பதை,

**“வலக்கைப் பதாகை கோட்டோடு சேர்த்தி**
**இடக்கை நால்விரன் மாடகந் தழீஇச்**
**….**
**மூவகை யியக்கமு முறையுளிக் கழிப்பித்”**

**(சிலம்பு.வேனிற்.27-42)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

யாழிசைக்கும் போது செம்பகை, ஆர்ப்பு, அதிர்வு, கூட்டம் என நான்கு வகையான குற்றங்கள் ஏற்பட வாய்ப்புள்ளது.

“செம்பகை - பண்ணோடு உளராமை.

ஆர்ப்பு - ஓங்க இசைத்தல்.

அதிர்வு - நரம்பைச் சிதற உந்தல்.

கூட்டம் - தன் பகையாகிய ஆறாம் நரம்பின் இசையிற் குறைந்து தன் இசை மழுங்கல்.”[64] என்று யாழிசைப்புக் குற்றங்களை இரா.இளங்குமரன் விளக்குகிறார்.

**யாழ் வாசிக்கும் முன் செய்ய வேண்டியவை**

மிதிலை நகரத்துப் பெண்கள் கூர்மையான நகங்களையுடைய தளிர்போல மெல்லிய தமது செங்கை விரல்கள் நோகும்படி யாழின் முறுக்காணிகளைப் பிடித்துத் திருகி, ஒழுகுகின்ற தேன் தாரை போன்ற அவ்யாழ் நரம்பை இறுகக்கட்டிக் கைவிரல்களினால் தெரித்து இசை எழுப்பியதை, (கம்ப.பால.574) என்ற பாடல் விளக்குகிறது.

இதிலிருந்து யாழ் இசைப்பதற்கு முன்னர் மாடகம் என்னும் நால்விரல்களாவன பாலிகை வடிவாய் நரம்பை வீக்கும் கருவியைக் கொண்டு இசைத்துப் பார்த்து. முறுக்காணிகளைப் பிடித்துத் திருகி முறுக்கி நரம்புகளை இறுகக் கட்டிய பின்னர் தான் யாழ் இசைத்தல் வேண்டும் என்பதை அறிய முடிகின்றது.

**யாழ் வகைகள்**

மகர யாழ், சகோட யாழ், செங்கோட்டி யாழ், சீறியாழ், குறிஞ்சி யாழ், மருத யாழ், நெய்தல் யாழ் போன்ற யாழ்கள் சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம், பெரியபுராணம் ஆகிய காப்பியங்களில் இடம் பெற்றுள்ளன.

யாழ் வகைகள் பற்றி அடியார்க்குநல்லார்,

**“பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன்**
**சீர் பொலி செஞ்கோடு செப்பின ராற்றார் பொலிந்த**
**மன்ன திருமாற வண்கூடற் கோமானே**
**யின்ன முளவே பிற”**

**(சிலம்பு.அரங்கேற்று.26, அடியார்க்குநல்லார் உரை)**

என்ற சிலப்பதிகார உரையில் மூலம் நான்கு வகைகள் இருந்துள்ளமையை உரைத்துள்ளார்.

**மகர யாழ்**

மகர யாழ் 19 நரம்புகள் கொண்டது, மீன் போன்ற முகம் கொண்ட யாழ் எனவும் கூறுவர். பஞ்ச மரபு, என்னும் நூல் மகர யாழ் குறித்து,

**“கோடே பத்த லாணி நரம்பே**
**மாடக மெனப்படும் வகையின தாமே”**[65]

என கூறுகிறது. கடை மழலைச் சொற்கள் கொண்ட முடியையுடைய மங்கைப் பருவத்து மகளிரது மழலைச் சொற்களுக்கு மகர யாழ் உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"குழலிசை மடந்தையர் குதலை கோதையர்**

**மழலையங் குழலிசை மகர யாழிசை" (கம்ப.பால.136:1-2)**

என்ற பாடல் விளக்குகிறது.

**செங்கோட்டி யாழ்**

'பஞ்ச மரபு' என்னும் நூல் செங்கோட்டி யாழுக்கு

**"செங்கோட்டி யாழே செவ்விதற் கிளப்பின்**

**அறுவகை புறுப்பிற் றகுமென்ப"[66]**

என இலக்கணம் உரைக்கிறது.

சிலப்பதிகாரத்தில் செம்மையாக அமைந்த செங்கோட்டு யாழில் தந்தரிகரம், திவவு என்னும் இரண்டினையும் உறுதிபெறக் கட்டி, ஒற்று உறுப்பு இருந்ததனைப் பற்று வழியில் சேர்த்து, உழை முதலாகவும், கைக்கிளை தாரமாகவும் நரம்புகளை நிறுத்தி வரன்முறையாக வருகின்ற வளவு, மெலிவு, சமன் என்னும் மூவகைத் தானத்தாலும் கொற்றவையின் பாடலாகிய பண்ணினை, இயலுள் பொருந்திவர இயக்கிப் பாணரோடு கலந்து கோவலன் பாடி மகிழ்ந்தான் என்பதை,

**"செந்திறம் புரிந்த செங்கோட் டியாழின்**

**...**

**பாடற் பாணி யளைஇ யவரொடு" (சிலம்பு.புறஞ்சேரி.106-113)**

என்ற பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன.

**சகோட யாழ்**

சகோட யாழ் குறித்துப் 'பஞ்ச மரபு', என்னும் நூல்,

**"கோட்டத் தளவே நாற்சா ணுகும்**

**பத்த லளகு மதுவெனக் கொல்க"[67]**

என இலக்கணம் உரைக்கிறது. சகோட யாழ் 14 நரம்புகளைக் கொண்டது என்பதை,

"ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வியின்"

(சிலம்பு.அரங்கேற்று.70)

"பிழையா மரபி னீரேழ் கோவையை" (சிலம்பு.வேனிற்.31)

என்ற பாடலடிகளின் மூலம் அறிய முடிகின்றது. இச்சகோட யாழை திருநீலகண்ட யாழ்பாணர் இசைத்துள்ளார் என்பதை,

"தாங்கு நூலவர் மகிழ்வுறச்

சகோட யாழ்த் தலைவர்" (பெரியபு.1863:3)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

**சீறியாழ்**

சீறியாழும் செங்கோட்டி யாழும் ஏழு நரம்புகளைக் கொண்டிருந்தாலும், இவை இரண்டும் வெவ்வேறானவை. சீறியாழில் உள்ள போர்வைத்தோல் செங்கோட்டி யாழில் இல்லை. கோசல நாட்டில் தெளிவான இசையறிவுடைய பாடல்களைப் பாடுவதற்குரிய பாணர்கள் இருந்துள்ளனர். சீறி யாழைக் கொண்டு பாணர்கள் பாடும் பாடல் மாடத்தில் உறங்கும் மகளிரைத் துயில் எழச் செய்யும் என்பதை,

"தெள்விளிச் சீறியாழ்ப் பாணர் தேம்பிழி நறவ மாந்தி"

(கம்ப.பால.40)

என்ற பாடல் விளக்குகிறது.

**ஐவகை நிலங்களுக்குரிய யாழ்**

| நிலம் | யாழ் | பண் |
|---|---|---|
| குறிஞ்சி | குறிஞ்சி யாழ் | குறிஞ்சிப் பண் |
| முல்லை | முல்லை யாழ் | சாதாரிப் பண் |
| மருதம் | மருத யாழ் | மருதப் பண் |
| நெய்தல் | விளரி யாழ் | செவ்வளிப் பண் |
| பாலை | பாலை யாழ் | பஞ்சுரப் பண் |

"சிறுபொழுது ஆறும் பண்ணும்

| | | | |
|---|---|---|---|
| 1. | வைகறை | 2-6 மணி | மருத யாழ் |
| 2. | காலை | 6-10 மணி | முல்லை யாழ் |

| | | | |
|---|---|---|---|
| 3. | நண்பகல் | 10-2 மணி | குரல்புணர் நல்யாழ் (அரும்பாலை) |
| 4. | எற்பாடு | 2-6 மணி | நெய்தல் யாழ் |
| 5. | மாலை | 6-10 மணி | நெய்தல் யாழ் முல்லை யாழ் |
| 6. | யாமம் | 10-2 மணி | குறிஞ்சியாழ் |

| | **யாழ்** | **பாலை** | **திணை** | **பெரும்பொழுது** | **சிறுபொழுது** |
|---|---|---|---|---|---|
| 1. | முல்லை | செம்பாலை | இல்லிருத்தல் | கார் | மாலை |
| 2. | குறிஞ்சி | படுமலை | புணர்தல் | கூதிர் | நல்லிரவு |
| 3. | மருதம் | கோடி | ஊடல் | இளவேனில் | விடியல் |
| 4. | நெய்தல் | விளரி | இரங்கல் | இளவேனில் | எற்பாடு"[68] |

என்று தொல்காப்பிய இசைக் குறிப்புகளை வீ.ப.கா.சுந்தரம் சுட்டிக்காட்டுகிறார்.

**குறிஞ்சி யாழ்**

திருக்குறிப்புத் தொண்ட நாயனாரின் வாழ்க்கை வரலாற்றைச் சேக்கிழார் கூறும் போது குறிஞ்சி நிலத்தில், குறிஞ்சியாழ் குறிஞ்சிப் பண்ணை இசைக்கும் என்பதை,

**"குழல்செய் வண்டினம் குறிஞ்சியாழ்**
**முரல்வன குறிஞ்சி" (பெரியபு.1092:1)**

என்ற பாடலில் விளக்குகிறார். கம்பராமாயணத்தில் சீதையின் பேச்சிற்குக் குறிஞ்சி யாழும் பண்ணும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**"நைவள நவிற்றுமொழி நண்ணவர லோடும்"**
**(கம்ப.பால.1234:1)**

என்ற பாடலடியின் மூலம் அறிய முடிகின்றது. இதில் நைவளம் என்பது குறிஞ்சி யாழும், பண்ணும் ஆகும்.

**மருத யாழ்**

மருத நிலத்து உழவர்கள் மருத யாழினை இசைத்து மகிழ்ந்துள்ளனர் என்பதை,

> **"மாம ருங்குதண் நீழலின்**
> **மருத யாழ் முரலும்"** (பெரியபு.1115:3)

என்ற பாடலடிகளால் அறியலாம்.

**நெய்தல் யாழ்**

செவ்வழி யாழ் நெய்தல் நிலத்திற்குரிய யாழாகும். நெய்தல் நிலச் சிறுமியர்கள் கயல் மீனை விற்பதற்குக் கூறும் சொற்களுக்குச் செவ்வழியாழ் உவமையாகக் கூறப்படுகிறது. இதனை,

> **"தோம்பொ திந்தசின் மழலைமென்**
> **மொழியசெவ் வழி யாழ்"** (பெரியபு.1120:4)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

**யாழின் உறுப்புகள்**

யாழில் பலவகை உண்டு. யாழில் இடம்பெறும் உறுப்புகளிலும் மாற்றங்கள் உள்ளன. யாழின் உறுப்புகளாக "பத்தல், வறுவாய், பச்சை, போர்வை, சிறு சுள்ளாணிகள், உந்தி, தகைப்பு, பண் நரம்புகள், திவவுவார்க்கட்டுகள், மருப்பு, மாடகம், நரம்பு முடுக்காணிகள், ஒற்று நரம்புகள், வணர்மருப்பு"[69] முதலியன அமைவதை வீ.ப.கா.சுந்தரம் உரைக்கிறார்.

செங்கோட்டு யாழில், பத்தர், கோடு, ஆணி, நரம்பு ஆகியவை உறுப்பாக அமைவதை,

> **"பத்தருங் கோடு மாணியு நரம்புமென்**
> **றித்திறத்துக் குற்றநீங்கிய யாழ்கையிற் றொழுது வாங்கிப்"**
> **(சிலம்பு.கானல்.3-4)**

என்ற பாடலடிகளிலும், கோடு, திவவு, ஒற்று, தத்திரிகரம், நரம்பு முதலிய உறுப்புகள் அமைவதை,

**"செந்திறம் புரிந்த செங்கோட்டியாழின்**

**...**

**வரன்முறை வந்த மூவகைத் தானத்துப்"**

**(சிலம்பு.புறஞ்சேரி.106-110)**

என்ற பாடலடிகளிலும் கூறப்பட்டுள்ளன.

சீறியாழ் உறுப்புகளாக நரம்பு, பத்தர் உள்ளமையை,

**"வணர்கோட்டுச் சீறியாழ் வாங்குபு தழீஇப்**

**புணர்புரி நரம்பிற் பொருள்படு பத்தர்க்" (சிலம்பு.நடுகற்.31-32)**

எனும் பாடலடிகளாலும்,

மகர யாழின் உறுப்பாகக் கோடு என்ற உறுப்பு இருந்துள்ளமையை,

**"மகர யாழின் வான்கோடு தழீஇ" (மணி.பளிக்கறைபுக்க.56)**

எனும் அடி மூலமும் அறியமுடிகின்றது.

**பத்தர்**

பத்தர் என்னும் யாழின் உறுப்பு பத்தல், வயிறு, கலம், அகளம், அகடு குடம், பானை என்று பல பெயர்களில் அழைக்கப்படுகிறது. இது ஒரு பாத்திரம் போன்ற நீர் இறைக்குஞ்சாலின் வடிவத்தை ஒத்திருக்கும். இது குடத்தையொத்த அமைப்பினை உடையதால் இக்காலத்தில் இவ்வுறுப்பானது குடம் அல்லது பானை என்று வழங்கப்படுகிறது. யாழ் உறுப்புகளில் பெரியதாகவும் தோற்றத்தில் கலத்தைப் போலவும் காட்சிதருவது பத்தர். பத்தரின் பெயர்கள் அனைத்தும் இதனுடைய வடிவத்தினால் ஏற்பட்ட பெயர்களாகும்.

**ஆணி**

"ஆணி என்னுமுறுப்பு இரு வகையான பொருளைக் குறிக்கிறது. இவற்றில் ஒரு வகை நுண் துளைகிளல் இருத்தப் பெறும் சுள்ளாணிகளாகும். இவை பத்தலையும். போர்வையையும் சேர்த்து வலிபெற இறுத்தப்படுவனவாதலால் இவை முடுக்கும் தன்மையினைப்பெறா. மற்றொரு வகை ஆணிகள் திறந்து விளங்கப்பெறும் துளைகளில் அமையப்பெற்று அத்துளைகளில் திறப்பை மூடி மறைத்து விளங்குமேயொழிய

அத்துளைகளில் வலிபெற இருத்தப்படுபனவல்ல. எனவே இவை முடுக்கும் தன்மை பெற்றவை”[70] ஆகும் என்பர்.

**கோடு**

யாழில் இடம்பெற்றுள்ள கோட்டினை 'வணர் கோடு' என்றும் அழைப்பர். யாழின் மருப்பு, இறுதியில் வளைவாக அமைந்திருக்கும் என்று கோட்டின் அமைப்புப் பற்றிக் கூறப்படுகிறது.

**மாடகம்**

மாடகம் என்ற உறுப்பு, ஓர் சிறிய இடத்தைத் தன்னில் அமையப்பெற்று, மாடகம் போன்ற உருவினைக் கொண்டது. 'வணர்' என்று சொல்லப்படுகின்ற வளைவான பகுதிக்கும் கோட்டுறுப்புக்கும் இடையில் அமைந்துள்ளது. இவ்வுறுப்பு யாழில் இடம்பெற்றுள்ளதை,

> **“வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ மாடகம் பற்றி வார்ந்த**
> **கள்ளென நரம்பு வீக்கிக் கையொடு மனமுங் கூட்டி”**
>
> **(கம்ப.பால.574:1-2)**

என்ற பாடலடியின் வாயிலாக அறிய முடிகின்றது.

**மருப்பு**

மருப்பு என்பதற்கு மருப்புத் தண்டு, கோடு, தந்திரி கரம் எனப் பல பெயர்கள் உண்டு. மருப்பானது ஒலியை எதிரொலிக்கும் உறுப்பு.

**திவவு**

இது நெகிழ்வுத் தன்மை கொண்ட ஒரு கருவி. “இவை நரம்புறு தானங்களில் கட்டப்படும் வார்க்கட்டுகள். இவை மருப்பின் மேல் பொருத்தி, இறுக வேண்டியவிடத்து இறுகியும், நெகிழ வேண்டியவிடத்து நெகிழ்ந்தும் கொடுத்துப் பின் நிலைப் புற்றிருக்கும்”[71] என்பர்.

இவ்வுறுப்பானது யாழில் இடம்பெற்றுள்ளதை,

> **“தந்திரி சுரத்தொடு திவவுறுத் தியாஅத்**
> **…**
> **வரன்முறை வந்த மூவகைத் தானத்துப்”**
>
> **(சிலம்பு.புறஞ்சேரி.107-110)**

என்ற பாடலின் வாயிலாக அறிய முடிகின்றது. மேலும் இப்பாடலின் வாயிலாகக் கோடு, ஒற்று, தந்திரி, கரம் போன்ற உறுப்புகள் யாழில் இடம் பெற்றுள்ளன என்பதை அறிய முடிகின்றது.

**பண் நரம்புகள்**

பண் நரம்புகளுக்குச் சுரத்தான நரம்புகள் என்ற பெயரும் உண்டு. இசை பிறப்பதற்கு இந்நரம்புகள் அடிப்படைக் காரணம். இந்நரம்புகள் யாழுக்கு யாழ் மாற்றம் பெரும். விரல் கொண்டு முன்னும் பின்னுமாக மேலும் கீழுமாகப் பண் நரம்புகளைத் தெரிப்பதன் மூலம் இசை பிறக்கின்றது.

**இசைக் கரணங்கள்**

இசைக் கரணங்கள் எட்டு வகைப்படும். அவை, வார்த்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை என்பனவாகும். இவற்றை,

> **"வார்த்தல் வடித்த லுந்த லுறழ்தல்**
> **. . .**
> **எட்டு வகையி னிசைக்கர ணத்துப்" (சிலம்பு.காணல்.12-15)**

என்கிறது சிலப்பதிகாரம்.

"வார்த்தல் - சுட்டுவிரற் செய்தொழில்

வடித்தல் - சுட்டுவிரலும், பெருவிரலுங் கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய்தல்.

உந்தல் - நரம்புகளை உந்தி வலிவிற்பட்டதும் மெலிவிற்பட்டதும் நிரல்பட்டதும் நிரவிழிபட்டதும் என்றறிதல்.

உறழ்தல் - ஒன்றிடையிட்டும் இரண்டிடையிட்டும் ஆராய்தல்.

உருட்டல் - இடக்கைச் சுட்டுவிரல் தானே யுருட்டலும், வலக்கைச் சுட்டு விரல் தானே யுருட்டலும், சுட்டொடு பெறுரைற் கூட்டி யுருட்டலும், இரு பெருவிரலும் இயைந்துட்டலும் எனவரும் 'அள்ளல்', 'பட்டடை' என்னும் இரண்டிற்கும் உரை கிடைத்திலது. தெருடலியல்பு கூறும் சூத்திரப்பொருள் தெளிவுபட்டிலது."[72] என்று இசைக்கரணங்கள் எட்டிற்கான விளக்கங்களை யாழ் நூலில் விபுலாநந்த அடிகளார் விளக்குகிறார்.

**எண் வகை கலைகள்**

> **“பண்ணல் பரிவட்டணை யாராய்த றைவரல்**
> **...**
> **பண்வகையாற் பரிவுதீர்ந்து” (சிலம்பு.கானல்.5-9)**

சிலப்பதிகாரத்தில் எண் வகைக் கலைத்தொழிலாகப் பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், கண்ணியச் செலவு, விளையாட்டு, கையூழ், நண்ணியக் குறும்போக்கு ஆகிய எட்டும் யாழின் எண் வகை கலைகளாகக் கூறப்பட்டுள்ளன.

“பண்ணல்: பாட எழுந்த பண்ணுக்கு இணை, கிளை, பகை, நரம்புகள் பெயரும் (இயங்கும்) தன்மை, மாத்திரை அறிந்து கட்டுதல்.

பரிவட்டணை: கட்டிய நரம்பை அகவிரலாலும் வினை செய்து தடவி பார்த்தல்.

ஆராய்தல்: ஏறுவரிசை இறங்கு வரிசையால் இசையைத் தெரிதல்.

தைவிரல்: சுருதி ஏற்றுதல்.

செலவு: ஆளத்தியில் நிரம்பப்பாடுதல்.

விளையாட்டு: பாடநினைத்த வண்ணத்தில் சந்தத்தை விடுதல்.

கையூழ்: வண்ணத்தில் செய்த பாடல்களை இனிதாகப் பாடல்.

குறும்போக்கு: குறுகச் செலவும் துள்ளற் செலவும் பாடுதல்.”[73] என்று எண்வகைக் கலைகளுக்கான விளக்கங்களை இரா.இளங்குமரன் எடுத்துரைக்கிறார்.

**யாழ் இசைக்கும் காலம்**

யாழினைப் பெரும்பாலும் அனைத்து நேரங்களிலும் இசைத்திருப்பினும் குறிப்பிட்ட சில நேரங்களில் சில யாழினை இசைத்துள்ளமையைச் சுட்டிக்காட்டி உள்ளனர்.

**அதிகாலைப் பொழுது**

கோசல நாட்டில் சிறிய யாழினைக் கொண்டு அதிகாலைப் பொழுதில் பாணர்கள் பாடும் பாடலானது மாடத்தில் உறங்கும் மகளிரைத் துயிலெழச் செய்கிறது. இதனை,

**“தெள்விளிச் சீறியாழ்ப் பாணர் தேம்பிழி நறவ மாந்தி”**

**(கம்ப.பால.40:1)**

என்ற பாடல் விளக்குகிறது. இதிலிருந்து சீறியாழ் அதிகாலைப் பொழுதில் இசைக்கப்பட்டுள்ளமை புலனாகுகின்றது.

**மாலைப்பொழுது**

வளையணிந்த இல்லுறை மகளிர் தங்களின் மனைகளில் விளக்கு ஏற்றி யாழினைக் கொண்டு பாணர்கள் மருதப் பண் இசைத்து மாலைப் பொழுதை வரவேற்று மகிழ்ந்ததை,

**“பைந்தொடி மகளிர் பலர்விளக் கெடுப்ப**

**யாழோர் மருதத் தின்னரம் புளரக்” (மணி.மணிமேகலா.134-135)**

என்ற பாடலடி விளக்குகிறது.

**இரவுப்பொழுது**

இராமன் அனுமனிடத்துச் சீதாபிராட்டியின் அவயங்களை வருணித்துக் கூறும்போது இரவுப் பொழுதில் ஓசைமிக்க யாழ் போன்ற மழலைச் சொற்களை உடையவளானவர் சீதை என்கிறார். இதனை,

**“யாமயாழ் மழலை யாடன் புறவடிக் கிழுக்க மன்னோ”**

**(கம்ப.கிட்கிந்த.786:4)**

என்ற பாடலடி உணர்த்துகிறது. இதிலிருந்து யாமம் யாழ் என்பது இரவுப் பொழுதில் இசைக்கக்கூடிய யாழ் என்பது புலனாகுகின்றது.

**யாழ் உவமை**

பெண்களின் பேச்சிற்கு யாழ் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை, (சிலம்பு.இந்திர.222), (கம்ப.பால.136,997), (கம்ப.அயோத்தி.776), (கம்ப.கிட்கிந்த.786:4), (பெரியபு.976,1721,2576:1) என்ற பாடலடிகளின் மூலம் அறிய முடிகின்றது.

தேவலோகத்துத் தேவமகளிர் பேச்சுக்கு யாழ் உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"யாழ்மொழித் தெரிவை மாரும் மைந்தரு மேறு கின்றார்"**

**(கம்ப.யுத்த.803:2)**

எனும் பாடலடி சுட்டுகிறது.

வண்டின் ஓசைக்கு யாழின் இசை உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**"மழலை வண்டின நல்லியாழ் செய்ய" (மணிமே.பளிக்கறை.4)**

என்ற பாடலடி விளக்குகிறது. இதில் மழலை என்பது உயர்திணைக்குரிய மானிடப்பருவங்களில் ஒன்றான சொல். இச்சொல்லை அ..றிணை உயிரான வண்டிற்கு ஒப்பாகச் சொல்லக் காரணம் அவ்வண்டில் இருந்து வரும் ஓசையைச் சிறப்பித்துக் கூறுவதற்காகும். இவ்விடத்தில் மழலை என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர். மேலும்,

**"அரவ வண்டின மார்த்துட னியாழ் செயும்"**

**(சிலம்பு.வேட்டுவ.4:3)**

**"வண்டினிற் பொலியு நல்யாழ் வழியுறு நறவம் வானத்து"**

**(கம்ப.யுத்த.2400:3)**

**"குழல்செய் வண்டினம் குறிஞ்சியாழ்**
**முரல்வன குறிஞ்சி" (பெரியபு.1092:1)**

என்ற பாடலடிகளின் மூலம் வண்டினது இசைக்கு யாழ் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

சீதையின் முன்கை அழகை வருணிக்கும் போது மகர யாழுக்கு ஒப்பாக உவமையாக உரைக்கிறார். இதனை,

**"வன்கையாழ் மணிக்கை யென்றன் மற்றொன்றை யுணர்த்த லன்றி**
**நன்கையாள் தடக்கை யாமோ நலத்தின்மே னலமுண் டாமோ"**

**(கம்ப.கிட்கிந்த.797:3-4)**

என்ற பாடலடிகளின் மூலம் அறிய முடிகின்றது.

**யாழ் தேர்வு செய்தல்**

யாழ் இசைத்தலில் யாழினைத் தேர்வு செய்தல் மிக இன்றியமையாத ஒன்று. குற்றமற்ற அதிர்தல் இல்லாத முறையில் செய்யப்பட்ட யாழைத் தேர்வு செய்து இசைத்தல் வேண்டும் என்பதை,

**"அதிரா மரபின் யாழ்கை வாங்கி" (சிலம்பு.வேனிற்.23)**

என்ற பாவடி விளக்குகிறது.

**யாழ் செய்யும் மரங்கள்**

யாழினைச் செய்வதற்கு ஏற்ற மரமாக,

**"சொல்லிய கொன்றை கருங்காலி மெமன்முருங்கை**
**நல்ல குமிழே தணக்குடனே - மெல்லியலாய்**
**உத்தம மான மரங்க ளிலை யென்றார்**
**வித்தகமா மானே விதி"[74]**

பஞ்சமரபு என்னும் நூல், யாழ் செய்வதற்கான ஏற்ற மரங்களைக் கூறுகிறது. யாழ் செய்வதற்குக் கொன்றை, கருங்காலி, மென் முருங்கு, குமிழ், தணக்கு ஆகிய நான்கு வகையான மரங்களும் சிறப்பான மரங்கள் என்கிறார். சிறந்த மரத்தின் யாழே சிறப்பான இசையைத் தோற்றுவிக்கும்.

**யாழ் வாசிக்கும் கருவி**

நரம்புத் தந்திகளை நன்கு முறுக்கு அமைத்து வலிவு, மெலிவு, சமன் என்பவற்றை யாழ் வாசிக்கும் கோல் கருவியால் வயப்படுத்தி யாழினை இசைக்க வேண்டும் என்பதை,

**"மேய தொடைத் தந்திரியாழ்**
**வீக்கி இசை விரிக்கின்றார்" (பெரியபு.2037:4)**

**"தானநிலைக் கோல் வடித்துப்**
**படிமுறைமைத் தகுதியினால்" (பெரியபு.2038:1)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

**யாழ் இசைப்போர்**

யாழ் இசைப்பவர்கள் யாழ்ப்பாணர் ஆவார். இதனை,

**“தெள்விளிச் சீறியாழ்ப் பாணர் தேம்பிழி நறவ மாந்தி”**

**(கம்ப.பால.40:1)**

எனும் அடி சுட்டும்.

**யாழின் வீழ்ச்சி**

கோவலன் கண்ணகியைப் போற்றிப் புகழும்பொழுது,

**“யாழிடைப் பிறவா விசையே யென்கோ”**

**(சிலம்பு.மனையறம்.79)**

என்றுரைக்கிறார். இவ்வடியை நோக்கும் போது யாழில் பிறவாத இசையும் உள்ளது என்பதை அறியமுடிகின்றது.

திருப்பதிகங்களுள் யாழில் இசைத்துப் பாட முடியாத பதிகங்களுண்டு என்பதைத் திருநீலகண்ட யாழ்ப்பாணர் திருஞானசம்பந்தரிடம் கூறி அப்பதிகங்களை நீவீர் பாடுக என்றதை, (பெரியபு.2349) என்ற பாடல் விளக்குகிறது. இதிலிருந்து யாழில் பாட முடியாத பதிகங்கள் உண்டு என்பதைப் பெரியபுராணம் யாழ்முரிப் பதிகத்தில் 2350, 2351, 2352, 2353, 2354, 2355, 2356 ஆகிய பாடல்களில் சேக்கிழார் சுட்டியுள்ளார்.

**யாழும் சுவையும்**

யாழின் சுவையானது ஒவ்வொரு நிலத்திற்கும் மாறுபடுகிறது. இதனை,

1. “முல்லையாழ்: என்பது செம்பாலையாகும் என்று அடியார்க்கு நல்லார் உரை மூலம் அறிகின்றோம். மங்கள மிக்கது; தொழுகைக்குரியது. அன்பு, அரள், இரக்கம் முதலிய சுவைக்குரியது.
2. குறிஞ்சியாழ்: குறிஞ்சியாழ் என்பது படுமலைப் பாலையாகும். காதற்குரியது. இன்பம், மகிழ்வுச் சுவைக்குரியது. இது யாமப் பண் எனவும் பெயர் பெற்றது.
3. மருத யாழ்: மருத யாழ் என்பது கோடிப் பாலையாகும். இப்பண்ணிலே தொல்காப்பியம் தரும் ஊடல் பற்றிய செய்திகளை அமைத்துப்பாடுவார்கள்.

4. நெய்தல் யாழ்: நெய்தல் யாழ் என்பது விளரிப்பாலையாகும். இஃது இரங்கல் சுவையுடையது"[75] என்றுரைக்கிறார் வீ.ப.கா.சுந்தரம்.

**வீணை**

பதினேழாம் நூற்றாண்டில் தஞ்சையை ஆண்ட ரகுநாத நாயக்கரின் காலத்தில் வாழ்ந்த 'கோவிந்த தீட்சிதர்' என்பவர் இருபத்தி நான்கு மெட்டுக்களுடன் கூடிய வீணையை உருவாக்கியுள்ளார்.

வீணையை இசைப்பதில் வல்லவர்கள் விஞ்சையர்கள் எனப்பட்டனர். இதைப் பெரியபுராணம்,

**"மேன்மை நான்மறை நாதமும் விஞ்சையர்**

**கான வீணையின் ஓசையும் கார்எதிர்" (பெரியபு.14:1-2)**

என்ற பாடலில் குறிப்பிடுகிறது.

விபஞ்சி என்பது வீணையைக் குறிக்கும் சொல்லாகும். சேக்கிழார் வீணையை விபஞ்சி என்று குறிப்பிட்டுள்ளதை,

**"பண்தரு விபஞ்சி எங்கும்**

**பாதசெம் பஞ்சி எங்கும்" (பெரியபு.82:1)**

எனும் பாவடிகள் விளக்குகின்றன.

**நாரதர் இசைக்கும் கருவி**

நாரதர் வீணையினை இசைத்துள்ளார் என்பதை,

**"வீணையி னரம்பிடை விளைத்த தேமறை" (கம்ப.ஆரணிய.572:3)**

**"நாரதன் வீணை நயந்தெரி பாடலும்" (சிலம்பு.கடலாடு.18)**

எனும் பாடலடிகளின் மூலம் அறிய முடிகின்றது.

நாரதர் இசைத்த வீணையின் இசைக்கு இந்திரன் வயப்பட்டான். இதனை,

**"மேனித் திருநா ரதன்வீ ணையிசைத்**

**தேனிற் பொலியுஞ் செவிவண் டுடையான்" (கம்ப.ஆரணிய.77:3-4)**

என்ற பாடற் குறிப்புகளின் வாயிலாக விளங்க முடிகின்றது.

**நாடக அரங்கில் வீணை**

மிதிலை நகர நாடக சாலைக் காட்சியினை வருணிக்கும் பொழுது அங்குக் கைவிரலால் தடவி வாசிக்கப்படுகின்ற மகரவீணையும் தண்ணும்மையும் ஒன்றோடு ஒன்று இணைந்து ஒலிக்கப்பட்டுள்ளன. இதனை,

**“தைவரு மகர வீணை தண்ணும்மை தழுவித் தூங்கக்”**

**(கம்ப.பால.570:2)**

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

**திருமண நிகழ்வில் வீணை**

திருஞானசம்மந்தரின் திருமண நிகழ்வில் விபஞ்சி எனப்படும் வீணையானது இசைக்கப்பட்டுள்ளதை,

**“ஏதமில் விபஞ்சி வீணை**

**யாழொலி ஒருபால் ஏத்தும்” (பெரியபு.3103:3)**

எனும் பாடலடி வாயிலாக உணர முடிகின்றது.

மிதிலை நகர மாந்தர்கள் சீதா திருமணத்தை எண்ணி மகிழ்ந்து குற்றமில்லாது அமைந்த மகர வீணையின் ஓசையில் தேன் சிந்த ஆடினா் என்பதை,

**“நல்லியன் மகர வீணைத் தேனுக நகையுந் தோடும்**

**…**

**சொல்லிய பருவ நோக்கந் தோகையி னாடி னாரே”**

**(கம்ப.பால.786)**

என்ற பாடல் விளக்குகிறது.

**போரில் வீணை**

போர்க்குச் செல்லும் படை வீரர்கள் மனக்கிளர்ச்சியுறுமாறு வீணை இசைக்கப்பட்டுள்ளதை,

**“கண்டினிற் குயின்ற வீணை நரம்பொடு கமழுந் தேறல்”**

**(கம்ப.யுத்த.2400)**

என்ற பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

பண்டைத் தமிழர்கள் போர்க்குச் செல்லும்பொழுது தங்களை அடையாளப்படுத்திக் காட்டிக்கொள்ள போர்க்கருவிகள் மற்றும் இசைக்கருவிகளைத் தங்களின் தேர்களில் உள்ள கொடியில் பொருத்திக்கொண்டுள்ளனர். இராவணன் வீணையினைத் தமது தேரில் சித்திரவடிவாக வைத்திருந்தான் என்பதை,

**"எழுது வீணைகொ டேந்து பதாகைமேல்" (கம்ப.யுத்த.3688:1)**

என்ற பாடலடி மூலம் அறியமுடிகின்றது.

கும்பகர்ணன் வதைப்படலத்தில் இராமன் கும்பகர்ணனின் தேரினைப் பார்த்து அதில் வீணைச் சித்திரம் தீட்டப்பட்ட கொடி இன்மை கண்டு இராவணன் அன்று என உறுதி செய்தான். இதனை,

**"வீணையென் றுணரின.்.தன்று விண்தொடும்" (கம்ப.யுத்த.1328:1)**

என்ற பாடல் விளக்குகிறது. இதிலிருந்து வீணைக் கொடியானது அடையாளச் சின்னமாக விளங்கியுள்ளமை புலனாகுகிறது.

ஊர்தேடு படலத்தில் அனுமன் பவள மலையிலிருந்து இலங்காபுரியின் வளங்களைக் குறிக்கும் போது, வீணையின் இன்னிசைக்குத் தோற்கும் குரலை உடையவர்கள் இலங்காபுரி நகர மகளிர் எனக் குறிப்பிடுகிறார். இதனை,

**"குழலும் வீணையும் யாழுமென் றினையன குழையும்**
**மழலைமென்மொழி கிளிக்கிருந் தளிக்கின்ற மகளிர்"**

**(கம்ப.சுந்தர.101:1-2)**

என்ற பாடல் சுட்டும்.

சிவபொருமான் கோவிலுக்கு வீணைகள் செய்யச் சுரதானங்களை எழுப்பும் நரம்புகளை அளித்து வந்தார் என்பதை,

**"நேர்வைத்த வீணைக்கும்**
**யாழுக்கும் நிலைவகையில்**
**சனையும் இவை அளித்துதள்ளார்" (பெரியபு.10592-4)**

என்ற பாடல் உரைக்கிறது.

ஆறுசெல் படலத்தில் முண்டகத்துறை வருணனையில் தம் கணவனைப் பிரிந்த மகளிர் அங்குக் கணவனுடன் சேர்ந்து வாழும் மகளிர் மனக்கிளர்ச்சியோடு வீணை கொண்டு பாடும் பாடலைக் கேட்டு விரக வேதனையில் கண்ணீர் விடுவதை,

**"விஞ்சை மன்னர்பால் விரக மங்கைமார்**

**நஞ்சு வீணையி னடத்து பாடலான்" (கம்ப.கிட்கிந்தா.9212-3)**

என்ற பாடல் குறிப்பிடுகிறது.

இராவணன் வானரச் சேனைகளைக்காண இலங்கையின் உத்திரவாயில் கோபுரத்தின் மீது ஏறி நிற்கும்பொழுது நாரதர் சாமவேத கீதத்தை வீணையில் பாட அதை இராவணன் கேளாது, அவனது மனம் சீதை, சீதை என்று கருதியதை, (கம்ப.யுத்த.:813) என்ற பாடல் விளக்குகிறது. இதிலிருந்து நாரதர் இசைக்கும் கருவி வீணை என்றும் அவர் இசைத்த கீதம் சாமவேதகீதம் என்றும் அறியமுடிகின்றது.

**வீணை உவமையாகப் பயன்படல்**

வீணையின் இசையானது வண்டுகளின் ஓசைக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"வீடும் விரவும் மணிப்பந்தரும் வீணை வண்டு**

**பாடும் பொழிலும் மலர்ப்பல்லவப் பள்ளி மன்னோ"**

**(கம்ப.பால.165:3-4)**

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன.

**கின்னரம்**

கின்னரம் என்பதனைக் கின்னரி என்றும் கூறுவர். "இ∴தோர் நரம்பு இசைக்கருவி; தந்திரி கரத்தில் சுரத்தான நிலைகளைக் காட்டும் திவவுகள் உண்டு"[76] என்று வீ.ப.கா.சுந்ரம் உரைக்கிறார். கின்னரி யாழ் என்றும், வீணை என்றும் இரு கருத்துக்கள் உண்டு. கின்னரி இசைப்பவர்களைக் கின்னரர் என்று அழைத்துள்ளனர்.

சந்திர சைல மலையில் கின்னரமென்ற தேவசாதி அமர மகளிர்கள் கின்னரம் வாசிப்பதை,

**"கின்ன ரம்பயில் கீதங்க ளென்னலாம்**

**கின்ன ரம்பயில் கின்றன ரேழைமார்" (கம்ப.பால.955:3-4)**

எனும் பாடல் விளக்குகிறது. மேலும்,

வண்டுகளின் ரீங்கார ஒசைக்குக் கின்னரத்தின் ஓசையானது உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"கிளைத்துணை மழலை வண்டு கின்னர நிகர்த்த மின்னும்"**

**(கம்ப.கிடகிந்தா.484:1)**

என்ற அடி சுட்டும்.

சுக்கிரீவன் தென்திசைச் செல்லும் வானரர்களை நோக்கி சீதையைத் தேடும் இடங்களைக் குறித்துக் கூறுகையில் கின்னரமென்னும் இசைக்கருவியின் நரம்புகளைத் தடவும்போதெல்லாம் உண்டாகும் ஓசையினால் யானைகளில் இளம் கன்றுகளும், புலிக்குட்டிகளும் தூங்குகின்ற இடம் என்கிறார் கம்பர். இதனை,

**"கீதமொத்த கின்னரங்க ளின்னரம்பு வருடுதொறும் கிளக்கு மோதை**

**போதகத்தின் மழக்கன்றும் புலிப் பறமு முறங்கிடனும் பொருந்திற்றம்மா"**

**(கம்ப.கிட்கிந்தா.780:3-4)**

எனும் பாடல் விளக்குகிறது. இதிலிருந்து கின்னரத்தின் இசைக்குப் புலி, யானை வயப்படும் தன்மையை அறியமுடிகிறது.

போரில் இந்திரசித்தினால் மயக்கமுற்ற இலச்சுமணன். அனுமான் உதவியால் உயிர் பெற்றதும் மகிழ்ச்சியால் கின்னரம் முதலிய இசைக்கருவி இசைத்து அரம்பையர் ஆடினர் என்பதை,

**"அரம்பைய ராடியன ரமுத வேழிசை**

**நரம் பியல் கின்னர முதல நன்மையே" (கம்ப.யுத்த.2761:1-2)**

எனும் பாடல் வழி அறியப்படுகின்றது.

**கஞ்சக்கருவிகள் (அ) தாளக்கருவிகள்**

கஞ்சக் கருவிகள் என்பவை உலோகத் தகடுகளால் தாள ஓசை எழ அமைக்கப்படும் கருவிகள் கஞ்சக் கருவிகளாகும். பொதுவாக இசையில் ஒரு முக்கிய அங்கம் தாளம். பாவம் - இராக - தாளம் என்ற தொடரின் மூலம்

இதன் சிறப்பை உணரலாம். இசைக்கருவிகளுள் பெரும்பங்கு வகிக்கின்ற தோற்கருவிகள் அனைத்தும் தாளம் ஓசைக்கென்றே அமைக்கப்பட்டவையாகும். ஆனால், தனிப்பட்ட தாளக்கருவிகள் எல்லாம் உலோகத்தாலானவை. இக்கருவிகள் செய்ய வெண்கலம், முறி, பித்தளை ஆகிய உலோகங்கள் முக்கியமானதாகும்.

தாளக்கருவிகள் இசையரங்குகளிலும், நாடகங்களிலும், பஜனைகளிலும் இடம்பெறுகின்றன. தாளத்தை எண்ணுவதற்காகப் பயன்படுத்தப்படும் இசைக்கருவிகள். மிருதங்கம், தபேலா, போலக்கு, கஞ்சிரா, கடம், திமிலை, செண்டை, சுத்த மத்தளம் போன்ற தாளக்கருவிகளில் ஒரு தாளத்தை எடுத்துக்கொண்டு நீண்ட நேரம் ஒலித்து நிகழ்த்தலாம். ஆனால் சப்பளாக்கட்டை போன்ற தாளக்கருவிகளில் அவ்வாறு செய்ய இயலாது. மிருதங்கம், தபேலா போன்ற கருவிகளில் தேவையான அளவுக்குச் சுருதி சேர்த்துக்கொள்ளலாம். கடம், ஜால்ரா போன்ற தாளக்கருவிகளில் இம்மாதிரி செய்ய இயலாது. குறிப்பிட்ட சுருதிக்குச் சேர்ந்துள்ள கடத்தையே அச்சுருதிப் பாடக்கூடிய கச்சேரிக்குக் கொண்டு வருதல் வேண்டும். இசைக்கருவிகளைப் போல நான்கு வகையான தாளக்கருவிகள் இருக்கின்றன. கெத்துவாத்தியம் என்பது நரம்புக்கருவியாகும். நான்கு கம்பிகளுள்ள இந்த வாத்தியம் சிறு குச்சிகளால் அடித்து வாசிக்கப்படும். நாதசுரக் கச்சேரிகளில் சில சமயங்களில் சங்கு பயன்படுத்தப்படுவதுண்டு. சங்கினைத் திறமையாக வாசிப்பவர்களால் சொற்கட்டுகளாக வாசிக்கமுடியும். தவிலும் சங்கும் மாறி மாறி வாசிக்கப்படும் பொழுதும், சேர்ந்து வாசிக்கப்படும் பொழுதும் கேட்பதற்குக் கவர்ச்சியான இசை ஒலியாக இருக்கும்.

**கஞ்சத்தாளம்**

கஞ்சம் என்பது வெண்கலத்தைக் குறிக்கின்றது. எனவே இக்கருவிகள் வெண்கலத்தால் செய்யப்பட்டிருக்கும் என்பதை அறியலாம். ஆனால் இன்று பல்வேறு உலோகங்களாலும் உலோகக் கலவையாலும் செய்யப்படுகின்றது. இதனை ‘உலோகத்தாளம்’ என்றும் கூறுவர். இலைத்தாளம், பாண்டில்,

குழித்தாளம், நட்டுவத்தாளம், அரங்கத்தாளம் ஆகிய ஐந்து தாளக் கருவிகளும் உலோகத்தால் செய்யப்படுகின்றன.

**பாண்டில்**

இது உலோகத்தாலான வட்டவடிவமான கஞ்சதாளம். இக்கருவி தனித்து இயங்காது பிற கருவிகளுடனே சேர்ந்தே இசைக்கப்பட்டுள்ளன. இதனை,

**"வடித்தோற் கொடும்பறை வால்வளை நெடுவயிர்**
**இடிக்குரன் முரச மிழுமென் பாண்டில்"**

**(சிலம்பு.கால்கோட்.193-194)**

**"கிளையுறு பாடல் சில்லரிப் பாண்டில்**
**தழுவிய முழவொடுங் கெழுமி" (கம்ப.சுந்தர.417:3)**

**"முந்துறு குணிலோ டியைவுறு குறட்டிற்**
**சில்லரிப் பாண்டிலின் முறையின்" (கம்ப.சுந்தர.419:2)**

**"நரம்பு கண்ணகத் துள் ளுறை நறைநிறை பாண்டில்**
**நிரம்பு சில்லரிப் பாணியுங் குறடுநின் றிசைப்ப"**

**(கம்ப.சுந்த.1093:1-2)**

என்ற பாடல்களின் மூலமாக அறியமுடிகின்றது.

பாண்டிலின் ஓசையானது இழும் ஓசையைக் கொண்டது. இதனை,

**"இடிக்குரன் முரச மிழுமென் பாண்டில்"**

**(சிலம்பு.கால்கோட்.194)**

எனும் பாடலடி விளக்குகிறது.

**தொகுப்புரை**

- பண்டைக் காலம் தொட்டு மக்களின் வாழ்வியலில் இசை ஓர் அங்கமாக விளங்கியுள்ளது.
- இசை என்பதை ஓசை என்றும் இன்னிசை என்றும் குறிப்பிட்டுள்ளனர். இசையானது மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்து நிகழ்வுகளிலும் இடம்பெற்றுள்ளது.

- இயற்கையில் தோன்றிய பல ஒலிகளைக் கேட்டு மகிழ்ந்து இசையினையும் அவற்றின் இனிமையையும் உணர்ந்துள்ளனர். அவ்வாறு உணர்ந்த இசையினை மேம்படுத்த இசைக்கருவிகளைக் கண்டறியத் தொடங்கினர்.

- மக்கள் தாங்கள் பயன்படுத்தி வந்த பொருட்களைக் கொண்டே இசைக் கருவிகளை உருவாக்கிக் கொண்டனர். அவ்வாறு உருவாக்கிய இசைக்கருவிகளைத் தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக் கருவி எனப் பகுத்துக் கொண்டனர்.

- வேட்டையாடி உணவு உட்கொண்டு வந்த மனிதர்கள் தாங்கள் வேட்டையாடிய விலங்கின் தோலினைப் பயன்படுத்தி, தோலில் எழும் ஓசையை அறிந்து தோற்கருவிகளை உருவாக்கியுள்ளனர்.

- தோலினைப் பயன்படுத்தி பறை, முரசு, முழவு, தண்ணுமை, பேரிகை, பாடகம், குடமுழா, துடி, திமிலை, பம்பை போன்ற பல்வேறு வகையான தோற் இசைக்கருவிகளை உருவாக்கியுள்ளனர்.

- காப்பியங்கள் மக்கள் வாழ்வியல், குறிப்பாகத் தன்னிகரில்லாத் தலைவனின் வீர, தீரச் செயல்கள், தொழில்கள், சமயங்கள் போன்றவற்றை விளக்கும் முகமாக அவ்வவ்கால மக்கள் பயன்படுத்தி கருவிகளை விளக்குகின்றன.

- தோலிசைக்கருவிகள் வன்மைக் கருவிகள், மென்மைக்கருவிகள், சமக்கருவிகள், தலைக்கருவிகள், இடைக்கருவிகள், கடைக்கருவிகள், வீரக்கருவிகள் என ஏழு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

- ஒரு செய்தியைப் பிறருக்கு அறிவிக்கும் ஊடகமாகப் பறையைப் பயன்படுத்தியுள்ளனர். பறையின் வகைகளாகத் தொண்டகப்பறை, அரிப்பறை, ஆறெறிப்பறை, உவகைப்பறை, சாப்பறை, சாக்காட்டுப்பறை, வெட்டியான்பறை. பம்பைப்பறை, மின்கோட்பறை, சிறுபறை, குறவைப்பறை, தடறு, கோட்பறை, பன்றிப்பறை, வெறியாட்டுப்பறை,

சகடை, கும்பிகை ஆகிய பறைகள் உள்ளதை இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

- பறையின் வாய்த்தோலின் நடுப்பகுதியில் கருப்பு நிற மண் பூசப்பட்டிருக்கும். இதனைப் பறையின் கண் என்று அழைப்பர். நேரான குறுந்தடி கொண்டு பறையானது அடித்து இசை எழுப்பப்படும்.
- முரசானது ஒருமுகத் தோற்கருவி. செய்தியை அறிவிக்கும் ஊடகமாகவும் பயன்பட்டுள்ளது. போரில் பயன்படுத்தப்பட்டது. அரசர்களுக்குரியது. பகைவரின் காவல் மரத்தை வெட்டி வந்து செய்யப்பட்டது. இன்னிசையுடையதும் இடி போலும் ஓசையுடையதும் ஆகும்.
- போர் தொடங்கும் போது போர் தொடங்கிய செய்தியினை அனைத்து வீரர்களும் அறிந்து கொள்ள முரசறைந்துள்ளனர். போர் முடிவடைந்த நிலையில் வெற்றி முரசினை இசைத்துள்ளனர்.
- வீரமுரசு, தியாக முரசு, நியாய முரசு என்று மூன்று வகையான முரசுகள் இருந்துள்ளன. பறவைகளின் ஒலிக்கும், கடலின் ஓசைக்கும், மேகத்தின் இடி ஓசைக்கும் முரசின் ஓசையானது உவமையாகக் கூறப்பட்டுள்ளது.
- நடுவிலிருந்து பலாப்பழம் போல் வளைந்து அமையப்பெற்றது முழவு. அகமுழவு, அகப்புறமுழவு, புறமுழவு, புறப்புறமுழவு, பண்ணமை முழவு, நானிமுழவு, காலைமுழவு என்று ஏழு வகை முழவுகள் உள்ளன.
- துடியானது இருமுகத்தோற்கருவி. இது மிகவிரைந்து முழக்கப்படுவது. இதன் உடல் மண், மரம், பித்தளை ஆகியவற்றால் செய்யப்பட்டிருக்கும். இது வலப்பக்கம் மட்டுமே முழக்கப்படுவது. பெண்ணின் இடைக்கும், வேடர்களின் பாதங்களுக்கும், யானையின் பாதத்திற்கும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

- தண்ணும்மை என்பது ஒரு வகை இருமுகமுழவு. இதன் வாயில் தோல் மடித்து வைத்துப் பின்னப்பட்டிருப்பதால் இது மடிவாய் தண்ணும்மை எனப்பெயர் பெற்றது. குறுந்தடிகளால் இருபுறமும் முழக்கப்படுவது.
- பேரிகை பெரும்பறை வகையுள் ஒன்று. வரவேற்பு நிகழ்வு, முடிசூட்டும் நிகழ்வு, போர், இறப்பு நிகழ்வு போன்ற பல்வேறு நிகழ்வுகளில் இசைக்கப்பட்டுள்ளது. மேகத்தின் இடி முழக்கத்திற்கும், கடலின் ஓசைக்கும் உவமையாகப் பேரிகையின் ஓசை கூறப்பட்டுள்ளது.
- பண்டைக் காலத்திலிருந்து இன்றுவரை வழங்கி வரும் இருமுக இரட்டைத் தோற்கருவி பம்பை. வேட்டைக்குச் செல்லும் வேடர்கள் காட்டில் பதுங்கியுள்ள விலங்குகளை வெளிக்கொணரப் பம்பையை இசைத்துள்ளனர்.
- தக்கை பெரிய உடுக்கை வடிவமான தோற்கருவிகளுள் ஒன்று. சிறுகோலால் அடித்து முழக்கப்படுவது. இது மிகத் தாழ்ந்து ஒலிப்பதனால் இதற்குத் தக்கை எனப்பெயர் வந்தது. போரில் இசைக்கப்படுவது.
- செண்டை, ஒரு முகத்தில் மட்டும் வாசிக்கப்படும் இருமுக வாத்தியம். இதில் பலவகை உண்டு. உயரத்திலும் அகலத்திலும் வேறுபட்ட வடிவங்கள் கொண்டிருக்கும். போரில் இசைக்கப்படுவது.
- காற்றை வாத்தியங்களுள் செலுத்தி, அக்காற்றைப் பரிமாணத்தில் தேவையான அளவு அசைவுகளாக்கி இசையை எழுப்பி வாசிக்கப்படும் கருவிகள் அனைத்தும் துளைக்கருவிகளாகும்.
- குழல் இசை அரங்குகளில் தனியாக வாசிக்கவும், நாட்டியத்தில் துணைக் கருவியாக வாசிக்கவும் குழல் பயன்படுகிறது. மனிதன் குரலைப் போல குழலிலும் ஒரு நேரத்தில் ஒரு சுரத்தைத்தான் வாசிக்க முடியும்.

- சங்கானது ஆலய வழிபாடுகளிலும், மங்கல, அமங்கல சமூகச் சடங்குகளிலும், போர்களத்திலும் இசைக்கப்பட்டுள்ளது. கோடு, வலம்புரி, வளை, பணிலம் என்ற பல்வேறு பெயர்களில் இது அழைக்கப்படுகிறது.

- “ஓம்” என்ற ஒலி முகிழும் இசைக்கருவி சின்னம். வழிப்பறி செய்து வாழ்வினை நிகழ்த்தும் மறவர்கள் நள்ளிரவில் சூறையாடும் போது சின்னத்தை ஊதி சூறையாடியுள்ளனர்.

- இழுத்துக் கட்டப்பெற்ற நரம்புகளை மீட்டுவதால் இசையொலியை எழுப்பும் கருவிகள் நரம்புக்கருவிகளாகும். நரம்புக் கருவிகளில் மிகத்தொன்மையானது யாழ். யாழானது வில்யாழ், பேரியாழ், மகர யாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ், சீறியாழ், குறிஞ்சியாழ், மருதயாழ், நெய்தல்யாழ் போன்ற பல்வேறு வகையான யாழ்கள் உள்ளன.

- யாழ் இசைத்தலில் யாழினைத் தேர்வு செய்தல் மிக இன்றியமையாத ஒன்று. குற்றமற்ற அதிர்தல் இல்லாத முறையில் செய்யப்பட்ட யாழைத் தேர்வு செய்து இசைத்தல் வேண்டும்.

- கொன்றை, கருங்காலி, மென் முருங்கு, குழல் தணக்கு ஆகிய நான்கு வகை மரங்களும் யாழ் செய்வதற்கு ஏற்ற மரங்களாகும்.

- வீணை மிகவும் இனிமையான ஓசையைக் கொண்டது. வீணை இசைப்பதில் வல்லவர்களை விஞ்சையர்கள் என்று அழைத்துள்ளனர். நாரதர் இசைக்கும் கருவி வீணை.

- வீணையை நாடக அரங்கிலும், திருமண நிகழ்விலும், போரிலும், கோவில் விழாக்களிலும் இசைத்துள்ளனர். வீணையின் இசையானது வண்டுகளின் ஓசைக்கு உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

- “பாண்டில்” உலோகத்தாலான வட்ட வடிவமான கஞ்சதாளம் ஆகும். தனித்து இயக்காது பிறகருவிகளுடன் சேர்த்தே இசைத்துள்ளனர்.

## சான்றெண் விளக்கம்

1. கழகப் புலவர்கள், கழகத் தமிழ் அகராதி, ப.98
2. தொல்காப்பியம், நூ.841
3. மேலது, நூ.33
4. திரு.நா.அறிவொளி, இசைத்தமிழ், ப.392
5. செ.பிரேமா, இசை மருத்துவம், ப.1
6. குமரிச்செழியன், செம்மொழித் தமிழ், ப.51
7. சு.வித்யாநந்தன், தமிழர் சால்பு, ப.130
8. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-2, ப.931
9. மேலது, ப.941
10. முனைவர் கே.ஏ.பக்ரிசாமி பாரதி, இந்தியக் கருவூலம், ப.374
11. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-2, ப.931
12. வீ.ப.கா.சுந்தரம், தமிழிசைக் கலைக்களஞ்சியம், தொகுதி-3, ப.160
13. செ.பிரேமா, இசை மருத்துவம், ப.13
14. பஞ்ச மரபு, பா.95:1, ப.141
15. மேலது, பா.95:2, ப.142
16. மேலது, பா.95:3, ப.143
17. மேலது, பா.96, ப.144
18. மேலது, பா.97. ப.145
19. மேலது, பா.95:6, ப.145
20. மேலது, பா.95:7, ப.146
21. தி.பார்த்திபராஜா, தமிழ்க் கலை மணிகள், ப.100

22. புறநானூறு:335:7-8

23. வீ.ப.கா.சுந்தரம், தமிழிசைக் கலைக்களஞ்சிம், தொகுதி-3, ப.263

24. தொல்காப்பியம், நூ.964

25. நா.மம்மது, தமிழிசைப் பேரகராதி, ப.167

26. மேலது, ப.38

27. மேலது, ப.220

28. பொன்.ராஜன்பாபு, அணி இலக்கணம் ஓர் அறிமுகம், பக்.6-7

29. கழகப் புலவர்கள், கழகத் தமிழகராதி, ப.778

30. ஆர்.ஆளந்தார், தோற்கருவிகள், ப.97

31. தொல்காப்பியம், நூ.1571

32. சீவகசிந்தாமணி, பா.299:3

33. கழகப் புலவர்கள், கழகத் தமிழகராதி, ப.780

34. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-4, ப.788

35. கழகப் புலவர்கள், கழகத் தமிழகராதி, ப.556

36. செ.பிரேமா, இசை மருத்துவம், ப.46

37. நா.மம்மது, தமிழிசைப் பேரகராதி, ப.290

38. வீ.ப.கா.சுந்தரம், தமிழிசையியல், ப.233

39. தொல்காப்பியம், நூ.1005

40. கழகப் புலவர்கள், கழகத் தமிழகராதி, ப.512

41. நா.மம்மது, தமிழிசைப் பேரகராதி, ப.260

42. மு.அருணாச்சலம், தமிழிசை இலக்கண வரலாறு, ப.160

43. நர்மதா தமிழ் அகராதி, ப.291

44. ந.மம்மது, தமிழிசைப் பேரகராதி, ப.417

45. ஆர்.ஆளவந்தார், தமிழர் தோற்க்கருவிகள், பக்.81-82

46. நா.மம்மது, தமிழிசைப் பேரகாதி, ப.256

47. மேலது, ப.257

48. வீ.கா.ப.சுந்தரம், தமிழிசைக் கலைக்களஞ்சிம், தொகுதி-1, ப.273

49. மேலது, தொகுதி-2, ப.142

50. கரு.அழ.குணசேகரன், பண்பாட்டுத் தளங்களில் தமிழர் கலைகள், ப.83

51. நா.மம்மது, தமிழிசைப் பேரகராதி, ப.295

52. சிலப்பதிகாரம், அரங்கேற்றுக் காதை, அடியாருக்கு நல்லார் உரை, ப.100

53. கலைக்களஞ்சியம், தொகுதி-4, ப.106

54. சிலப்பதிகாரம், அரங்கேற்றுக் காதை, அடியாருக்கு நல்லார் உரை, ப.101

55. து.ஆ.தனபாண்டியன், புல்லாங்குழல் ஓர் ஆய்வு, ப.25

56. வீ.கா.ப.சுந்தரம், தமிழிசைக் கலைக்களஞ்சிம், தொகுதி-2, ப.180

57. து.ஆ.தனபாண்டியன், புல்லாங்குழல் ஓர் ஆய்வு, ப.93-95

58. வெ.நீலகண்டன், வாழ்விழந்து வரும் கிராமிய இசைக் கருவிகள், ப.80

59. மேலது, ப.12

60. நா.மம்மது, தமிழிசைப் பேரகராதி, ப.316

61. வீ.ப.கா.சுந்தரம், தமிழிசைக் கலைக்களஞ்சியம், தொகுதி-4, ப.76

62. சீவகசிந்தாமணி, பா.559

63. பஞ்சமரபு, ப.10

64. இரா.இளங்குமரன், தமிழிசை இயக்கம், ப.31-32

65. பஞ்சமரபு, ப.12

66. பஞ்சமரபு, ப.14

67. பஞ்சமரபு, ப.12

68. வீ.க.பா.சுந்தரம், தொல்காப்பியத்தில் இசைக் குறிப்புகள், ப.28-29

69. மேலது, ப.29

70. பொ.சா.லோச்சன் என்கிற அங்கையர்கண்ணி, பஞ்சமரபில் இசை மரபு, ப.42

71. வீ.ப.கா.சுந்தரம், தமிழிசைக் கலைக்களஞ்சியம், தொகுதி-4. ப.66

72. விபுலாநந்த அடிகளார், யாழ் நூல், ப.159

73. இரா.இளங்குமரன், தமிழிசை இயக்கம், ப.31

74. பஞ்சமரபு, நூ.9, ப.11

75. வீ.ப.கா.சுந்தரம், தமிழிசைக் கலைக்களஞ்சியம், தொகுதி-4. ப.72

76. மேலது, தொகுதி-2. ப.129

மனிதன் தனது அடிப்படைத் தேவைகளில் ஒன்றான உணவிற்காக வேட்டைத் தொழிலைக் கைக்கொண்டான். விலங்குகளை வேட்டையாட மரம், கல், இறந்த விலங்குகளின் எலும்புகள் போன்றவற்றைக் கற்காலத்தில் பயன்படுத்தினர். வேட்டையின் மூலம் கிடைத்த உணவு தங்களின் தேவைக்குத் தகுந்த அளவில் கிடைக்காமல் போனபோதுதான் தன் தேவையினைப் பூர்த்தி செய்து கொள்ள சண்டையினைத் தொடங்கினர். உணவுக்காகத் தொடங்கிய சிறிய சண்டை பின்வந்த காலங்களில் பல்வேறு காரணங்களுக்காகப் பெரிய போராக உருவெடுத்தது. ஆரம்ப காலத்தில் வேட்டைக்குப் பயன்படுத்திய கருவிகளைப் பின்னர் போருக்கும் பயன்படுத்தியுள்ளனர். இயற்கையில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட கருவிகள் உலோகங்களின் கண்டுபிடிப்புக்குப் பின்னர் தங்களின் தேவைக்கு ஏற்ற வடிவில் உலோகங்களில் உருவாக்கப்பெற்றன. இவ்வாறு உருவான போர்க்கருவிகள் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளதைக் கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

**போர்**

ஒரு குறிப்பிட்ட இலக்கை அடைவதற்கு இருபெரும் குழுக்களிடையே நடைபெறக்கூடிய சண்டையே போர் ஆகும். பண்டைத் தமிழ்ச் சமுகத்தில் குழுக்களிடையே நடைபெறும் போரும், தனி மனிதன் மற்றொருவருடன் தனித்து நின்று சண்டையிடுவதுமான போரும் நிகழ்ந்தேரியுள்ளன. போரில் வெற்றிபெற போர்க்கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

போர் வீரர்கள் "அரசன் செலவில் வாழ்ந்தனர். அவர்களுக்குப் படைத்துறை வேலை தவிர வேலை இல்லை"[1] போர் இன்றி அமைதிக் காலங்களில் போர்க்கான பயிர்ச்சியில் தங்களை தயார் செய்தலையே முழு நேரத்தையும் செலவிட்டுள்ளனர்.

**போர் பற்றி அறிஞர்கள் கருத்துக்கள்**

"போர் என்பது திடீரென தோன்றக்கூடியது. இதற்கான உந்துதல் மனிதனின் ஆழ்மனத்திலிருந்து வெளிப்படும் ஒன்றாகும்"[2] என்று ஃப்ராய்டு என்னும் உளவியலாளர் கூறுவதாக ஆக்னஸ் மேரி கூறியுள்ளார்.

“மனிதர்களிடம் இரண்டு இயல்பு ஊக்கங்கள் உள. அவை தன்மைக் காத்தும் கொள்வதும் தன் ஆதிக்கத்தை விரிவு படுத்தலுமே. இவ்வடிப்படை இயல்பால் காலந்தோறும் மனிதர்கள் ஒருவருடன் ஒருவர் போரிட்டான். கால மாறுதலுக்கு ஏற்ப, ஒரு இனத்தாரும் மற்றொரு இனத்தாரும், ஒரு நாட்டவரும் மற்றொரு நாட்டவரும், போரிடுவதாக, இப்போர்கள் தொடர்கின்றன”[3] என்று கோ.சிவகுருநாதன் கூறுகிறார்.

“தேசியக் குறிக்கோள்களை எய்துதற்குப் போர் மிகவும் வேண்டப்படும், தம்மினும் வலுவும் செயற்பாடும் மிக்க நாடுகளுக்கெதிரில் தேசிய நாட்டை அமைதிக் கொள்கைகள் கேவலப்படுத்துகின்றன; போர்த் தன்மை ஆண்மைமிக்கது, சக்தியின் பெருமைக்குகந்தது; ‘பெருமை’க்கு ஆசைப்படும் நாடுகள் கவனத்தோடு வளர்த்துக் கொள்ள வேண்டிய தேவையான பண்பு”[4] என்கிறார் நா.சுப்பிரமணியன்.

“போரிடுவது பெருமைமிக்க சந்தர்ப்பம், போர் வீரர்களுக்குச் சொர்க்கத்தின் வாசல் எப்போதும் திறந்திருக்கும். யுத்தக் களத்தில் மாண்டுவிடும் போர் வீரர்களைப் பிரம்மன் வரவேற்பான்; இந்திரனுடன் வாழலாம். மகிழ்ச்சியோடு போர் புரிந்து புகழையும், உயர்வையும் பெறுவதுதான் சத்திரியதர்மம். ஒரு சத்திரியன் நோய் வந்தோ, வயோதிகத்திலோ சாவதை விட யுத்த களத்தில் சாவது தான் மேல்”[5] என்று பீஷ்மர் கூறுவதாக கா.காசிம் கூறுகிறார்.

**போர்க்கான காரணங்கள்**

பொற்கோ, “பொருள் பெருக்கல், நாடு பிடித்தல், புகழ் பெருக்கல், பழியும் அவமானமும் ஏற்படாமல் தன்னைக் காத்தல், பகைவர் செருக்கடக்கல் என்பன போர்க்காரணங்களாக அமைந்தன”[6] என்கிறார்.

ஞா.தேவநேயன் போர், “அரசர் போர், ஆசை, பாதுகாப்பு, பகை, தண்டனை, மறம், அருள் என்னும் அறுவகைக் காரணத்தாற் பிறக்கும். மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை, புகழாசை, விண்ணாசை என்ற ஐவகை ஆசைகள் தற்காப்பு, நாட்டுக்காப்பு, மதக்காப்பு எனும் மூவகைப் பாதுகாப்பு, பழிதீர்பு, பழம்பகை பொறாமை எனும் மூவகை பகை, இகழ்ச்சி,

திறையிடாமை, படையெடுப்பு ஆகிய மூன்று தண்டனை; கடுமறம், தன்குடி, பிறர் குடிமேல் கொண்ட அருள் ஆகிய அறுவகை காரணமாகப் போர்கள் தோன்றலாம்"[7] என்கிறார்.

மனிதனின் "அளவு கடந்த மண்ணாசை, தம் குடிகளுக்கு வாழ்விடம் நாடல், தம் படை வலி, தம் செங்கோல், தம் ஆணை ஆகியவற்றை அனைவரும் ஒப்புக்கொள்ளச் செய்து அரசர்க்கு அரசராக விளங்கும் ஆர்வம் உறவினரிடமிருந்து அரசுரிமை பெறும் விருப்பம், மானம் காத்தல், பிறன் மகளை மணக்கும் விருப்பம் போர்க்கு வித்திட்டன"[8] என்கிறார் சு.வித்யானந்தம்.

உள்ளத்தில் இயல்பாக ஊறி எழும் பல்வேறு உயிர்க்குணங்களுள் போர் உணர்வும் ஒன்று. உடல் வளர்ச்சிக்கு இன்றியமையா உணவுப்பொருள்களை உயிர்களுக்கு வழங்கி வாழ்வளிப்பது நிலம். அந்நிலவுலகின் இயல்பு எங்கும் ஒரே தன்மைத்தாக அமையவில்லை. இயற்கை வளம் மிக்க காடாய்க்காட்சி அளிக்கிறது முல்லை. நீர்வளம் மிக்க நன்செய்யாய் நலம் பெற்றுள்ளது மருதம். வளம் மிக்க மேடாய் மாண்புற்றுள்ளது குறிஞ்சி. ஒரு பகுதி கடல் வளம் கொழித்துக் கவின் பெறக் காண்கிறோம். ஒரு பகுதி, ஒன்றிற்கும் உதவா உவர் நிலமாய் உளது. மற்றொரு பகுதி மணல் பரந்து மாட்சி இழந்துள்ளது. இயற்கை நிகழ்ச்சியலாம் இவ்வேற்றத் தாழ்வுகள், நிலவளவோடு நின்றுவிடவில்லை. அவை அந்நிலத்தில் வாழும் மக்கள் வாழ்விலும் இடம்பெற்று பெரும் புரட்சிகளை உருவாக்கியுள்ளன. நிலங்களின் ஏற்றத் தாழ்வுகளுக்கு ஏற்ப, அந்நிலத்து மக்கள் வாழ்விலும் ஏற்றத் தாழ்வுகள் இடம் பெற்றுவிட்டன.

நன்செய் போலும் நிறைபயன் நல்கும் நிலப்பகுதிகளில் வாழும் வாய்ப்பினைப் பெற்றவர். பேரின்ப வளம் நல்கா நிலப் பகுதிகளில் வாழ்ந்தவர், வறுமையுற்று, வாழ்வின் வளம் பெறப்படாது வருந்தினர். வாழ்வும் வறுமையும் இவ்வாறு வாழும் நிலத்தின் வளம், வளமின்மைகளின் விளைவாக உண்டாயின. எனினும் அதை உணர்ந்து உள்ளம் அடங்கும் அத்துணை உயர்ந்த பண்பு மக்களுக்கு உண்டாகவில்லை. வளமார்

வாழ்வில் விடப்பெற்றவர் அவ்வாழ்வு தம் முயற்சியினாலேயே வந்தது என எண்ணித் தருக்கினர், தாழ் நிலையில் உள்ளாரைக் கண்டு எள்ளி நகைத்தனர். இல்லாமையால் இயல்பாகவே இடர் உறுவார்க்கு மேலும் இடுக்கண் பல உண்டாக்கினர். இந்நிலைக்கு மாறாக, வறுமையில் உழன்று, வாழ்வின் பயன் இழந்து கிடந்த மக்கள், வளம் கொழிக்கும் நிலத்தாரின் செல்வ வாழ்க்கைக் காணுந்தோறும் சிந்தை நொந்தனர். அத்தகு பெருவாழ்வு தமக்கும் வேண்டும் என ஆசை கொண்டது அவர் உள்ளம் அவ்வாசையை நிறைவேற்றிக் கொள்ள, அவர் எதற்கும் துணிந்து நின்றனர். அவ்வின்ப வாழ்வை அவர்க்கு அளிக்க மேனிலையில் வாழ்வார் முன்வந்நிலர். அதனால் இருதிறத்தார்க்குமிடையே மன வேறுபாடு வளர்ந்தது. அது வளர்ந்து பகையாக மாறிற்று. இறுதியில் அது அவர்களிடையே போராய் உருவெடுத்தது.

**போரியல் நிகழ்வுகள்**

பண்டைத் தமிழர்கள் போருக்குப் பல்வேறு அறக்கோட்பாடுகளை வகுத்துக் கொண்டு போர் செய்துள்ளனர். போருக்குச் செல்லும்பொழுத தமது அடையாளப் பூவையும், தன் திணைக்குரிய பூவையும் சூடிச் சென்றுள்ளனர். போர்க்களம் சென்று பகைவர்க்கு எச்சரிக்கை தெரிவித்தல், ஆயுதம் இல்லாத வீரனுடன் ஆயுதம் உள்ள வீரன் போர் செய்யாமை, போரில் காயம் பட்டோர்க்கு மருத்துவம் கொடுத்தல், போரில் வெற்றி பெற யாகம் செய்தல், வெற்றி பெற்ற பின்னர் வெற்றி மாலை சூடுதல் போன்ற பல்வேறு நிகழ்வுகளை வரையறுத்துப் போரினை மேற்கொண்டுள்ளனர்.

**பூச்சூடிச் செல்லுதல்**

இராமன் போருக்குச் செல்லும்பொழுது தமது அடையாளச் சின்னமான அத்திப் பூவினையும், தன் திணைக்குரிய தும்பைப் பூவினையும் சூடி இராவணனை எதிர்த்துப் போர்க்குச் சென்றதை (கம்ப.யுத்த.பா.1077)
எனும் பாடல் விளக்குகிறது.

இமயம் நோக்கிப் போரை எதிர்கொண்டு கண்ணகிக்குக் கல் எடுக்கச் சென்ற சேரமான் தன்னுடைய அடையாளப் பூவான பனம் பூவினையும், தன்

திணைக்குரிய வஞ்சிப்பூவினையும் தன் வாளிலும், தலையிலும் சூடிச் சென்றான் என்பதை, (சிலம்பு.கால்கோட்.46-51) எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

அதியனின் கல் போன்ற உறுதியான மதிலைப் புகழ்ச்சோழரின் நொச்சிமாலை அணிந்த வீரர்கள் முற்றுகை இட்டு அம்மதிலை அழித்துள்ளனர். இதனை, (பெரிய.3974) எனும் பாடல் விளக்குகிறது.

**ஓலை அனுப்புதல்**

சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயில் எடுக்க இமயம் நோக்கிச் செல்வதாகவும் இச்செயலில் எம்மன்னர் எதிர்ப்பினும் அவர்களுடன் போர் புரிந்து இமயம் சென்று கல் எடுத்துவரத் தயாராக உள்ளோம் என்று தமிழ் நாட்டின் பெருமையைக் கூறும் விதத்தில் வில், மீன், புலி முத்திரையிட்ட ஓலை அனுப்புக என்று ஆணையிட்டான். இதனை,

**“மண்டலை யேற்ற வரைக வீங்கென” (சிலம்பு.காட்சிக்.172)**

எனும் பாடல் விளக்குகிறது. இதிலிருந்து போருக்குச் செல்லும் முன் ஓலை அனுப்பும் வழக்கம் இருந்துள்ளமை புலனாகுகிறது.

**போர் விதி**

போரில் சோர்வடைந்தவர், அச்சமுற்றவர், படையிழந்தவர், பின் வாங்கியவர். இப்படிப்பட்ட தன்மையுடையவர் மேலும் படையைச் செலுத்தலாகாது என்பது போர் விதி. எவரொருவர் வீரத்தை மதியாது அவமதிக்கின்றாரோ அவர் மீதே படைக்கலம் செலுத்துதல் முறை என்பதனை, (கம்ப.கிட்கிந்தா.315) எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**முரசறைதல்**

செங்குட்டுவன் இமயம் நோக்கிக் கல் எடுக்கச் சென்றான். எதிர்ப்போர் மீது போர் தொடுக்கப்படும் என்ற செய்தியை முரசின் மூலம் அறிவித்துள்ளான். இவ்வறிவிப்புக்குக் காரணம் அதனைக் கேட்ட மற்ற நாட்டு ஒற்றர்கள் தங்களின் மன்னனுக்குத் தகவல் தெரிவிக்கவாகும். இதனை,

**“அறைபறை யென்றே யழும்பில்வே ளுரைப்ப” (சிலம்பு.காட்சிக்.177)**

எனும் பாடல் விளக்குகிறது.

பகைவர் போர் செய்யும் போர்க் களத்தில் போரில் ஈடுபடும் வீரர்களுக்குப் படைக்கருவிகளை அளிக்கும் பண்பு இருந்துள்ளமை,

**"படைவழங் குவதோர் பண்புண் டாகலின்" (சிலம்பு.மனையறம்.43)**

எனும் பாடலடிகள் விளக்கும்.

**திறை செலுத்துதல்**

பண்டைக் காலத்தில் வலிமை பெருகிய வேந்தருடன் வலிமை குன்றிய குறுநில மன்னர்கள் போர் தொடுத்து இழப்பை ஏற்படுத்திக் கொள்ளாது தனக்கும், தமது மக்களுக்கும் அழிவு ஏற்படா வண்ணம் வலிமை பொருந்திய அரசனுடன் இணக்கமாகச் சென்று அவ்வரசனுக்குத் திறை செலுத்தும் வழக்கங்கள் இருந்துள்ளதை, (சிலம்பு.இந்திரவிழா.99-100) எனும் பாடல் மூலம் அறியமுடிகின்றது. வாட்போரில் வல்லவனான மகத நாட்டு மன்னன் பகை கொண்டு கரிகாலனுடன் போரிட்டுப் போரில் தோல்வியுற்றுத் திறையாகக் கலைத்திறன் மிக்க பட்டி மண்டபம் தந்துள்ள செய்தியினை,

**"பகைபுறத்துக் கொடுத்த பட்டிமண் டபமும்"**

**(சிலம்பு.இந்திரவிழா.101-102)**

எனும் பாடலடிகள் விளக்குகின்றன.

**போரில் எதிரியையும் மதிக்கும் பாங்கு**

போரில் இராமனுக்கு அரக்கர்கள் பயந்து ஓடிய போது தூடணன் மட்டும் இராமனை எதிர்த்து நின்று போர் புரிந்தான். அவனின் உறுதி மனநிலையைக் கண்டு உனது உறுதிநிலைமை மிக நன்றாயிருக்கிறது என்று அவனின் வீரத்தை மதித்துக் கூறினான். இதனை,

**"நின்ற தூடணன் றன்னையு நோக்கிய நிமலன்**
**நன்று நன்றுநின் நிலையென வருளிறை நயந்தான்"**

**(கம்ப.ஆரணிய.525:2-3)**

எனும் பாடல் விளக்குகிறது. இதிலிருந்து எதிரியாயினும் வீரனை மதிக்கும் பாங்குண்டு என்பதை அறியமுடிகிறது.

**போரில் எதிரியின் படைக்கலங்களை அழித்தல்**

போரில் எதிர்த்து நின்று போர் செய்யும் வீரனைக் கொல்லும் முன்னர் அவனது தேரையும், அவன் கையிலுள்ள வில்லையும், அவனது கவசத்தையும் அழித்த பின்னர் எதிரியைக் கொன்றுள்ளனர். இதனை,

> **"கையின் வெஞ்சிலை யறுத் தொளிர் கவசமுங் கடிந்தான்"**
> **(க.ஆரணிய.527)**
>
> **"தேவ ரார்த்தெழ முனிவர்க டிசைதொறுஞ் சிலம்பும்**
> **...**
> **ஏவி னானவ னெயிறுடை நெடுந்தலை யிழந்தான்" (க.ஆரணிய.528)**

என்னும் இப்பாடலடிகள் உணர்த்துகின்றன.

**பிறர் ஆயுதம் வாங்கிப் போர் செய்தல்**

இராமன், கரனைக் கொல்ல தமது வில் நாணினை வலிய இழுத்தான். அப்போது வில் விரைவாக முறிந்தது. வில்லற்று நின்ற ராமன், வருணனிடம் வில்லைப் பெற்றுக் கரனை அழித்தான் என்பதைக் கம்பராமாயணம் ஆரணிய கண்டத்தில் 542, 543, 544, 545, 546, 547, 548, 549, 550, 551, 552 ஆகிய பாடல்களின் மூலம் அறிய முடிகின்றது. இதிலிருந்து போரில் தனது ஆயுதம் முறிந்தால் மற்றவர்களிடம் ஆயுதங்களைப் பெற்று போர் செய்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

**ஒன்றுக்கு மேற்பட்ட கருவிகளுடன் போர்க்குச் செல்லுதல்**

அனுமனுக்கும் இந்திரசித்துக்கும் நடந்த போரில் அனுமன் பாய்ந்து சென்று இந்திரசித்தின் வில்லைத் தனது கைகளால் பற்றி அதனை முறிந்தெரிந்தான். உடனே இந்திரசித்து வேறொரு சிறந்த வில்லையெடுத்துக் கொண்டு அனுமனுடன் போர் செய்தான். இதனை, (கம்.சுந்தர.1028, 1029) என்னும் இப் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன. இதிலிருந்து போர்க்குச் செல்லும் வீரர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட போர்க் கருவிகளைக் கொண்டு சென்று போர் செய்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

**தூது அனுப்புதல்**

இராமன், அங்கதனிடம் இராவணனிடம் சீதையைக் கொணர்ந்து கொடுத்துச் சமாதானத்திற்கு உடன்படச் சொல், அவ்வாறு இல்லையேல் போர் செய்வது நன்று என்று கருதினால் ஊருக்குள் பதுங்கி வராது எதிரே

வந்து நின்று போர் புரியச் சொல் என்று தூது சொல்லி அனுப்பினான். இதனைக் கம்பராமாயணம் யுத்தகாண்டம் 930, 931, 932 ஆகிய பாடல்களின் மூலம் அறியமுடிகின்றன.

**மதில்களின் சிகரத்தைக் கைப்பற்றுதல்**

மதில் போரில் வெற்றி பெற்று மதிலின் சிகரத்தைக் கைப்பற்றுதல் என்பது சிறப்புக்குரிய ஒன்றாகும்.. இதனைத் தொல்காப்பியர்,

**“குடுமிகொண்ட மண்ணு மங்கலம்”**[9]

என்கிறார். கம்பராமாயணத்தில் இராமன் வானர சேனைகளிடம் இராவணனின் அரண்மனை மதில்களின் சிகரத்தை, அரக்க வீர்களுடன் போரிட்டு வெற்றி பெற்றுக் கைப்பற்றிக் கொள்ளுங்கள் என்கிறார். இதனை,

**“கொடிம திற்குடு மித்தலைக் கொள்கென்றான்”**

**(கம்.யுத்த.965:4)**

எனும் பாடல் விளக்குகிறது.

**போரில் படைகள்**

போரில் நான்கு வகைப் படைகளைக் கொண்டு போர் செய்துள்ளனர். அவை,

1. யானைப் படை
2. தேர்ப்படை
3. குதிரைப்படை
4. காலாற்படை

என்பனவாகும்.

**யானைப் படை**

போர்க்குச் செல்லும் யானைகளின் மீது தங்களது அடையாளக் கொடியினை வைத்துப் போர்க்குச் செல்லுதல் மரபு. இராவணன் யானைப்படையில் யானைகளின் மீது கொடியினைப் பொருத்தி, கொடிகளுடன் போருக்குச் சென்றுள்ளான் என்பதினை, (கம்.யுத்த.தொகுதி1.999) என்ற பாடலடிகளின் மூலம் அறிய முடிகிறது.

**தேர்ப் படை**

இராவணனின், பொன்னால் ஆகிய நீண்ட தேர்கள் ஊழிக்காலத்திலே வீசும் பெருங்காற்றுப் போல விரைந்து போர்க்குச் சென்றுள்ளன. இதனை, (கம்.யுத்த.தொகுதி1.1000) என்று பாடல் சுட்டுகின்றது.

**குதிரைப்படை**

வானரங்கள் இலங்கையின் மதிலை இடித்ததனால் அழகாக இருந்த கடல்போன்ற நீரின் திரைகள் உள்ளே சென்று வெளிப்பட்டு வருவது போலக் குதிரைகள் கோபுர வாயிலின் வழியாகப் போர்க்குச் சென்றன. என்பதனை, (கம்.யுத்த.தொகுதி1.1001) என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

**காலாற்படை**

சிறைவீடு பெற்று மீண்டு வெளியே புறப்பட்டு வருவது போன்று இராவணனின் ஊரர்களாகிய காலாற்படையினர் போருக்கு வெளிவந்தனர். இதனை, (கம்ப.யுத்த. தொகுதி1.1002) என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன.

இதிலிருந்து இராவணன் யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை, காலாட்படை கொண்டு இராமனுடன் போர் செய்துள்ளான் என்பதை அறிய முடிகிறது.

**போரில் ஒற்றர்கள் செயல்பாடுகள்**

மன்னர்கள் போர் தொடங்கும் போதே போர்க்களம் சென்று போரிடாது, தம் படை வீரர்களை அனுப்பிப் போரினை நிகழ்த்தியுள்ளனர். அவ்வாறு அனுப்பிய படை வீரர்களின் நிலையினையும், போர்க்கள நிகழ்வினையும் அறிந்து கொள்ள ஒற்றர்களைப் போர்க்களத்துக்கு அனுப்பி வைத்துள்ளனர். இவ் ஒற்றர்கள் போரில் இறந்தோர், போரின் நிலைப்பாங்கு பற்றிய தகவல்கள் அனைத்தையும் அவ்வப்போது மன்னனுக்குத் தெரியப்படுத்தியுள்ளனர்.

இராவணனிடம் நான்கு திசையினின்றும் போரைக்கண்ட தூதர் தனித்தனிச் சென்று தோல்வியைப் பலர் அறியச் சொல்லுதல் தகாதென்று இரகசியமாகக் கூறியுள்ளனர். இதனை, (கம்.யுத்த.தொகுதி1.1044) எனும் பாடல் மூலம் அறியமுடிகிறது.

**மன்னன் போர்க்குச் செல்லுதல்**

போரில் பிரகந்தன் இறந்த செய்தியை ஒற்றர்கள் இராவணிடம் கூற, கடுங்கோபம் கொண்டவனாய் போர்க்கு இராவணன் செல்கிறான். இதனைக் கம்பராமாயணம் யுத்தகாண்டம் 1056, 1057, 1058, 1059, 1060, 1061, 1062, 1063, 1064, 1065, 1066, 1067, 1068 என்ற பாடல்கள் மூலம் அறிய முடிகின்றது. இதிலிருந்து போர் தொடங்கிய நாள் முதல் இறுதி வரை மன்னன் போர் புரிவது இல்லை. பகை கொண்ட இரு சேனைப் படை வீரர்களும் போர் செய்து கொண்டுள்ளனர். போரின் நிலையினைக் கருத்தில் கொண்டு தக்க சூழல் பார்த்து மன்னன் போருக்குச் செல்வதைக் கம்பராமாயண அடிகள் விளக்குகின்றன.

போர்க்களத்திற்குப் பகை மன்னரான இராவணன் வந்ததை ஒற்றர்களின் மூலம் அறிந்த இராமன் போர்க்களம் புகுந்த செய்தியைக் கம்பராமாயண யுத்தகாண்டம் 1071, 1072, 1073, 1074, 1075, 1076, 1077, 1078, 1079 ஆகிய பாடல் மூலம் அறியமுடிகின்றது. இதிலிருந்து பகை மன்னர்கள் இருவரும் ஒத்த வலிமை கொண்ட தங்களுக்குள் மோதிக் கொள்வார்களே அன்றி, வலிமை குன்றிய படை வீரர்களுடன் மன்னன் போர் புரிவதில்லை என்பதை அறியமுடிகிறது.

**போரில் கிரீடத்தின் சிறப்பு**

இராமனும் இராவணனும் ஒருவரை ஒருவர் எதிர்த்துப் போர் புரியும் போது இராமன் எய்த அம்பு இராவணனின் கீரிடத்தைத் தாக்கி விழச் செய்வதை, (கம்.யுத்த.1207) எனும் பாடல் விளக்குகிறது.

கீரிடத்தை இழந்த இராவணன் நாணங் கொண்டு கண்கள் தரையை நோக்கி ஒளியிழந்த முகத்தினாய், ஆயுதமின்றி வெறுங்கைகளைக் தொங்க விட்டவனாய் நிற்கிறான். இதனை, ‘(அப்போது போர்புரியுங் கருவிகளின்றிச் செருக்குப் போனமையால்) கீழே பார்க்கின்ற கண்களை யுடையவனும் ஒளியிழந்த முகத்தையும் தலையையுமுடையவனும், (ஆயுதமின்றி) வெறுமையான கைகளைத் தொங்கவிட்டிருப்பவனாய் அதனால் விழுதையுடைய ஆலமரத்தையொத்தவனுமான இராவணன், அறத்தைக் கடந்த

(கொடிய)வர்களின் செய்கை இவ்வணந்தான் முடியுமென்னு உலகத்தவர் ஆரவாரித்துச் சொல்ல, (தன்)நிறம் (முன்னும்) கனுக்கி கால்விரல் நிலத்தைக் கீறிக் கொண்டிருக்க நின்றான். அறங்கடந்தவர் செயலிது என்று இராவணனைப் பற்றி உலகம் ஆரவாரித்துக் கூறியதாக வந்தது.' (கம்.யுத்த.1212) என்று கம்பராமாயணப் பாடற் குறிப்புகள் தெரிவிக்கின்றன.

இராவணன் கீரிடத்தையும், ஆயுதங்களையும் இழந்து நிராயுத பாணியாக நிற்கும் அவலம் கண்டு இராமன் இரங்கி உன்னைக் கொல்வதனை நான் நினைக்கவில்லை என கூறி இராவணனைக் கொல்லாது விடுகிறான். இதனை, (கம்ப.யுத்த.1213:1-2) என்னும் இப்பாடலடிகள் சுட்டும்.

**தோல்வியுற்ற மன்னனுக்கு வாய்ப்பு வழங்குதல்**

இராமனுக்கும் இராவணனுக்கும் நிகழ்ந்த முதற்போரில் தோல்வியுற்ற இராவணனைப் பார்த்து இராமன், மீண்டும் என்னுடன் போர் செய்ய விருப்பம் உண்டெனின் இன்று போய் நாளை உன் படைகளுடன் போருக்கு வா! என்று கூறி இராவணனைக் கொல்லாது போர்க்களத்தில் இருந்து அனுப்புகிறான். இதனைக் கம்பராமாயண யுத்த காண்டம் 1214, 1215, 1216, 1217, 1218 ஆகிய பாடல்கள் விளக்குகின்றன. இக்கருத்தினையே வள்ளுவரும்,

**"பேராண்மை எனப தறுகண்ஒன்று உற்றக்கால்**
**ஊராண்மை மற்றுஅதன் எ∴கு"**[10]

என்று உரைக்கிகறார். அஞ்சாமலும் இரக்கமின்றியும் பகைவரோடு போரிடும் கடு மறத்தைப் பேராண்மை என்று சொல்லுவர். ஆயினும் அப்பகைவாக்கு ஒரு தாழ்வு வந்த போது இரக்கப்பட்டு, அதை நீக்கும் பொருட்டு அவர்க்கு உதவி செய்வதை அப்பேராண்மையின் கூர்மை என்கிறார்.

**தூது செல்லும் ஒற்றரைத் துன்புறுத்தாதிருத்தல்**

அதிகாயன் என்ற போர் வீரன், மயிடன் என்ற ஒற்றனிடம் இலட்சுமணனை என்னுடன் தனித்து நின்று போர் செய்ய வரச்சொல் என்று கூறித் தூதுவனை அனுப்புகிறான். தூது சென்ற மயிடனை இராமனுடைய வானர சேனைகள் பற்றுகின்றன. இதனைக் கண்ட இராமன், இவன் தன் தலைவன் கூறிய வாய் வார்த்தையையே கூறுபவன். அதற்கு மேல் எதையும்

அறியான். படைக்கலம் இன்றி வந்துள்ள இவன் தூதுவன் இவனைச் சினவாதீர்கள் என்று கூறி வானர வீரர்களை விலக்கினான். இதனை, (கம்ப.யுத்த.1721, 1722) எனும் பாடல்களின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

**போரில் தூது சென்ற ஒற்றனுக்குப் பரிசு வழங்குதல்**

அதிகாயன் மயிடனிடம் இலட்சுமணனைத் தனித்துப் போர் புரிய என்முன் அழைத்து வரின் உன்னையும் ஓர் அரசனாக்குவேன், கள் நிறைந்த குடங்கள் எண்ணாயிரமாயினும் தருவேன், தெய்வ நிதிகளுக்கு எல்லாம் தலைவனான குபேரன் முறைமை பற்றித் தந்தனவுமாகிய இரத்தினங்கள் ஒளிவிடுகிற அணிகலன்களைத் தருவேன். சிவந்த கண்களையுடைய மதம்மிக்க யானைகள் நூறாயிரம் வேண்டுமானாலும் தருவேன், பொன்னால் ஆன தேர்களும், பாய்ந்து செல்லும் குதிரைகளும் தருவேன். இரத்தினங்களும் பட்டாடைகளும் கொண்ட வண்டிகள் ஆயிரத்திற்கும் அதிகமாகத் தருவேன் என்று அதிகாயன் மயிடனிடம் கூறினான். இதனைக் கம்பராமாயணம் யுத்தகாண்டம் 1713, 1714, 1715, 1716, 1717, 1718, 1719 ஆகிய பாடல்களின் மூலம் அறியமுடிகிறது. இதிலிருந்து ஒற்றர்களுக்குப் பரிசு வழங்கும் வழக்கம் இருந்ததை உணரமுடிகிறது.

**ஒற்றன் தெளிவு**

இந்திரசித்து இலக்குவணனைப் பார்த்து ஒற்றனாகிய சாரனிடம் இவன் தான் பரதனுக்கு முன்னோன் ஆகிய இராமன் துணைத்தம்பியா? எனக்கேட்டான். அதற்கு ஒற்றனாகி சாரன் ஆம் என மறுமொழி கூறினான். இதனை, (கம்ப.யுத்த.2042) எனும் பாடல் விளக்குகிறது. இதிலிருந்து ஒற்றனாக இருப்பவன் பல்வேறு நகரங்களுக்குச் சென்று தங்கி, பல்வேறு மக்களைச் சந்தித்து அறிந்து வைத்திருக்கும் தன்மையைக் கொண்டிருப்பான் என்பதை அறியமுடிகிறது.

**ஆயுதம் இன்றி போர்**

போர்க்களத்தில் அகம்பன் ஆயுதத்தினை இழந்து வெறும் கையுடன் நின்றதை அறிந்த அனுமன் ஆயுதத்தால் அவனைத் தாக்குதல் குற்றம்

என்பதை உணர்ந்து தனது தண்டாயுதம் கொண்டு தாக்காது, தனது இடக்கை கொண்டு குத்தினான் என்பதை, (கம்ப.யுத்த.2530) எனும் பாடல் விளக்குகிறது.

**ஒற்றர் செயலில் பிழை**

இந்திரசித்து விட்ட பிரமனது அம்பினால் இலக்குவணன் செயலற்றுக் கிடந்ததைக் கண்டு, இராமன் அழுது புலம்பி நினைவு இழந்து கிடந்தான். இதனைக் கண்ட ஒற்றன், தம்பியின் பிரிவால் இராமன் மரணம் அடைந்து விட்டதாகத் தவறாகக் கருதி இராவணனிடம் சென்று உன் பகை முடிந்தது, இராமன் இறந்து விட்டான் என்று தவறாகக் கூறியுள்ளான். இதனை, (கம்ப.யுத்த.2623) என்ற பாடல் விளக்குகிறது. இதிலிருந்து ஒற்றர்கள் கூறும் கருத்துக்கள் அனைத்தும் சரியானதாக அமைந்து விடாது, அவர்களின் கூற்றிலும் பிழை உண்டு என்பதை அறியமுடிகின்றது.

**போர்க்களத்தில் மருத்துவம்**

இந்திரசித்து விட்ட பிரம்ம அம்பினால் இலக்குவணன் முதல் வானரப் படைகள் யாவும் மயக்கமுற்று போர்க் களத்தில் கிடந்தனர். அனுமன் மருந்து மலையைக் கொண்டு போர்க்களம் வந்ததும் அம்மருந்து மலையின் காற்றுப் பட்டதும் மயக்கத்தில் இருந்து மீண்டு உயிர் பெற்று எழுந்தனர். இதனை, (கம்ப.யுத்த.2756, 2758) என்ற பாடல்கள் விளக்குகின்றன.

**துன்பச் செய்தி கொணர்ந்த ஒற்றன் நிலை**

இலக்குவணன் விட்ட அம்பினால் இறந்த இந்திரசித்தின் இறப்பைத் தூதுவன் இராவணனிடத்தில் கூறினான். துன்பச் செய்தி கொணர்ந்த தூதுவனை இராவணன் வாளால் வெட்டிக் கொன்றான். இதனை, (கம்ப.யுத்த.3149) எனும் பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

**நிராயுதபாணி**

பிரகந்தன் தண்டாயுதம் கொண்டு நீலனைத் தாக்கியவுடன் நீலன் அவன் கையிலுள்ள தண்டாயுதத்தைப் பறித்துவிட்டுத் தன் கையினால் பிரகந்தனை அடித்து இரத்தம் கக்கச்செய்தான். இதனை, “(பிரகத்தன் தண்டாயுதங் கொண்டு அடித்தவுடனே நீலன்) அதற்குச் சலியாதவனாய், (அவன்)

கையிலெடுத்திருந்த தண்டாயுதத்தைப் பறித்தெறிந்துவிட்டு, இப்போரை முடிப்போமென்று கருதி, (இதற்குமுன் அவ்வரக்கன்) குடித்துள்ள இரத்தத்தை உமிழ்த்தாற் போல இரத்தத்தைக் கக்குமாறு கையினால் தாக்கினான்" (கம்ப.யுத்த.1038) என்ற பாடற் குறிப்புகளின் வாயிலாக அறியமுடிகிறது. இதிலிருந்து ஆயுதம் இழந்தவனைத் தம் கையில் ஆயுதம் இருந்தும் தாக்காது, கையினால் தாக்க வேண்டும் என்ற உயரிய கோட்பாட்டுடன் போர் செய்த நீலன் நிகழ்வைக் கம்பராமாயணம் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**தன் படைவீரர்களுக்கு ஆயுதம் வழங்குதல்**

கும்பகர்ணனும், சுக்ரீவனும் ஒருவரை ஒருவர் எதிர்த்துப் போர் புரிகையில், கும்பன் தண்டாயுதம் கொண்டும், சுக்ரீவன் மரத்தினைக் கொண்டும் போர் புரிந்துள்ளனர். அப்போது சுக்ரீவனுக்கு நீலன் என்பவன் தண்டாயுதம் கொடுத்துப் போர் புரியத் துணை செய்கிறான். இதனைக் கம்பராமாயணம் யுத்தகாண்டம் 1915, 1916, 1917 ஆகிய பாடல்களின் மூலம் அறியமுடிகிறது. இதிலிருந்து தன்னுடைய படையினர்க்கு ஆயுதம் வழங்கிப் போர்புரிய உதவியுள்ளமை புலனாகுகின்றது.

**போரில் உயிருக்குப் பயந்து ஓடியநிலை**

புகை நிறக் கண்ணனும், மாபக்கனும் தண்டாயுதம் கொண்டு அனுமனைத் தாக்கும் போது இவ்விருவர்களின் கையில் இருந்த தண்டாயுதத்தினை அனுமன் பிடிங்கி, அதனைக் கொண்டே அவர்களைத் தாக்க முயன்ற போது தங்களுயிரைக் காப்பதற்குப் புறமுதுகிட்டு ஓடியதை, (கம்ப.யுத்த.2125,2126) என்ற பாடல்களிலும் அறியமுடிகிறது.

**போர்க்களத்தில் தனக்கு நிகரான வீரனுடன் போர் செய்தல்**

இந்திரசித்து சுக்ரீவனைப் பார்த்து, போரில் சிங்கமானது யானையுடன் தான் போர் செய்யுமே தவிர, குரங்குடன் போர் செய்யாது. அதனால் உன் மீது அம்பு செலுத்தி என்ன பயன். என்னுடன் போர் செய்ய வல்லவனாகிய இராமனின் தம்பியான இலக்குவனனைக் காட்டிக் கொடு என்று கூறினான். இதனை, (கம்ப.யுத்த.2988) என்ற பாடல் விளக்குகிறது. வீரன் ஒருவன் போரில் தனக்கு நிகரான வீரனுடன்தான் போர் செய்ய விரும்புவான்.

தன்னைவிட வலிமை குன்றிய வீரனுடன் போர் புரிய விருப்பம் கொள்ள மாட்டான் என்பதை உணர முடிகிறது.

**போர்க்குச் செல்லும் போது போர்க்குரிய அணிகள் கொள்ளுதல்**

இராமன் போருக்குச் செல்லும்பொழுது தனது உடைவாளை இடையின் வலப்புறத்தில் கட்டிக் கொண்டும், கவசத்தை மேனியில் அணிந்து கொண்டும், விரல் உறைகளையும், கையுறைகளையும் கை மறையும் படி கட்டிக் கொண்டும், அளவற்ற அம்புகளைக் கொண்ட அம்பாரத்துணியை முதுகுபுறத்தில் கட்டிப் போர்க்கோலம் கொண்டு போர்க்குச் சென்றுள்ளான் என்பதைக் கம்பராமாயணம் யுத்தகாண்டம் 3642, 3643, 3644 ஆகிய பாடல்களின் வாயிலாக அறிந்து கொள்ளமுடிகின்றது.

**போர் நெறி**

இராமனது அம்புகள் துளைத்தலால் இராவணன் தன் தேரின் மீது வீழ்ந்து உணர்ச்சியற்றுக் கிடந்ததை அறிந்த இராமன் போர் அறத்தை நினைவு கொண்டவனாக அம்பு விடும் செயலை நிறுத்தினான் என்பதை (கம்ப.யுத்த.3840) என்ற பாடலடிகள் சுட்டும்.

இதிலிருந்து போரில் காயமுற்றுச் சுயநினைவு இழந்து கிடக்கும் வீரரின் மேல் அம்பு செலுத்துதல் போர் நெறியன்று என்பதை அறியமுடிகிறது.

**போரில் புறமுதுகிடுதல்**

இராவணன் எதிர்நின்று இடும் போரில் முதுகுப் பக்கத்தில் பதிந்துள்ள சிவந்த தழும்புகளைக் கண்டு இவன் புறமுதுகிட்டானே என இராமன் வருந்தியுள்ளான். இதனைக் கம்பராமாயணம் யுத்தகாண்டம் 3874, 3875 பாடல்கள் உணர்த்துகிறது. இதிலிருந்து போரில் புறமுதுகிட்டு இறந்தால் அவன் வீரன் அன்று, கொன்றவனுக்கும் வெற்றிச் சிறப்பு அன்று என்பதை அறியமுடிகிறது. வீடணன் இராமனிடத்தில் இராவணன் முதுகில் வடு வந்தமைக்குக் காரணம் யானைகளின் கொம்புகள் மார்பில் அழுத்தி முதுகின் வெளிப்புறம் அழுத்தியதனால் உண்டான புண்களின் தழும்புகள், யமனுடை அம்புகளின் வேகத்தாலும், அனுமன் இராவணனின் மார்பில் குத்தியதாலும் ஏற்பட்ட தழும்பே தவிர அவன் போரில் புறமுதுகிடாது மார்பில் அம்பு

தாக்கியே இறந்த வீரன் என்று கூறினான். இதனைக் கம்பராமாயணம் யுத்தகாண்டம் 3879, 3880, 3881, 3882 ஆகிய பாடல்கின் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

**போர் வீரனுக்கு இறுதிக்கடன் செலுத்துதல்**

இராமன் தனது பகைவனான இராவணன் இறந்த பின்னரும் அவனது வீரத்தினை எண்ணி அவனுக்குச் சிறப்புச் செய்யும் வகையில் வீடணனிடம் இராவணனுக்கு விதிமுறைப்படி குறையுறாது இறுதிக் கடனைச் செய்வாயாக என்று கூறினான். இதனை, (கம்ப.யுத்த.3883) எனும் பாடல் மூலம் அறியமுடிகின்றது. இதிலிருந்து போரில் இறந்த பகை மன்னனுக்கும் இறுதிக்கடனைச் செய்யச் சொல்லும் பாங்கு போற்றுதலுக்குரியது.

**வாகைப்பூ சூடுதல்**

செங்குட்டுவனுக்கும், கனகவிசயனுக்கும் நடந்த போரில் செங்குட்டுவனின் படை வீரர்கள் போரில் வெற்றி பெற்று வாகைப் பூவினைத் தம் முடியில் அணிந்து கொண்டனர். இதனை,

**“தலைத்தார் வாகை தம்முடிக் கணிந்தோர்”**

**(சிலம்பு.நீர்ப்படைக்.36)**

எனும் பாடலடி மூலம் அறியமுடிகிறது.

**வாகைப்பூ மாலை பரிசாகக் கொடுத்தல்**

சிதைந்த மார்பு கவசத்துடன் நிறைந்த புண்களைக் கொண்டு பகைவர்களைப் புறமுதுகுக் காட்டி ஓடும்படி போரிட்ட வாள் வீரர்களுக்குப் பொன்னால் செய்யப்பட்ட வாகைப்பூ மாலையைப் பரிசாகச் செங்குட்டுவன் கொடுத்ததை, (சிலம்பு.நீர்ப்படைக்.41-44) எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**ஆயுதப் பொதுப்பெயர்**

ஆயுதப் பொதுப் பெயர்களைத் திவாகரம் நிகண்டு,

**“படைக்கலம் தானை கடுமுள் சுதனம்**
**படை ஏதி துப்பு கழுமுள் அதனோடு**
**ஆடல்வெங் ருவி ஆயுதப் பெயரே”**[11]

என்று உரைக்கிறது. இதில் காப்பியங்களை ஆயுதப் பொதுப் பெயர்களாக ஏதி, படை, கருவி, படைக்கலம், ஆயுதம் என்ற பெயர்களில் கூறியுள்ளனர். இதனை,

**“ஏதி யாவதுவு மின்றி யுலகியாவு மிகலிற்” (கம்ப.ஆரணிய.22:2)**

**“மெய்வ ரத்தினன் மிடற்படை விடப்ப டுகிலன்”**

**(கம்ப.ஆரணிய.35:1)**

**“கருவி யோடின சச்சையுங் கவசமும் கழல”**

**(கம்ப. ஆரணிய.517:2)**

**“கொள்ளைத் தெய்வவான் படைக்கலம் யாவையுங் கொல்லா”**

**(கம்ப.யுத்த.147:2)**

**“ஆயிரங் கோடிபே யணிகொ ளாயுதம்” (கம்ப.யுத்த.1067:1)**

எனும் பாடலடி மூலமும் அறிய முடிகின்றது.

**ஆய்தக் கூர்மையின் பெயர்கள்**

ஆயுதக் கூர்மையின் பெயர்களை,

**“வள் அயில் நுதி நுனை வை அர் நிசிதம்**

**அள் வசி வயிரம் பூ அவற்றின் கூர்மை”**[12]

என திவாகரம் நிகண்டு உரைக்கிறது. இதில் வயிரம், நுதி, வள், அயில், வை, பூ ஆகிய பொய்களைக் காப்பியங்கள் உரைக்கின்றன. இதனை,

**“துணிக்குறு வயிர வாட் டடக்கை தூக்கிப்போய்”**

**(கம்ப.அயோத்தி.921:2)**

**“கொட்புறு புரவித் தெய்வக் கூர்நுதிக் குலிசத் தாற்குங்”**

**(கம்ப.சுந்தர.25:1)**

**“வள்ளுறு வயிரவாண் மன்னன் பன்முறை” (கம்ப.பால.231:1)**

**“வைத்தலைப் பகழியான் மழைசெய் வில்லினான்”**

**(கம்ப.ஆரணிய.480:4)**

**“பூவ ராவுமேற் புரந்தரன் றன்னொடு பொன்றா”**

**(கம்ப.ஆரணிய.510:1)**

"அயில்வே லனல் கால் வனவா நிழலாய்" (கம்ப.பால.1249:1)

எனும் பாடலடிகள் விளக்கும்.

**போர்க் கருவிகளின் வகைகள்**

போரில் பயன்படுத்தப்படும் கருவிகளை அதன் செயல்பாடுகளைக் கொண்டு எமூன்று வகையாகப் பகுக்கப்படுகின்றன.

1. எய்தற் கருவிகள்
2. எறிதற் கருவிகள்
3. சுழற்றுதற் கருவிகள்

**எய்தற்கருவி**

போர்க்களத்தில் தொலைவில் நின்று பகைவரைப் போர் செய்து அழிக்க வில்லினையும், அம்பினையும் போர் வீரர்கள் பயன்படுத்தியுள்ளனர். போர் வீரன் தனது மார்பின் வலிமையினையும், தோளின் வலிமையினையும் பயன்படுத்தி வில்லினைக் கொண்டு நெடுந்தொலைவில் பலர் இருப்பினும் அவர்களில் ஒருவரை மட்டும் இலக்காகக் கொண்டு எய்துள்ளான்.

**அம்பு**

அம்பு என்பதற்கு "நீர்; கடல்; மேகம்; விண்; உலகம்; மூங்கில்; கணை; எலுமிச்சை; பாதிரி; திப்பிலி; வெட்டிவேர்; வளையல்; சரகாண்ட் பாடாணம்"[13] என்று மெய்யப்பன் தமிழ் அகராதி பொருள் தருகிறது. அம்பின் அமைப்பானது, "முகம் 5 அங்குல அகலமும் அவ் அளவு நீளமும் கொண்டு கூரியதாயும் இருக்கும். அம்பின் மொத்த நீளம் படிமத்தின் தேகாங்குலத்தால் 21 அல்லது 42 ஆக இருக்கலாம். அம்பின் கனம், படிமத்தின் சுண்டு விரல் கனத்துக்குச் சமமாகும். அம்பின் அடிப்பகுதி பலவகைச் சிறகுகளால் அலங்கரிக்கப்பட வேண்டும். இறகின் அகலம் ஓர் அங்குலமாகும். இவ் அடிப்பகுதியில் அம்பை நாண் கயிற்றில் நிலைக்க வைத்து எய்வதற்கு ஏதுவாக நாபி என்ற பெயரில் ஒரு பள்ளம் உண்டு. இது அம்பின் அடி அகலத்தில் மூன்றில் ஒரு பங்கு ஆழமும் அகலமும் கொண்டிருக்கும்"[14] என்று சிற்பச் செந்நூல் கூறுகிறது.

இது ஆரம்பகாலத்தில் மரத்தின் குச்சிகள் கொண்டு அமைக்கப்பெற்றது. பின்னர் இரும்பினைக் கொண்டு உருவாக்கப்பட்டது. அம்பின் நடுப்பகுதி நேராகவே பெரும்பாலும் இருக்கும். சில அம்புகள் நடுப்பகுதி சிறிது தூரத்திற்கு நேராக இருந்து பின்னர் பாம்பு போன்று வளைந்த அமைப்பிலும் இருந்துள்ளன. அம்பில் அம்பின் உரிமையாளர் பெயரும் பொரிக்கப்பட்டு இருக்கும்.

**அம்பின் பெயர்கள்**

அம்பின் பெயர்கள் குறித்து,

> **“பகழி, வாளி, வண்டு, பாணம்,**
> **நிகழ்சாரம், பத்திரி, சீலிமுகம், பல்லம்,**
> **பங்கம், கணை, குதை, கங்கபத்திரம்,**
> **அத்திரம், தோணி, கோல், வசிகம் அம்பே”**[15]

என திவாகர நிகண்டும்,

> **“பகழி, வாளி, தோணி, வாணம்,**
> **கதிரம், பல்லம், கணை, கோல், சரமொடு,**
> **வண்டு, பத்திரம், சீலிமுகம், வசிகம்,**
> **அம்பின் பெயர் உரவாகலு முரித்தே”**[16]

என பிங்கல நிகண்டும்,

> **“வெம்பகழி கோப்பல்லம் பாணங் சுகங்காண்ட**
> **மம்புகணை கோல்சரமே யாம்”**[17]

என உரிச்சொல் நிகண்டும் உணர்த்துகின்றன.

காப்பியங்களில் அம்பினை அம்பு, சரம், வாளி, கணை, வீசிகம், கோல், ஏ, பல்லம், கங்கபத்திரம், பணம் என்கிற பெயர்களில் அழைக்கப்பட்டுள்ளன. இதனை,

> **“இன்புறுதசைகள் வெவ்வேறு**
> **அம்பினால் ஈர்ந்து கொண்டு” (பெரிய.766:4)**

> **“பொற்சிலை வளைய எதிர்ந்தவர்**
> **புற்றரவு அனைய சரம்பட” (பெரிய.629:1)**

“நச்சழல் பகழி வேடர்க்கு

அதிபதி நாகன் என்பான்” (பெரிய.656:4)

“பல்வேறு வாளி புதைபார்த்து

உடன்போத ஏவி” (பெரிய.713:1)

“வெங்கணைபடு பிடர்கிழிபட

விசைஉருவிய கயவாய்” (பெரிய.729:1)

“விண் செல்கில செல்கின்றன விசிகம்மென இமையோர்”

(கம்ப.யுத்த.2999:1)

“கோலொன்று துணித லோடுங் கூற்றுக்குங் கூற்ற மன்னான்”

(கம்ப.யுத்த.3070:1)

“ஏவருஞ் சிலையினா னெதிர்வருந் நெறியெலாம்”

(கம்ப.பால.1124:2)

“வேலு மற்றன அற்றன வில்லொடு பல்லம்” (கம்ப.ஆரணிய.444:4)

“ஆய்ந்த கங்கபத் திரங்கள்புக் கரக்கர தாவி”

(கம்ப.ஆரணிய.518:1)

“பாங்குஓடிச் சிலைவளைத்துப்

படைஅநங்கன் விடுபாணம்” (பெரிய.292:1)

என்பன போன்ற பாவடிகள் விளக்கும்.

**அம்பின் கூர்மை**

அம்பினைக் கூர்மையாக்க அரத்தினைக் கொண்டு அராவி கூர்மை செய்துள்ளனர் என்பதனை,

“அரங்கு டைந்தன அயினெடு வாளிக ளம்மா” (கம்ப.யுத்த.1440:4)

எனும் பாடலடி விளக்குகின்றது.

**போரில் அம்பு செலுத்தும் முறை**

இராமன் தன் தம்பி இலக்குமணனிடம் இந்திரசித்து போரில் பிரம்மன் அம்பினை (பிரமாஸ்திரம்) உன் மேல் செலுத்தினால், விலக்குவதற்காகவன்றி நீயும் பிரமனது அம்பினை அவன் மேல் செலுத்தாதிருப்பாயாக. அவ்வாறு நீ

செலுத்தினால் அவன் மட்டும் இன்றி வானுலகமும், இவ்வுலகமும் அழிந்தொழியும் ஆதலால் பிரம்மன் அம்பு செலுத்துதலைத் தவிர்ப்பாயாக என்கிறார். இதனை, (கம்ப.யுத்த.2893) எனும் பாவடிகள் இயம்புகின்றன.

இராமன் இலக்குமணனிடம், இந்திரசித்து சிவபெருமானின் பாசுபதாத்திரம் மற்றும் திருமாலின் நாராயணத்திரம் ஆகியவற்றை ஒரு சேர உன் மேல் ஏவுதல் கூடும். அவ்வாறு ஏவினால் அவ்வம்புகளை அவ்வம்புகளாலேயே ஆற்றல் கெடுமாறு செய்து உன்னுடைய வில் வலிமையாலே புகுந்தவனது ஆவியினைக் கவர்ந்து கொண்டு மீள்வாயாக என்று கூறினான். இதனை, "புகழினால் மிக்கவனே! மூன்று கண்களையுடையவனான சிவபிரானது அஸ்திரமும் (பாசுபதாஸ்திரமும்) சக்கரப் படையை யுடைய முதற் கடவுளினது அஸ்திரமும் (நாராயணாஸ்திரமும்) முன்னே நின்று (யாவும் அழிவனவாக இந்திரசித்து) ஒரு சேரவிடக் கூடும். அங்ஙனம் விட்டால், அந்த அஸ்திரங்களையும் அவற்றாலேயே ஓயுமாறு தகுந்தவகையாகத் தொடுத்து, பின்பு உன்னுடைய வில்வலியாயைத் திறமையினால் (போரிற்) புகுந்த (அந்த) இந்திரசித்தினுடைய ஆவியைக் கவர்ந்து கொண்டு போவாய்" (கம்ப.யுத்த.2894) என்ற பாடற் குறிப்புகள் போரில் அம்பு செலுத்தும் முறை பற்றிக் குறிப்பிடுகின்றன.

போரில் அறத்தின் வழிநின்று இந்திரசித்து, தான் பயின்ற மாயச் செயல்களை இயற்றும் முன்னரே குறிப்பினால் அறிந்து அறவே அழித்திடுவாயாக. மேலும் போர் செய்து அவன் தளர்ச்சியுற்ற சமயம் பார்த்து இந்திரசித்துவைக் கொல்வாயாக என்றான். இதனை,

> **"வல்லன மாய விஞ்சை வகுத்தன அறிந்து மாளக்**
> **கல்லுதி தரும மென்னுங் கண்ணகன் கருத்தைக் கண்டு**
> **பல்பெரும் போருஞ் செய்து வருந்தின அற்றம் பார்த்துக்**
> **கொல்லுதி யமரா் தங்கள் கூற்றினை கூற்ற மொப்பாய்"**
>
> **(கம்ப.யுத்த.2895)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

போரில் வீரன் உணர்ச்சி வசப்படாமல் நின்று எதிரியை உணர்ச்சி வயப்படச் செய்தல் வேண்டும். ஆதலால் இந்திரசித்து உன் மீது விடும் அம்புக்கு நீ பதிலம்பு விடாது அதிலிருந்து விலக்குவாயாக. இவ்வாறு நீ செய்தால் உணர்ச்சி வயப்பட்டு நிதானத்தையும், கூர்ந்தரியும் ஆற்றலையும் இழந்தவனாகிப் பலவீனப்படுவான். அவ்வாறு அவன் பலவீனப்படும் போது உன் அம்பினை எடுத்து அவன் மார்பினைத் துளைக்குமாறு செய்து கொன்றுவிடு என கூறினான். இதனை,

**"பதைத்தவன் வெம்மை யோடிப் பல்பெரும் பகழி மாரி**
**விதைப்பன விதையா நின்று விலக்கினை மெலிவு மிக்கால்**
**உதைத்தவன் சிலையின் வாளி மருமத்தைக் கருதி யோட்டி**
**வதைத்தொழில் புரிதி சாய நூல்நெறி மறப்பி லாதாய்"**

**(கம்ப.யுத்த.2896)**

எனும் பாடல் மூலம் அறியமுடிகின்றது. இதிலிருந்து போரில் பகைவரை மார்பில்தான் தாக்க வேண்டும் என்ற போர் நெறியைக் கம்பர் முன்வைத்துள்ளார் என்பதை அறியமுடிகிறது.

இந்திரசித்து உன்மேல் அம்பு தொடுப்பதற்கு முன்னே நீ அவன் மேல் அம்பு தொடுத்துப் போர்த்துறைகள் தோறும் தடுத்தற்குரியனவாகிய பகைவனுடைய படைக்கலங்களைத் தடுத்து விலக்குவாயாக. மேலும் பகைவனது மனக்கருத்தினையும் முகக்குறிப்பினையும் அறிந்து விரைந்து சென்று தாக்கக் கூடியதுமான அம்புகளை அவன் மேல் செலுத்துமாறு உரைத்ததை, (கம்ப.யுத்த.2897) எனும் பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

**அம்பில் பெயர் பொரித்தல்**

வாலிக்கும் சுக்ரீவனுக்கும் நடந்த போரில் இராமன் மறைந்திருந்து வாலியின் மீது அம்பு எய்து வாலியை வீழ்த்தினான். கீழே விழுந்த வாலி மறைந்திருந்து தன் மீது அம்பு எய்தது யார் எனத் தெரிந்து கொள்ள தனது மார்பில் புதைந்துள்ள அம்பினைப் பிடிங்கி அதனை நோக்கும் போது 'இராம' என்ற பெயர் பொரிக்கப்பட்டதைக் கண்டான். இதனை,

"பொறித்த நாமத்தை யறிகுவா னோக்கினன் புகழோன்"

(கம்ப.கிட்கிந்தா.315:1)

"செம்மைசேர் நாமந் தன்னைக் கண்களிற் றெரியக் கண்டான்"

(கம்ப.கிட்கிந்தா.316)

எனும் பாடல்களின் மூலம் அறியமுடிகிறது. இதிலிருந்து அம்பில் அம்பிற்குரியவன் பெயர் பொறிக்கப்பட்டிருக்கும் என்பதை அறியமுடிகிறது.

**அம்பு தேர்வு செய்து எய்தல்**

அம்புகள் பல வகைகளாக, பல வடிவங்களாக இருந்திருக்கின்றன. போரின் நிலையினைக் கொண்டு அதற்குத் தகுந்தாற் போன்று அதற்கான அம்பினை எய்துள்ளனர். இராமன் தனது அம்புக்கூட்டில் உள்ள பல்வேறு வகை அம்புகளை ஆராய்ந்து தெரிவு செய்து அவ் அம்பினை அரக்கர்கள் மேல் எய்துள்ளான். இதனை,

"தெரிகணை மூழ்கலிற் றிறந்த மார்பினர்" (கம்ப.ஆரணிய.490:1)

எனும் பாடலடி மூலம் அறியலாம்.

**அம்பின் பயன்பாடு**

வாலியைக் கொன்ற இராமனது அம்பைக் கடலில் நீராட்டித் தூய்மை செய்து மீண்டும் இராமனின் அம்பறாத்துணிக்கே கொண்டு வந்து சேர்த்தனர். வீரர்கள். இதனை,

"துய்யநீர்க் கடலுள் தோய்ந்து தூய்மல ரமரர் தூவ
ஐயன்வெந் விடாத கொற்றத் தாவம்வந் தடைந்த தன்றே"

(கம்ப.கிட்கிந்த.398:3-4)

எனும் பாடல் குறிப்பிடுகின்றது.

**அம்பில் நஞ்சு**

போரில் பகைவரைக் கொல்ல அம்பு செலுத்தும் போது சில வேளை பகை வீரனுக்கு உயிர் போகாது, காயங்களுடன் தப்பித்துக் கொள்வான். இதன் காரணமாக பகைவன் தப்பித்து விடுதல் கூடாது என்பதன் பொருட்டு அம்பின் முனையில் நஞ்சைத் தேய்த்து அம்பினைச் செலுத்தியுள்ளனர். இவ்வாறு நஞ்சு தேய்க்கப்பட்ட அம்பானது உடலில் பட்டவுடன் உடல்

முழுவதும் நஞ்சு பரவி இறப்பு உறுதியாகிவிடும். ஆதலால் அம்பில் நஞ்சினைத் தேய்த்துள்ளனர். அம்பில் நஞ்சு தேய்க்கப்பட்டு இருந்தமையை,

**"ஞாலம்முடை யானது நாமறவோர்**

**ஆலம்முடை அம்பி னறுத்தனனால்" (கம்ப.யுத்த.2329:3-4)**

எனும் பாடலடிகள் விளக்குகிறது.

**சிறப்புக்குரிய அம்புகள்**

**தாமதக்கணை**

இருளினை விளைவிக்கின்ற தாமதக்கணை எனப் பெயர் கொண்ட அம்பினை இராவணன் இராமன் மீது ஏவியதை, (கம்ப.யுத்த.3756) எனும் பாடல் விளக்குகிறது. இதன் மூலம் தாமக்கணையானது போர்க்களத்தில் இருளினை விளைவிக்கின்ற தன்மையைக் கொண்டன என்பதை அறியமுடிகிறது.

தாமதக்கணைகள் சில நெருப்புமிழ் முகம் கொண்டவை. சில அம்புகள் குருதி தோய்ந்த முகத்தினைக் கொண்டிருந்தன. சில அம்புகள் தேவர் முகம் கொண்டிருந்தன. சில அம்புகள் பேய்முகம் கொண்டிருந்தன. கோடுகளுடன் பாம்புகள் போல் சில அம்புகள் சென்றதை, (கம்ப.யுத்த.3757) எனும் பாடல் விளக்குகிறது.

**தாமதக்கணையின் செயல்கள்**

தாமதக்கணை ஒரு திசை இருளும், அடுத்த திசை வெயிலும் பரவும். ஒரு திசையில் சுழல் காற்றும், மற்றொரு திசையில் மழையும் பெறச்செய்யும். ஒரு திசையில் சக்கரமும், மற்றொரு திசையில் இடியையும் ஒலிக்கச் செய்யும். ஒரு திசையில மயக்கமும் வேறொரு திசையில் கல்மாரியும் உண்டாக்கும் என்பதனை, (கம்ப.யுத்த.3759) என்ற பாடல் புலப்படத்துகிறது.

**தாமதக்கணையின் தன்மை**

போர்களத்தில் ஒரு திசையின் தொடக்கம் முதல் மற்றொரு திசையின் முடிவு வரையிலும் இரு திசைகளிலும் கணைகளின் பற்கள் பொருத்த வரும் தன்மையும், தன்னை விடுத்தவன் நினைத்தவற்றை எல்லாம் செய்யும்

தன்மையையும், சூரியன் சந்திரனைப் பருகும் தன்மையையும் கொண்டது தாமதக்கணை என்பதனை,

**“ஒருதிசை முதல்கடை யொருதிசை யளவும்**

**…**

**பருதியை மதியொடு பருகுவ பகழி” (கம்ப.யுத்த.3758)**

எனும் பாடலின் மூலம் அறியமுடிகிறது.

**சிவனது அம்பு**

இராவணன் தாமதக்கணையை இராமன் மேல் ஏவியதும், அதனை அழிக்க வல்ல சிவனது அம்பினை இராமன் ஏவினான். சிவனது அம்பானது தாமதக்கணையை இமைப்பொழுதில் அழித்தது. இதனைக் கம்பராமாயணம் யுத்த காண்டம் 3760, 3761 ஆகிய பாடல்கள் சுட்டுகின்றன.

**ஆசுர அம்பு**

வானவர் புகழுரை பெற்றதும், உயிர்களால் எமன் உயிரை நிறைத்ததும், இந்திரனைத் திடுக்கிட வைத்ததுமான ஆசுரம் என்னும் அம்பினை இராவணன் இராமன் மீது ஏவினான். இதனைக் கம்பராமாயணம் யுத்தகாண்டம் 3763, 3764 ஆகிய பாடல்களில் அறியலாம்.

**அக்கினி அம்பு**

இராவணன் எய்த ஆசுரம் எனும் அம்பினை அழிக்க இராமன் அக்கினி அம்பினைச் (ஆக்கினெயாஸ்திரம்) செலுத்தி அழித்தான் என்பதை,

**“அங்கி தன்னெடும் படைதொடுத் திராகவ னறுத்தான்”**

**(கம்ப.யுத்த.3765:4)**

எனும் பாடல் காட்டுகின்றது.

**மயன் கணை**

பல்வகைப் போரில் பயன்படுத்திய மயன் அம்பினை இராமன் மேல் இராவணன் ஏவினான். இதனைக் கம்பராமாயணம் யுத்தகாண்டம் 3770 எனும் பாடல் சுட்டுகிறது.

**காந்தர்வம் அம்பு**

இராவணன் ஏவிய மயன் கணையை அழிக்க இராமன் காந்தர்வம் எனும் அம்பினைச் செலுத்தி அழித்தான். இதனைக் கம்பராமாயணம் யுத்த காண்டம் 3771 ஆம் பாடலில் காணலாம்.

**அம்பு உவமையாக இடம்பெறல்**

சீறும் பாம்பானது அம்புக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதை,

**“பொற்சிலை வளைய எதிர்ந்தவர்**

**புற்றரவு அனைய சரம்பட”** (பெரிய.629:1)

எனும் பாடல் உணர்த்துகின்றது.

நாகனுக்கு நஞ்சு தேய்க்கப்பட்ட அம்பானது உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“நச்சழல் பகழி வேடர்க்கு**

**அதிபதி நாகன் என்பான்”** (பெரிய.656:4)

என்ற இவ்வடிகள் வழி அறியலாம்.

மின்னல் ஒளி அம்பிற்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“மின் செய்வார் பகழிப் புண்கள்**

**தீர்க்கும் மெய் மருந்து தேடிப்”** (பெரி.824:3)

இவ்வடிகள் உரைக்கின்றன.

இந்திரனுக்குக் கௌதம முனிவன் கொடுத்த சாபச் சொற்களுக்கு ஏவப்படுகிற அம்பானது உவமையாகக் கூறப்படுகிறது. இதனை,

**“தூயவ னவனை நின்கைச் சுடுசர மனைய சொல்லால்”**

(கம்ப.பால.554:2)

என்ற அடி கூறுகின்றது.

விரைந்து செல்லும் குதிரைக்கு அம்பு உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“வண்டி யம்பின வாளியின் வாவுறுஞ்**

**செண்டி யங்கு பரியுஞ் செறிந்தவே”** (கம்ப.ஆரணிய.817:3-4)

எனும் பாவடிகளும், மழையானது உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“அசைவுறு சிறுதுளி யப்பு மாரியின்”** (கம்ப.கிட்கிந்தா.476:2)

என்னும் அடியும்,

பெண்ணின் கண்ணுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"கணைக்க ருங்கணி னாளையொர் காளைதான்"** (கம்ப.பால.847:2)

எனும் பாவடியும் விளக்குகின்றன.

**அம்பறாத்தூணி**

"அம்பு வைக்கும் கருவி அம்பறாத்தூணியாகும்."[18] இதனைப் போருக்குச் செல்லும் போர் வீரன் தன்னுடைய முதுகுப்புறத்தில் கட்டிக்கொண்டு அதில் அம்பினை நிறைத்துப் போர்க்குச் செல்வான். இதனை,

**"பொலம் பூந் தூம்பை, பொறி கிளர் தூணி**
**புற்று அடங்கு அரவின் ஒடுங்கிய அம்பின்**
**ஒசிவுடை வில்லின், ஒசியா நெஞ்சின்"**[19]

என்னும் பதிற்றுப்பத்து பாடலடிகள் கூறுகின்றன.

**அம்பறாத்தூணி பெயர்கள்**

"ஆவமே தூணி யாவ நாழிகை யம்புக் கூடாம்"[20] என சூடாமணி நிகண்டும், "தூணி புட்டி லம்பறாத் தூணி"[21] என பிங்கல நிகண்டும் உரைக்கின்றன.

காப்பியங்களில் அம்பறாத்தூணி ஆவநாழிகை, தூணி, புட்டில் ஆகிய பெயர்களில் இடம்பெற்றுள்ளது. இதனை,

**"ஆவநா ழிகையே போலும்**
**அழகினில் மேன்மை எய்த"** (பெரிய.3010:2)

**"தூநிறச் சுடுசரந் தூணி தூங்கிட"** (கம்ப.கிட்கிந்தா.538:1)

**"தாங்கு பல்கணைப் புட்டிலுந் தகைபெறக் கட்டி"**
(கம்ப.யுத்த.1451:2)

எனும் பாடலடிகள் சுட்டுகின்றன.

பெரும்பாலும் போர் வீரர்கள் முதுகுப்புறத்தில் ஓர் அம்பறாத்தூணியினையைக் கட்டுவர். இராமன் போருக்குச் செல்லும் போது முதுப்புறத்தின் இருபுறங்களிலும் அம்பறாத்தூணியைக் கட்டிக்கொண்டு

சென்றுள்ளான். இருபுறத்திலும் அம்பறாத்தூணிக் கட்டுதலை வட்டில் என்று அழைத்துள்ளனர். இதனை,

**“கட்டியுல கிற்பொரு ளெனக்கரையில் வாளி**

**வட்டில்புறம் வைத்தவை பொருந்திட வரிந்தான்”**

**(கம்ப.யுத்த.3644:3-4)**

எனும் பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது.

அம்பறாத்தூணியில் பல அம்புகள் இடம் பெற்றிருப்பதை,

**“தாங்கு பல்கணைப் புட்டிலுந் தகைபெறக் கட்டி”**

**(கம்ப.யுத்த.1451:2)**

எனும் பாவடி விளக்குகிறது.

இந்திரசித்தை எதிர்த்துப் போர்க்குச் செல்லும் இலக்குமனனுக்கு இராமன் திருமால் கட்டியிருந்த அம்பறாத்தூணியினைக் கொடுத்துப் போருக்கு அனுப்பினான். இதனை,

**“ஆணியிவ் வுலகுக் கான ஆழியான் புறத்தி னார்த்த**

**தூணியுங் கொடுத்து மற்று முறுதிகள் பலவுஞ் சொல்லித்”**

**(கம்ப.யுத்த.2900:1-2)**

எனும் பாடலடிகள் விளக்குகிறன.

**வில்**

பண்டைத் தமிழகத்தை ஆண்ட மூவேந்தர்களில் சேரரின் அரசச் சின்னம் வில். வில்லானது வேட்டைத் தொழிலுக்கு மட்டுமின்றி போர்க் களத்திலும் பெரிதும் பயன்படுத்தப்பட்ட முதன்மைப் போர்க்கருவி. வில்லின் அமைப்பானது, “மையத்தில் பருத்தும், அங்கிருந்து இருபக்கங்களிலும் முறையே கரைந்தும் அமையும். கைப்பிடிக்குள் அடங்கும் கனமுடையதாக வில்லின் மையப்பகுதி அமைதல் வேண்டும். இந்நடுப்பகுதிக்கு நாபி என்று பெயர். இது வில்லின் நீளத்தில் மூன்றிலொரு பகுதி நீளமுடையதாகும். வில்லின் நுனிகள் அரை அங்குல கனமுடையதாக இருத்தல் வேண்டும். இம்முனைகளில் முன் மூன்றங்குலம் மடங்கி வளைந்து வட்டமாக அமைதல் வேண்டும். வில் மூன்று வளைவுகளுடனோ அல்லது பிறைச்சந்திரன் போன்ற

ஒரே வளைவுடையதாகவோ இருக்கலாம். வில்லின் நீளத்தில் எட்டில் ஒரு பங்கு குறைந்ததாக நாணின் நீளமிருத்தல் வேண்டும்"[22] என்று சிற்பச் செந்நூல் உரைக்கிறது.

இவ்வில்லின் பெயர்கள் குறித்து,

**"குனிதரு சாபஞ் சராசனங் கார்முகங் கோதண்டமே**

**தனுக்கொடு மரஞ்சா ரங்கம்பினா கந்தவர் வில்லென்பர்"**[23]

என பாரதி தீபம் நிகண்டும்,

**"தனுவொடு சிந்து வாரந் தடிசரா சனங்கோ தண்டம்**

**குனிசிலை துரோணஞ் சாபங் கொடுமரத் தோடு வேணு**

**முனிதவர் சராரோ பங்கார் முகம்ஈரே ழிவைவில் லின்பேர்"**[24]

என்று சூடாமணி நிகண்டும் குறிப்பிடுகின்றன.

காப்பியங்களில் வில்லானது வில், சிலை, தனு, சாபம், கார்முகம் ஆகிய பெயர்களில் இடம் பெற்றுள்ளன. இதனை,

**"அயலெழுதிய புலியும் வில்லும்" (சிலம்பு.ஆய்.2)**

**"சிலையமர் வென்றி கொடுப்போ ளல்லள்" (சிலம்பு.வேட்டுவ.17)**

**"கருவரையொரு தனுவொடுவிசை**

**கடுகியதென முனைநேர்" (பெரிய.731:1)**

**"சக்க ரத்தினர் சாபத்த ரெனநின்ற தலைவர்" (கம்ப.யுத்த.3222:2)**

**"வலக்கார் முகமென்கைய தாகவவ் வானு ளோரும்"**

**(கம்ப.அயோத்தி.425:1)**

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**வில் வித்தை கற்றல்**

வில் வித்தை பயில பருவம் அடைந்திருக்க வேண்டும்.

**"சிலமுறை ஆண்டு செல்லச்**

**சிலைபயில் பருவம் சேர்ந்தார்" (பெரிய.676:4)**

எனும் பாடலடியின் மூலம் சிறுவர்கள் வில்வித்தை பயிலும் காலம் சுட்டப்பட்டுள்ளது. பருவம் எய்தியவரே வில் பயில முடியும்.

**வில்லில் காப்பு**

புலி நரம்பில் செய்த நாணாகிய கயிற்றை வில்லில் காப்பாகக் கட்டினர். விட்றொழில் பயில இருக்கும் திண்ணன் முன்கையிலும் காப்பாகக் கட்டியுள்ளதை பெரியபுராணம் 682-வது பாடல் விளக்குகிறது.

**வில் முறித்தல் போட்டி**

சனகர், தன்னிடம் இருக்கும் சிவனது வில்லை எவர் முறிப்பாரோ அவருக்கே தனது மகள் சீதையை மணம் முடித்துத் தருவேன் என்று கூறினார். இத்தகவலை அறிந்து பல்வேறு மன்னர்கள் வில்லை முறிக்க முற்பட்டுத் தோல்வியுற்றனர். இராமன் சிவதனுசை நாணேற்றி முறித்துச் சனகன் துயர் நீக்கி சீதையைக் காதல் வயப்படச் செய்தான். இதனைக் கம்பராமாயணத்தின் கார்முகப் படலம் உரைக்கிறது. இதிலிருந்து மன்னர்கள் பண்டைக் காலத்தில் வீரனுக்குத் தான் தங்களின் மகளைத் திருமணம் செய்து கொடுத்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**வில் கைக்கோதை**

வில்லிலுள்ள நாணை ஏற்றி அம்பு எய்வதற்கு ஏற்ற சாதனமாகக் கைக்கோதை எனப் பெறும் விரலுறையைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

**"சேர்வில் பொலிகங் கணம் மீது**
**திகழ்ந்த முன்கைக்**
**கார்வில் செறிநாண் எறிகைச்**
**செறிகட்டி கட்டி" (பெரிய.709:3-4)**

எனும் பாடலடிகளின் மூலமாக அறியமுடிகிறது.

**வில் உவமையாகப் படன்படல்**

வில்லானது எமனுக்கும், புருவத்திற்கும், நெற்றிக்கும் உவமையாகக் கூறப்பட்டள்ளதை,

**"கூற்றுறழ் முன்பொடு கொடுவி லேந்தி" (சிலம்பு.காடுகாண்.211)**
**"பூண்ட விலலெனக் குனிந்தன கொழுங்கடைப் புருவம்"**
**(கம்ப.யுத்த.542:4)**

**“வாங்கு சிலை நன் னுதலாரை**

**வந்தது உனக்கிங்கு என்என்றார்” (பெரிய.3371:4)**

எனும் பாடலடிகள் சுட்டுகின்றன.

**எறிதற் கருவிகள்**

எதிர்நின்று போர் செய்யும் பகைவரின் மீது வேல், ஈட்டி, திரிசூலம் போன்ற எறிதற் கருவியினைக் கொண்டு போர் செய்துள்ளனர். கை கொண்டு எறிந்து போர் செய்யும் கருவிகள் அனைத்தும் எறிதற் கருவிகளாகும்.

**வேல்**

போர்க்களத்தில் தம் எதிரே நின்று போர் செய்யும் பகைவரைத் தாக்கி அழிக்கும் கருவிகளில் வேல் முதன்மைப் போாக் கருவியாகும். வேலினை மற்போரிலும் யானைப் போர் காண்டலிலும் பயன்படுத்தியுள்ளனர்.

வேல் என்பதற்கு, “நுனிக் கூர்மையுடைய ஆயுதவகை; திரிசூலம்; ஆயுதப்பொது; ஆயுதவகை; முருகன் வேல்; வெல்லுகை; பகை; மரவகை; வெள்வேல்; உடை; மூங்கில்”[25] என்று மெய்யப்பன் தமிழ் அகராதி விளக்கம் கூறுகிறது. வேலானது நீண்ட இரும்பின் முனைப்பகுதியில் இலை போன்ற கூரிய முனை கொண்ட இரும்பால் ஆன ஆயுதமாகும்.

போரில் வேலைக் கையில் ஏந்தி வீரர்கள் செல்வதை,

**“நளிகடல் இருங் குட்டத்து**

**வளிபுடைத்த கலம் போலக்**

**களிறு சென்று களன் அகற்றவும்**

**ஒளிறு இலைய எ.்.கு ஏந்தி”[26]**

என்னும் புறநானூற்றடிகள் விளக்குகினறன.

**வேலின் பெயர்கள்**

வேலின் பெயர்கள் குறித்து

**“ஞாங்கர்சத்தி யெ.்.கயிலு டம்பிடிவேல்”[27]**

என நாமதீப நிகண்டும்,

**“சக்தி, எ.்.கம், உடும்பிடி, குந்தம்,**

**விட்டேறு, அரணம், ஞாங்கர், அயிர், வேல்”[28]**

என்று திவாகர நிகண்டும் உரைக்கின்றன.

காப்பியங்களில் வேலுக்கு வேல், அயில், எ∴கு, குந்தம் என்ற பெயர்கள் கூறப்பட்டுள்ளன. இதனை,

**“அஞ்சுடர் நெடுவே லொன்றுநின் முகத்துச்”** (சிலம்பு.மனை.51)

**“கூர்முனை அயில்கொடு முட்டினர்**

**கூடிமுன் உருவிய தட்டுடன்”** (பெரிய.628:1)

**“இளிபுண ரின்சீ ரெ∴குளங் கிழிப்பப்”** (மணி.சிறை.26)

**“கோடிகல் தண்டு கூடங் குந்தம் வல்லோர்கள் கூடித்”**

(கம்ப.யுத்த.1270:1)

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**வேலின் வடிவம்**

வேலானது அரச இலை வடிவத்தினைக் கொண்டது. இதனை,

**“இலை குலா வயிலினா னனிகமே ழென வுலாய்”**

(கம்ப.பால.1118:1)

எனம் பாடலடி விளக்கும்.

**வீரத்தினை அளக்கும் அளவுகோல்**

போர் புரியும் போர் வீரனின் வீரத்தை அளக்கும் அளவுகோல் கருவியாக வேல் இருந்துள்ளமையைத் திருவள்ளுவர்,

**“கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்**

**மெய்வேல் பறியா நகும்”**[29]

**“விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின்**

**ஒட்டன்றோ வன்க ணவர்க்கு”**[30]

எனும் குறள்களில் குறிப்பிட்டுள்ளார்.

வேல் வீரர்கள் போர்க்களத்தில் வலக்கையில் வேலையும், இடக்கையில் கேடகத்தையும் கொண்டு போர் செய்துள்ளனர். வேல் கொண்டு பகைவரைக் குத்தவும், எறியவும் செய்துள்ளனர். கேடகம் கொண்டு பகை வீரர் வேல் கொண்டு குத்துதலையும், எறிதலையும் தடுத்துள்ளனர். வேல் வீரர்

வேலையும் கேடகத்தையும் கொண்டு போர் செய்தள்ளமையை, (கம்ப.பால.1276) எனும் பாடலடி மூலம் அறியமுடிகிறது.

**வேலின் சிறப்பு**

வேலானது இரும்பாலான ஆயுதம் என்பதால் அது துருப்பிடிக்காமல் இருக்க நெய்யினைப் பூசியுள்ளனர். இதனை,

**"நெய்யு றுஞ்சுடர் வேனெ டுங்கண் முகிழ்த்து நெஞ்சி**
**னினைப்பொடும்" (கம்ப.அயோத்.243:3)**

எனும் பாடலடி சுட்டகின்றது. வேலினைத் தோல் உறையில் வைத்து அதன் கூர்மைத் தன்மை கெடாதவாறு பாதுகாத்துள்ளனர். இதனை,

**"வள்ளல்வள் ளுறையயின் மன்னர் மன்னனே" (கம்ப.பால.174:4)**

எனும் பாடல் குறிப்பிடுகின்றது.

**வேல் உவமையாக இடம்பெறல்**

பெண்களின் கண்களுக்கு வேல் உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"விற்புரை நுதலின் வேல்கண்**
**விளங்குஇழை யவரைக் கண்டார்" (பெரிய.285:4)**

எனும் அடியும்,

சூலை நோய்க்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"ஆதியார் ஏதும் சூலை**
**அனல்செய் வேல் குடைவது என்ன" (பெரிய.3549:2)**

எனும் பாடலடிகளும்,

மின்னலுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"மின்னார் அயில்வேல் குலமறவர்**
**வென்றி நிலவும் சிலைவீரர்" (பெரிய.3798:3)**

எனும் பாடலடிகளும்,

எமனுக்கு உவமையாகக் கூறியுள்ளமையை,

**"கதிர்கொள் காலவேற் கரண்முத னிருதர் வெங் கதப்போர்"**
**(கம்ப.ஆரணிய.321:2)**

எனும் பாடலடிகளும் குறிப்பிடுகின்றன.

அனுமன் உடலில் உள்ள ரோமங்களுக்கு வேல் உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"நீளா ரயிலென மயிர் தைத் திடமணி**

**நெடுவா லவனுட னிமிர்வுற்று" (கம்ப.சுந்தர.969:3)**

எனும் பாடலடி கொண்டு தெளியலாம்.

**வேலின் பயன்பாடு**

போர்க்களத்தில் பகைவரையும், பகைவரது யானைகளையும் தாக்கி அழிக்க வேலைப் பயன்படுத்தியுள்ளனர். ஒருவருக்கு ஏற்படும் துன்பத்தைக் காட்டவும், அதனை மிகைப்படுத்திக் கூறவும் வேலினைப் பயன்படுத்தியுள்ளனர். பரதனுக்குப் பட்டங்கட்டவும், இராமனைக் காட்டிற்கு அனுப்பவும் என கைகேயி இரண்டு வரங்களைக் கேட்டவுடன், தசரதன் கொண்ட வருத்த மிகுதியைக் கம்பர் வெளிப்படுத்தும் போது கொடிய புண்ணில் வேலை எடுத்து நுழைத்தாற் போல தசரதன் மனம் துன்பம் அடைந்தது என்பதை கம்பராமாயணம் அயோத்திய காண்டம், 202-வது பாடலடிகள் மூலம் அறியமுடிகிறது.

**ஈட்டி**

ஈட்டி என்பது ஒரு "படைக்கருவி"[31] சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம். "இரும்பு போன்ற உலோகத்தாலான கூரிய நுனிப் பகுதியை உடையதும், மரத்தாலான நீண்ட கைப்பிடியை உடையதும், தொலைவிலிருந்து வேகமாய் எறிந்து விலங்குகளை வேட்டையாடவும், பகைவரைக் கொல்லவும் பயன்படும் ஒரு கருவி"[32] என்று குறிப்பிடுகின்றது.

இரும்பினாலான இக்கருவி எடுத்து எறியும் தன்மை கொண்டது. கூர்மையே இதன் வலிமையாகும் என்பதாக,

**"எடுத்தெறி எஃகம் பாய்தலின்**

**பிடிக்கணம் மறந்த வேழம்"[33]**

என்று முல்லைப்பாட்டு அடிகள் விளக்குகின்றன.

போரில் ஈட்டியினைக் கொண்டு போர் செய்துள்ளனர் என்பதனை,

**“ஏமரும் வரிவில் வேல்கோ லீட்டிவா ளெழுவிட்டேறு”**

**(கம்ப.சுந்தர.944:2)**

**“எழுக்களுந் தோமரத் தொகையு மீட்டியும்” (கம்ப.ஆரணிய.401:2)**

**“எழு மழுச் சக்கர மீட்டி தோமரம்” (கம்ப.யுத்த.2440:1)**

எனும் பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

**ஈட்டி வகைகள்**

ஈட்டியில் பேரீட்டி, சிறியஈட்டி என்ற இருவகை உண்டு.

**“எழுக்களுந் தோமரத் தொகையு மீட்டியும்” (கம்ப.ஆரணிய.401:2)**

எனும் அடிக்கு, வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியார் ஈட்டியைப் பேரீட்டி என்றும்,

**“குந்தமுங் குலிசமுங் கோலும் பாலமும்” (கம்ப.ஆரணிய.402:1)**

என்ற அடியில் வரும் குந்தம் என்பதற்குச் சிறிய ஈட்டி என்றும் பொருளுரைக்கிறார். அதிலிருந்து ஈட்டிக்கும் குந்தம் என்ற பெயர் உண்டு என்பது பெறப்படுகிறது.

**பிண்டி பாலம்**

பிண்டி பாலம் என்பது ஒரு வகை “எறழியாயுதம்”[34] என்று மெய்யப்பன் தமிழ் அகராதி சுட்டுகிறது. போர்க்களத்தில் பகைவரை எறிந்து தாக்கி அழிக்க இக்கருவியினைப் பயன்படுத்தியுள்ளனர். பிண்டி பாலத்தை ‘முறுக்கு தடி’ (கம்ப.ஆரண்.402:1) என்றும், ‘எறியீட்டி’ (கம்ப.ஆரண்.444:2-3) என்றும், வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியார் கூறுகிறார்.

பிண்டி பாலத்தினைப் பாலம் என்றும், வாலம் என்றும் கம்பர் கூறியுள்ளார். இதனை,

**“குத்தமுங் குலிசமுங் கோலும் பாலமும்” (கம்ப.ஆரணிய.402:1)**

**“மூல மற்றன அற்றன முரட்டண்டு பிண்டி**

**பால மற்றன அவற்றன பகழிவெம் பகுவாய்” (கம்ப.ஆரணிய.444:2-3)**

**“வாலமுத லாயுதம் வலித்தனர் வலத்தார்” (கம்ப.சுந்தர.164:4)**

எனும் பாடலடிகள் விளக்குகின்றன. இதீருந்து பிண்டி பாலத்தை, ‘பிண்டி’ என்று சுருக்கி அழைத்துள்ளனர். பண்டைக்காலம் தொட்டு இன்று வரை

தமிழர்களிடையே ஒருவரின் பெயரையோ அல்லது பொருளின் பெயரையோ சுருக்கிக் கூறும் வழக்கம் இருந்துள்ளமை புலனாகின்றது.

**சூலம்**

பண்டைத் தமிழர்கள் பயன்படுத்திய போர்க்கருவிகளில் ஒன்று சூலம். சூலம் "ஒரு தண்டத்திலிருந்து மூன்றாகக் கிளைத்த அமைப்பு உடையது சூலம். இது பிறைச்சந்திரன் போன்ற வட்டப் பகுதியின் நடுவில் கூரிய கத்தி செருகிய தோற்றமுடையதாம். இதனை மூவிலை, நெடுவேல், முத்தலைவேல் என்றும் கூறுவர். சூலத்திற்குத் தேர்ந்த உயரத்தை 16 கூறுகளாக்கி, 9 கூறு சூலதண்டம், அதன் மீதுள்ள கர்ணிகை உயரம் 1 கூறு, சூலத்தின் உயரம் 6 கூறு, சூலத்தின் அகலம் 6 அல்லது 9 கூறு இலக்கலாம்"[35] என்று சிற்பச் செந்நூல் கூறுகிறது.

**சூலத்தின் பெயர்கள்**

> **"மும்முனை நீளிலைச் சூலம் மூவிலைவேல்**
> **தெம்முனை தெறும்பெருந் திறலுறுஞ் சத்தி**
> **கழுமுள் முக்குடுமி காளம் குளிர் கழு**
> **விழுமிய முத்தலை வேற்படை ஆமே"[36]**

என்று சூலத்தின் பெயர்களை அபிதான மணிமாலை நிகண்டு உரைக்கிறது.

காப்பியங்களில் சூலமானது சூலம், திரிசூலம், மூவிலைவேல், முத்தலை, திரிசிகை, முத்தலைக்கழு, முச்சிகைக் கழு எனும் பெயர்களில் இடம்பெற்றுள்ளது. இதனை,

> **"வளையுடைக் கையிற் சூல மேந்தி" (சிலம்பு.வேட்டுவ.60)**
>
> **"வடிவேறு திரிசூலத்**
> **தாண்டகத்தால் வாழ்த்திப் போய்ப்" (பெரிய.1677:3)**
>
> **"படைகொண்ட மூலிலை வேலார்**
> **பழனத் திருப்பதி சார்ந்தார்" (பெரிய.281:4)**
>
> **"கூர்த்தநுதி முத்தலைய யிற்கொடிய கூற்றைப்" (கம்ப.பால.391:2)**
>
> **"தீமு கத்திரி சிகைப்படை திரித்தெ றியவே" (கம்ப.ஆரணிய.26:4)**

**“முழுக்களு முசுண்டியுந் தண்டு முத்தலைக்**

**கழுக்களு முலக்கையுங் கால பாசமும்” (கம்ப.ஆரணிய.401:3-4)**

**“மழுவும் வாளும் வயங்கொளி முச்சிகைக்**

**கழுவுங் காலவெந் தீயன்ன காடசியார்” (கம்ப.ஆரணிய.386:1-2)**

எனம் பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

சூலம் கொற்றவை கையில் ஏந்திய ஆயுதம் என்பதை,

**“வளையுடைக் கையிற் சூல மேந்தி” (சிலம்பு.வேட்டு.60)**

எனும் பாடலடி சுட்டுகிறது.

மயிலாடுதுறையில் விற்றிருக்கும் சிவபெருமான் சூலத்தினைக் கையில் ஏந்தியவாறு வீற்றிருந்ததை, (பெரிய.2343:1-2) எனும் பாடலின் மூலம் அறியமுடிகிறது. இச்சூலத்தினைப் போரில் பயன்படுத்தியுள்ளனர் என்பதை,

**“சூலம் வாளயில் சக்கரந் தோமரம்” (கம்ப.யுத்த.1019:1)**

**“எழுமழு தண்டு வேல்வா இலைநெடுஞ் சூல மென்றிம்”**

**(கம்ப.யுத்த.904:1)**

எனும் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

**தோமரம்**

தோமரம் என்பதற்குத் “தண்டாயுதம்; கைவேல்; முரசு”[37] என்று பேரகராதியும், “எறியாயுததம்; கைவேல்; ஒரு வாச்சியவகை; தண்டாயுதம்”[38] என்று மெய்யப்பன் தமிழ் அகராதியும் பொருள் தருகின்றன.

தோமரத்தின் பெயர்கள் குறித்து,

**“தோமரங்குந் தஞ்சவளஞ்”**[39]

என்று நாமதீப நிகண்டும்

**“தோமரமெறிவேல் கைவேல்”**[40]

என்று நாநார்த்த தீபிகை நிகண்டும் உரைக்கின்றன.

கம்பராமாயணம் சுட்டும் தோமரம் என்ற ஆயுதத்திற்கு வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியார் இரும்புலக்கை, ஏறியீட்டி, தோமரம், பேரீட்டி என்று உரையிட்டுள்ளார்.

தோமரத்தை,

**“சினத்தயில் கொலைவாள் சக்கரந் தண்டு சிலைமழுத் தோமர முலக்கை” (கம்ப.பால.105:1)**

**“சூலம் வாண்மழுத் தோமரஞ் சக்கரம்” (கம்ப.ஆரணிய.378:1)**

**“தொடிது ணிந்தன தோளொடு தோமரந் துணிந்த” (கம்ப.ஆரணிய.445:1)**

**“சூலம்வாள் முசலங் கூர்வேல் தோமரந் தண்டு பிண்டி” (கம்ப.சுந்தர.757:1)**

**“சூலம் வாளயில் சக்கரந் தோமரம்” (கம்ப.யுத்த.1019:1)**

**“தோமரஞ் சக்கரஞ் சூலங் கோல்மழு” (கம்ப.யுத்த.1323:1)**

**சுடர்த்தோமர மெறிந்தார்த்தலுங் கனலாமெனச் சுளித்தான்” (கம்ப.யுத்த.1846:1)**

ஆகிய இவ்விடங்களில் தோமரம் என்றே உரையிட்டுள்ளார்.

தோமரத்தை எறியீட்டி என்று,

**“எழுக்களுந் தோமரத் தொகையு மீட்டியும்” (கம்ப.ஆரணிய.401:2)**

எனும் அடியும் பேரீட்டி என்று,

**“சூலமழு வாளொடயில் தோமர முலக்கை” (கம்ப.சுந்தர.164:1)**

எனும் அடியும், இரும்புலக்கை என்று,

**“சூலம்வாள் சக்கரந் தோட்டி தோமரம்” (கம்ப.சுந்தர.387:1)**

எனும் இவ்வடியும் குறிப்பிடுகின்றன. இவற்றின் மூலம் தோமரம் என்பது ஓர் எறியாயுதம் என்று கருதலாம்.

அயோத்தி நகரத்துக் காவற்படையினர் தோமரம் எனும் ஆயுதத்தினை கைக்கொண்டு காவல் தொழில் புரிந்துள்ளனர் என்பதை,

**“சினத்தயில் கொலைவாள் சக்கரந் தண்டு சிலைமழுத் தோமரமுலக்கை” (கம்ப.பால.105:1)**

எனும் அடியும், போரில் பகைவருடன் போரிட்டுள்ளதை,

**“தோமரங் சக்கரஞ் சுலஞ் கோல் மழு” (கம்ப.யுத்த.1323:1)**

"சுடர்த்தோமர மெறமிந்தார்த்தலுங் கனலாமெனச் சுளித்தான்"

(கம்ப.யுத்த.1846:1)

எனும் அடியும் வெளிக்காட்டுகின்றன.

**சுழற்றுதற் கருவி**

போரில் சுழற்றிப் போர் செய்யப் பயன்படும் கருவிகள் அனைத்தும் சுழற்றுதற் கருவிகளாகும். வாள், கேடகம், தண்டாயுதம் போன்றவை. இவ்வகையினைச் சார்ந்தவையாகும்.

**வாள்**

சுழற்றுதற் போர்க்கருவிகளுள் முதன்மையானது வாள். பகைவருடன் நெருங்கி நின்று போர் செய்வதற்கு வாளினையே அதிக அளவில் கைக்கொண்டுள்ளனர். பகைவரின் வாளினால் மார்பில் விழுப்புண் அடைதலைப் பெருமையாகவும். வீரமாகவும் கருதியுள்ளனர். "ஆட்சிக்கு வேறு எந்த நியதி இருப்பினும், இல்லாவிடினும், தமது வாளின் வன்மையால் மன்னர்கள் வாழ்ந்தார்கள். இவ்விதிக்குத் தமிழரசர்கள் விலக்கல்லர். உறையிலிட்ட வாள் அவர்கள் உடலில் ஒரு பக்கததில் எப்போதும் இருந்தது. அதனை உறை நீக்கிக் கொலைக்குப் பயன்படுத்த அவர்கள் தயங்கமாட்டார்கள். அவர்கள் போர் முரசைப் போல வாளையும் வணங்கினர்; அதனையும் தூயநீரில் அபிஷேகம் செய்து அதற்குப் பூமாலைகளைச் சூட்டினர். போர் தொடங்கும் சமயத்தில் முரசையும், குடையையும் போல, வாளையும் ஒரு நல்லோரையில் போர்க்களத்திற்கு எடுத்துச் சென்றனர். குடை குடிமக்களுக்கு அளித்த பாதுகாப்பைக் குறித்தது போல, வாள் அரசின் பகைவர்கட்கு நாசத்தைக் குறித்தது; அது மன்னனின் கொற்றத்தை உருவகித்தது; உழவன் நிலத்தைக் கலப்பை கொண்டு உழுவது போல மன்னன் போர்க்களத்தை வாள் கொண்டு உழுவதாகக் கூறப்படும். அரசனுடைய சொந்த போர்க்கருவியும் அரச சின்னங்களில் ஒன்றாகும்"[41] என்று ந.சுப்பிரமண்யன் உரைக்கிறார். வாளில் "போர்வாள்; கொடுவாள்; குத்துவாள்; கட்டாரி; இருகூர்வாள்; உடைவாள்; கூன்வாள்; கத்தி; பட்டாக்கத்தி"[42] ஆகிய எட்டு வகை உள்ளன.

**வாட் பயிற்சி**

ஏனாதி நாதர் சோழ நாட்டின் அரசகுமாரர்களுக்கு வாட் பயிற்சி தரும் தொழிலினைச் செம்மையுறச் செய்து வந்ததை,

> **"மன்னர்க்கு வென்றி**
> **வடிவாள்படை பயிற்றும்**
> **தன்மைத்தொழில் விஞ்சை**
> **யில்தலைமை சார்ந்துள்ளார்" (பெரிய.610:3-4)**

என்ற இவ்வடிகள் விளக்கும். இதிலிருந்து வாள் வீச்சுக்கு உரிய பயிற்சி வேண்டும் என்பதையும், நாட்டை ஆளவிருக்கும் அரச குமாரர்களுக்கு வாட்பயிற்சி கொடுத்துச் சிறந்த வீரனாக்குவர் என்பதும் அறிய இயல்கிறது. இவ்வாறு வாட்பயிற்சி கொடுக்கும் ஆசிரியர்க்கு மாணாக்கர்கள் நன்றிக் கடனாகப் பொருளீட்டி உள்ளனர் என்பதனை,

> **"வாளின் படைபயிற்சி**
> **வந்த வளம்எல்லாம்" (பெரிய.611:1)**

இவ்வடியின் மூலம் அறியமுடிகிறது.

**வாட் பயிற்சி கற்றுதருதலுக்குப் போர்**

ஏனாதி நாதர் போல் அதிசூரன் என்னும் மற்றொரு வீரனும் அத்தொழிலைச் செய்து வந்தான். தன்னைவிடத் தொழில் மறையில் ஏனாதிநாதர் சிறப்புடன் விளங்கிய காரணத்தினால் காழ்ப்புற்றவனாய்த் தன்னிடம் பயிலும் மாணவர்கள் அனைவரையும் அழைத்து ஏனாதிநாதர் இல்லம் சென்று போருக்கு அழைத்தான். ஏனாதி நாதரும் போர்க்கோலம் பூண்டு போருக்குச் சென்றார். போரில் வெற்றி பெற்றவரே வாட் பயிற்சித் தொழில் செய்யும் உரிமையுடையோர் என்று ஏனாதிநாதரிடம் அதிசூரன் தெரிவித்ததை, பெரியபுராணம் 620-வது பாடல் விளக்குகிறது.

**தனி நபர் போர்**

போரில் தோல்வியுற்றுப் புறமுதுகிட்டு ஓடிய அதிசூரன் வஞ்சனையால் ஏனாதிநாதரைக் கொல்ல எண்ணி ஒருவனிடம் நாட்டிலுள்ள மக்களைப் போரில் ஈடுபடச் செய்யாமல் நாம் இருவரும் மட்டும் போரிட்டு வாள் பயிற்சி

கற்றுத் தரும் தொழிலின் உரிமையைக் கொள்வோம் என்று தூதுவன் வாயிலாகச் சொல்லி தூது அனுப்பினான் என்பதை, பெரியபுராணம் 638-வது பாடல் விளக்குகிறது. இதிலிருந்து பண்டைத் தமிழகத்தில் வாள் கொண்டு ஒருவரை ஒருவர் தனித்து நின்று போர் செய்யும் வழக்கம் இருந்துள்ளமை புலனாகிறது.

வாளானது கொற்றவை ஏந்திய படைக் கருவி. இதனை,

**"வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை"**

**(சிலம்பு.வேட்டுவ.64)**

எனும் அடி விளக்கும்.

வாளினைக் கொண்டு போரில் போர் புரியும் வீரன் தன்னுடைய வலக்கையில் வாளினையும், இடக்கையில் கேடகத்தையும் தாங்கிப் போரிட்டுள்ளான். இதனை,

**"கேடகத் தடக்கை யாலே கிளரொளி வாளும் பற்றிச்"**

**(கம்ப.பால.867:1)**

**"கேடகம் வெயில்வீசக் கிளரயி னீலவீனக்" (கம்ப.பால.1276:1)**

எனும் பாடலடிகளின் மூலம் அறியலாம்.

**வாள் உவமையாக இடம் பெறல்**

கைகேயின் கண்ணுக்கு அம்பு உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"அம்பன கண்ணவ ளுள்ள மன்ன தேயால்"**

**(கம்ப.அயோத்தி.203:4)**

அனுமானது பற்களுக்கு வாள் உவமையாகக் கூறப்பட்டள்ளதை,

**"வாளொத்தொளிர் வாலெயி றூழின் மருங்கிமைப்ப"**

**(கம்ப.சுந்தர.64:1)**

எனும் அடியும்,

இராவணனின் நகங்களுக்கு உவமையாக்கப்பட்டுள்ளதை,

**"கள்ளு யிர்க்குமென் குழலியர் முகிழ்விரற் கதிர்வாள்**
**வள்ளு கிர்பெருங் குறிகளும் புயுங்களின் வயங்க"**

**(கம்ப.சுந்தர.1085:3-4)**

என்ற இவ்வடிகளின் மூலம் அறியமுடிகிறது.

வாளை மீன் பாய்ந்து செல்வதற்க்கு வாள் வீச்சு உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“வலிந டத்திய வாளென வாளைகள் பாய”** (கம்ப.கிட்கிந்தா.22:1)

எனும் இவ்வடி விளக்குகிறது.

மின்னலுக்கு வாள் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**“மின்போன் மிளிர்வாளொடு தோள்விழவும்”** (கம்ப.யுத்த.2335:1)

எனும் அடி குறிப்பிடுகிறது.

வாளாயுதம் உறையுன்னுள்ளே மறைந்தது போல மின்னல்களெல்லாம் மறைந்தன என்று உவமையாகக் கூறப்பட்டள்ளது. இதனை,

**“வாளுறை உற்றென மறைந்த மின்னெலாம்”**

**(கம்ப.கிட்கிந்தா.558:4)**

எனும் அடியின் மூலம் அறியமுடிகிறது.

**உடைவாள்**

உடைவாளானது, “உடையில் செருகும் சிறுவாள்”[43] ஆகும். “இது நீண்ட கத்தியும், கைப்பிடியும் கொண்டுள்ள போர்க்கருவியாகும். இது கடகம் என்றும் சொல்லப்படும். இதன் நீளம் 32 விரலாகும். கத்தி, நடுவில் கனத்து இருபக்கங்களிலும் சரிந்து கூர்மையுடையதாக இருக்கும்”[44] என்று சிற்பச் செந்நூல் உரைக்கிறது.

உடைவாள் பெயர் குறித்து

**“சுரிகை பத்திரங் குறும்பிடி யுடைவாள்”**[45]

என்று பிங்கல நிகண்டு உரைக்கிறது.

காப்பியங்களில் உடை வாளானது உடைவாள், சுரிகை, பத்திரம் ஆகிய பெயர்களில் இடம் பெற்றுள்ளது. இதனை,

**“வேலோடு வில்லும் வாளும்**

**சுரிகையும் எடுத்து மிக்க”** (பெரிய.417:1)

**“பத்திரம் வாங்கித் தான்முன்**

**நினைத்த அப் பரிசே செய்ய”** (பெரிய.481:31)

**“செங்கையால் உடைவாள் வாங்கிக்**

**கொடுத்தனர் தீர்வு நேர்வார்” (பெரிய.592:4)**

எனும் பாடலடிகளின் மூலம் அறியலாம்.

போர் வீரனின் இடுப்பில் உள்ள இடைக்கச்சு என்ற கயிற்றில் உடைவாளானது சொருகப்பட்டிருக்கும் என்பதை,

**“கச்சும் வாளுந்தங் காறொடர்ந் தீர்வன காணார்”**

**(கம்ப.ஆரணிய.506:1)**

இவ்வடி விளங்குகின்றது.

**அடைக்கலப் பொருளாக உடைவாள்**

அங்கதன், இராமன் காலில் வீழ்ந்து வணங்கியளவில், இராமனும் அவனைத் தன் அடைக்கலமாக ஏற்றுக்கொண்டமைக்கு அறிகுறியாகத் தன்னுடைய உடைவாளினைக் கொடுத்து இதனை நீ ஏற்றுக்கொள்வாயாக எனப் பணித்தான். இதனை,

**“பொன்னுடை வாளை நீட்டி நீயிது பொறுத்தி யென்றான்”**

**(கம்ப.கிட்கிந்தா397:2)**

எனும் பாவடிகளில் விளங்குகின்றது. நாகன் திண்ணனிடம் வயது மூப்பின் காரணமாக நான் தளர்ந்துவிட்டேன். இனி நீ மலை வேடர்களுக்குக் காவல் பூண்டு எதிரிகளை வீழ்த்தி, விலங்குகளை வேட்டையாடி நம் மரபுரிமையைக் காப்பாயாக என்று கூறித் தம் உடைவாளைக் கொடுத்ததை,

**“உன்னுடைய மரபுரிமை தாங்கு வாய் என்று**

**உடைதோலும் சுரிகையும் கைக்கொடுத்தான் அன்றே”**

**(பெரிய.702:4)**

எனம் பாடல் விளக்குகிறது.

**கேடகம்**

போரில் பகைவர்களை எதிர்த்துப் போர் செய்யும் வாட்படை வீரர்களும், வேற்படை வீரர்களும் பயன்படுத்திய கருவி கேடகம். கேடகம் ஓர் தற்காப்புக் கருவியாகும். போரில் எதிரிகள் எறியும் படைக்கலங்கள் தம்மீது படாமல் தம்மைக் காத்துக் கொள்ளும் கருவி கேடகம். இது “உலேகத்தகட்டால்

ஆனதும் வட்டம் அல்லது நீண்ட சதுரவடிவம் கொண்டதும், வெளிமுகத்தில் குவிந்து உள்முகத்தில் குழிந்து, குழிந்த உட்பகுதியில் கைப்பிடியும் கொண்டமைந்த கருவி ஆகும். இது தோலாலும் செய்யப்படும். இதற்கு இன்னல்-இடையூறுகளைத் தடுத்து நிறுத்தும் தன்மையுடையது”[46] எனச் சிறப்புச் செந்நூல் உரைக்கிறது.

வீரர்களின் தற்காப்புக் கருவியான கேடயம் உலோகத்தாலோ, மரத்தாலோ செய்யப்பட்டு உட்புறத்தில் மூங்கில் கம்புகள் கைப்பிடிக்காகக் குறுக்காகவும், நெடுக்காகவும் பின்னப்பட்டிருந்ததை,

**“கழிப்பிணிப் பலகையர் கதுவாய் வாளர்”**[47]

என்னும் புறநானூற்று பாடலடி விளக்குகிறது.

கேடகத்தின் பெயர்கள் குறித்து

**“கேடயம் வட்டந் தட்டி கடகம்**

**வேதிகை கிடுகு பலகை கேடகம்”**[48]

என்று பிங்கலம் நிகண்டும்,

**“சேடகம், வட்டம், தோலே, வேதிகை,**

**கேடகம், பலகை, ஆம்எனக் கிளப்பர்”**[49]

என்று திவாகரம் நிகண்டும் உரைக்கிறது.

காப்பியங்களில் கேடகமானது கேடகம், பலகை, வட்டம், கிடுகு, தோல் என்ற பெயர்களில் இடம் பெற்றுள்ளன. இதனை,

**“கேடகங்கள் துணிந்து கிடந்தன” (கம்ப.யுத்த.3380:2)**

**“வாளொடு பலகை ஏந்தி**

**வந்தெதிர் வணங்கி மிக்க” (பெரிய.415:1)**

**“வாளொளி வட்டம் முனைந்திட**

**வந்துஇரு கைகளின் முந்தினர்” (பெரிய.623:2)**

**“செயிரறு கிடுகும் பற்றி வானவ ருள்ளந் தீய” (கம்ப.யுத்த.274:2)**

**“கல்லுமிழ் கவணினர் கழிப்பிணிக் கறைத்தோற்”**

**(சிலம்பு.இந்திர.81)**

எனும் பாடலடிகளின் பதிவு செய்துள்ளன.

**கேடகத்தில் இடம்பெறும் பொருட்கள்**

கேடகத்தில் பொன் பதிக்கப்பெற்றுள்ளதை,

**“பொற்பலகை யும்தாமே**

**கொண்டு புறம் போந்து” (பெரிய.640:2)**

என்ற அடியும் பதிக்கப் பெற்றுள்ளதை,

**“வண்ணச் சுடர்வாள்**

**மணிப்பலகை கைக்கொண்டு” (பெரிய.642:3)**

என்ற இவ்வடிகள் விளக்குகின்றன.

**கேடகம் உவமையாகப் பயன்படல்**

கேடயங்களுக்கு மேகக் கூட்டங்கள் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**“மேக ஒழுங்குகள் முன்கொடு**

**மின்நிரை தம்மிடையே மொடு” (பெரிய.622:1)**

எனும் இவ்வடியின் மூலம் அறியமுடிகிறது.

**தண்டாயுதம்**

தண்டாயுதத்தினைக் கதை என்று அழைத்துள்ளனர். போர்க்களத்தில் நெருங்கி நின்று போர் செய்யும் கருவி வகைகளில் தண்டாயுதமும் ஒன்று. தண்டாயுதத்தின் அமைப்பானது “ஒரு தண்டமும் அதன் மீது உருண்டையான அல்லது நீண்ட உருண்டையான பகுதியும் சேர்ந்த ஆயுதமாகும். இது கைவிடாப் படையைச் சேர்ந்தது. கதையின் மொத்த நீளமானது 16 விரலில் தண்டம் 10 விரல் நிளமும், உருண்டையான பகுதியின் நீளம் 4 விரலும், அதன் மீதுள்ள காம்பு 2 விரலும் இருத்தல் வேண்டும். தண்டத்தின் கனம் 1 விரல்; உருண்டை பகுதியின் கனம் 4 விரல் காம்பின் அடிப்பகுதி 2 விரல்”[50] அளவு கொண்டது என்று சிற்பச் செந்நூல் உரைக்கிறது.

பதிற்றுப்பத்தில் முரசறைந்து போர்ச் செய்தியை அறிவித்தவன், தனது வலது கையில் தண்டாயுதத்தைக் கொண்டிருந்ததை,

**“படுகண் முரசம் நடுவண் சிலைப்ப**

**தோமர வலத்தர் நாமம் செய்ம்மார்**

**ஏவல் வியங்கொண்டு"**[51]

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன. தண்டாயுதமானது காப்பியங்களில் தண்டு, தண்டாயுதம், கதை என்ற பெயர்களில் இடம்பெற்றுள்ளது.

**"வில்லொடு வேல்வாள் தண்டு**
**பிண்டிபா லங்கள் மிக்க" (பெரிய.580:1)**

**"வாங்க வாங்குதண் டாயத்தி னால்வலித்து" (பெரிய.4047:2)**

**"வேல்வாள் சூலம் வெங்கதை பாசம் விளிசங்கம்"**
**(கம்ப.சுந்தர.173:1)**

எனும் பாடலடிகள் விளக்குகின்றன.

**தண்டாயுதப் போர்ப் பயிற்சி**

தண்டாயுதத்தால் பகைவரைப் போரில் வதைத் தொழில் செய்யும் கல்வியை இதற்கு முன்பு முழுமையாகக் கல்லாதவனாகிய அனுமன் அகம்பனோடு போரில் சண்டையிட்ட அன்று முழுமையாகக் கற்றதனை,

**"கற்றில னின்று கற்றான் கதையினால் வதையின் கல்வி"**
**(கம்ப.யுத்த.2519:4)**

எனும் பாடலின் மூலம் அறியலாம். பண்டைக் காலத்தில் தண்டாயும் கொண்டு போர் செய்யும் கல்வி முறை இருந்துள்ளமை இதனால் புலனாகிறது. தண்டாயுதம் இரத்தினங்கள் பதிக்கப்பட்டுப் பொன்னால் ஆனது என்பதை,

**"பாய்ந்தா னவன்பன் மணித்தண்டு பறித்தெ றிந்தான்"**
**(கம்ப.ஆரணிய.935:1)**

எனும் பாவடி மூலம் அறியமுடிகிறது.

ஆண்களின் தோளுக்குத் தண்டாயுதம் உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"தண்டு போற்புயத் தான்றடு மாறினான்" (கம்ப.பால.1011:2)**

எனும் இவ்வடி விளக்கும்.

**கவண் உமிழ் கல்**

இங்குக் கவண் என்பது "கயிற்றில் கட்டப்பட்ட பட்டையான தோலில் கல் வைத்து சுழற்றி எறியும் சிறு கருவி"[52] ஆகும். இக்கவணில் உருண்டை

வடிவக் கல்லை வைத்துச் சுழற்றி, போரில் பகைவர்களைத் தாக்கி அழித்துள்ளனர். போரில் கவண் உமிழ் கல்லினைப் பயன்படுத்திப் போர் செய்துள்ளமையை,

**"கப்ப ணங்களும் வளையமுங் கவண்விடு கல்லும்"**

**(கம்ப.யுத்த.2500:3)**

எனும் பாடலடி குறிப்பிடுகிறது.

மேகத்திலே தோன்றுகின்ற இடி போல் அச்சத்தைக் கொடுக்க கூடியது கவண்கல் என்பதை,

**"கனத்திடை யுருமின் வொருவருங் கவண்க லென்றிவை கணிப்பில**

**கொதுகின்" (கம்ப.பால.105:2)**

எனும் பாவடி விளக்குகிறது. இங்குக் கவண் கல்லுக்கு, இடி உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**பாசம்**

பண்டைத் தமிழரின் வாழ்வியலில் எளிமையாகக் கிடைக்க கூடிய பொருளான கயிற்றினைக் கொண்டு உருவாக்கப்பட்ட போர்க்கருவி பாசமாகும். இப்பாசமானது "மூன்று வடமாகவுள்ள கயிறை வளைத்துப் பிடித்த அமைப்பாகும். இதனை முறுக்கியும், முடிச்சினும் அமைப்பதுண்டு. பிரிந்து விடாத வண்ணம் சிறு கயிறால் கட்டியும் அமைக்கப்படும். பாசத்தின் உச்சியில் மலர் ஒன்றைச் செருகி அழ கூட்டுதல் வேண்டும். பாசத்தின் உயரம் 16 விரல்; அதன் மேற்பகுதி அகலம் 6 விரல்; வளைந்தும் வட்டமாகவும் அமையும். கடக முத்திரையில் பிடிக்கப்படும் கருவி"[53] ஆகும் என்பர். இக்கருவியைப் 'பாசம்' என்றும், 'கால பாசம்' என்றும் இரு பெயர்களில் வழங்கியுள்ளனர். இதனை,

**"கழுக்களு முலக்கையுங் கால பாசமும்" (கம்ப.ஆரணிய.401:1)**

**"பந்தமுங் கப்பணப் படையும் பாசமும்" (கம்ப.ஆரணிய.402:4)**

இவ்வடிகள் விளக்கும்.

இப்பாசமானது நுனியிற் கூர்மையையுடையதும் வீசும்போது ஒலியைச் செய்வதும், தருப்பைப் போல அறுக்கவல்லதுமானது. இதனை,

**“அங்குச நெடுங்கவ ணயிற்சிலை வழங்கும்**

**வெங் குசைய பாசமுதல் வெய்யபயில் கையார்”**

**(கம்ப.சுந்தர.165:1-2)**

இவ்வடிகள் மூலம் அறியமுடிகின்றது.

இலங்காதேவியின் இயல்பைக் கூறுகையில் அவளின் எட்டுப்படை தாங்கிய எட்டுக் கைகளில் பாசமும் ஒன்றாக இருந்துள்ளமையை,

**“வேல்வாள் சூலம் வெண்கதை பாசம் விளிசங்கம்”**

**(கம்ப.சுந்தர.173:1)**

எனும் அடியின் மூலம் அறியமுடிகிறது. அரக்கர்களின் சேனைப் படைகளில் பாசம் இருந்துள்ளமையை,

**“மாமரம் வீசு பாசம் வளை அயில் வயிரத் தண்டு”**

**(கம்ப.சுந்தர.944:3)**

இவ்வடி மூலம் அறிய இயலும். இதன் மூலம் இதனைப் போரில் பயன்படுத்தி உள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

**கப்பணம்**

கப்பணம் என்பதற்கு, “இரும்பால் யானைநெருஞ்சி முள் போலப் பண்ணிய கருவி; ஒரு வகைக் கழுத்தணி; கைவேல்; காப்புக்கயிறு; கொச்சைக் கயிறு”[54] என்று மெய்யப்பன் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது.

இரும்பு முளம் கொண்டு வடிவமைக்கப்பட்ட கருவி கப்பணம். இக்கப்பணம் எனும் கருவியினைக் கைகொண்டு கரனின் சேனைகள் இராமனுடன் போரிடச் சென்றன. இதனை,

**“பந்தமுங் கப்பணப் படையும் பாசமும்” (கம்ப.ஆரணிய.402:4)**

இவ்வடிகள் குறிப்பிடுகின்றன. இக்கருவியானது கூர்மையாக அமைந்திருக்கும் என்பதை,

**“கழுவயிற் கப்பணங் கவண்கல் கன்னகம்” (கம்ப.யுத்த.2440:3)**

எனும் அடியில் வயிரம், என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. கூர்மை . இதன் மூலம் கப்பணம் கூரிய தன்மை கொண்ட அமைப்பில் அமைந்திருக்கும் என்பதை அறியமுடிகிறது.

**பரசு**

பரசு என்பது “கோடரி என்றும் மழு என்றும் சொல்லப்படும். இதன் நீளம் 12 விரலாகும். மரத்தாலான காம்பின் மீது உருண்டையாகவோ, முட்டை வடிவினதாகவோ உள்ள தலைப்பகுதியின் மையத்தில் கூரிய கோடரி செருகி அமைக்கப்படும். இதுவே மழுவின் அமைப்பாகும். தலையிலும், காம்பிலும் அணிகளைச் செய்து அழகுற அமைத்தல் வேண்டும்”[55] என்று சிற்பச் செந்நூல் கூறுகிறது.

**மழுவின் பெயர்கள்**

**“பரசு, கணிச்சி, நவியம்,பாலம் என**

**உரைசெய்வர் மழுக்கு உணர்ந்திசி னோரே”**[56]

என்று திவாகரம் நிகண்டு உரைக்கிறது.

காப்பியங்களில் மழுவானது மழு, பரசு, கணிச்சி என்ற பெயர்களில் இடம் பெற்றுள்ளது. இதனை,

**“எழுமழு தண்டு வேல்வா இலைநெடுஞ் சூல மென்றிம்”**

**(கம்ப.யுத்த.904:1)**

**“பரசுபெறு மாதவ முனிவன்**

**பரசு ராமன் பெறுநாடு”** (பெரிய.491:2)

**“கயிலையி னொருதனதிக் கணிச்சி வானவன்”**

**(கம்ப.சுந்தர.1061:1)**

எனும் பாடலடி விளக்குகிறது.

மழு சிவன் கையில் இருக்கும் ஓர் ஆயுதம். இம்மழுவைச் சிவன் கைகொண்டுள்ளார் என்பதை,

**“கையில்மான்மழுவர் கங்கைசூழ்சடையில்**

**கதிர்இளம் பறைநறுங் கண்ணி”** (பெரிய.22:1)

எனும் பாடல் விளக்குகிறது.

அயோத்தி நகர காவல் படையினர் மழுவினைக் கையில் ஏந்திக் காவல் புரிந்ததை,

**"சினத்தயில கொலைவாள் சக்கரந் தண்டு சிலைமழுத் தோமர**

**முலக்கை" (கம்ப.பால.105:1)**

இவ்வடியின் மூலம் அறியமுடிகின்றது.

எறிபத்தர் மழுவினைக் கொண்டு யானையின் துதிக்கையினை வெட்டி வீழ்த்தியதை,

**"தோய்தனித் தடக்கை வீழ**

**மழுவினால் துணித்தார் தொண்டர்" (பெரிய.574:4)**

எனும் பாவடியும், போர்க்களத்தில் மழுவினைப் பயன்படுத்திப் போர் செய்ததை,

**"மழுக்களு மயில்களும் வயிர வாள்களும்" (கம்ப.ஆரணி.401:1)**

**"எழுமழு தண்டு வேல்வா இலைநெடுஞ் சூல மென்றிம்"**

**(கம்ப.யுத்த.904:1)**

**"மழுவுஞ் சூலமும் வலயமும் நாஞ்சிலும் வாளும்"**

**(கம்ப.யுத்த.2499:1)**

எனும் பாடலடிகளும் உணர்த்துகின்றன.

**சம்மட்டி**

சம்மட்டியானது "கனமான இரும்புத் துண்டில் நீளமான மரக் கைப்பிடி செருகப்பட்ட பெரிய சுத்தியல்"[57] என்று தற்காலத் தமிழ் அகராதி உரைக்கிறது.

சம்மட்டியின் பெயரைக் குறித்து,

"மத்திகைகோல் சம்மட்டி"[58] என்று நாமதீப நிகண்டும்,

"கொட்டுஞ்சம் மட்டி கூட மென்ப"[59] என்று பிங்கல நிகண்டும் உரைக்கின்றன.

காப்பியங்களில் சம்மட்டி மத்திகை, கூடம் என்ற பெயரில் இடம் பெற்றுள்ளது. இதனை,

**"மோது மத்திகை மென்முலை மேற்பட" (கம்ப.பால.640:2)**

**"கோடிகல் தண்டு கூடங் குந்தம்வல் லோர்கள் கூடித்"**

**(கம்ப.யுத்த.1270:1)**

எனும் பாவடிகள் உணர்த்துகின்றன.

**“உக்க முற்கர முக்கண முசுண்டிகள் உடைவுற்று”**

**(கம்ப.சுந்தர.787:2)**

இதிலுள்ள முற்கரம் என்பதற்கு வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியார் சம்மட்டி என்று தன் உரையில் குறிப்பிடுகிறார்.

போர்க்களத்தில் சம்மட்டியினைப் பயன்படுத்திப் போர் செய்துள்ளனர் என்பதை,

**“கோடிகல் தண்டு கூடங் குந்தம்வல் லோர்கள் கூடித்”**

**(கம்ப.யுத்த.1270:1)**

எனும் பாவடி இயம்புகிறது.

**சம்மட்டி-செண்டு**

சம்மட்டி என்பது “குதிரை சவுக்கு ஆகும். ஐயனாரின் விசேட ஆயுதமாகும். இதற்குச் செண்டு என்னும் பெயருமுண்டு. சவுக்கு, குயிற்றாலானது. பிரம்பில் இணைக்கப்பட்டிருக்கும். சவுக்கு, அப்பிரம்பின் நுனியில் மடித்துக் கட்டப்பட்டிருக்கும்”[60] என்று சிற்பச் செந்நூல் கூறுகிறது.

ஐயனார், யானையின் மீது அமர்ந்து கையில் செண்டு எனும் ஆயுதத்தை ஏந்திக் காஞ்சி மாநகரில் உலா வந்ததை,

**“வித்த கக்கரி மேல் கொளுங் காரி**

**மேவு செண்டுஅணை வெளியும் ஒன்று உளதால்”**

**(பெரிய.1164:4)**

எனம் பாடலடி விளக்குகிறது. இதிலிருந்து செண்டானது ஐயனாரின் ஆயுதமாக விளங்கியதை அறியமுடிகிறது.

**வச்சிராயுதம்**

பண்டைத் தமிழர்கள் எண்ணில் அடங்கா போர்க்கருவிகளைப் பயன்படுத்திப் போர் செய்துள்ளனர். அவற்றில் சில படைக்கருவிகளைத் தெய்வங்களுக்கு உரியவையாகக் கூறியுள்ளனர். அவ்வகையில் தேவர்களுக்குத் தலைவனான தேவேந்திரனின் படைக்களமாகக் கூறப்படுவது வச்சிராயுதம். “இருபக்கங்களிலும் சூலமும் இடையில் மூன்று சுற்றுகளும்

கொண்டு விளங்கும் ஆயுதம் வச்சிரம் ஆகும். இருதலைச் சூலம் என்றும் இது பெயர் பெறும். கையில் பிடிக்கக் கூடிய அளவினதாக இதனை அமைத்தல் வழக்கு. இப்படை 36, 26, 18 அல்லது 10 விரல் நீளமுடையதாகவும் 8, 7, அல்லது 5 விரல் அகலமுடையதாகவும் இருக்கலாம். தக்க அளவை இடத்திற்குப் பொருத்தமாகத் தேர்ந்து செய்தல் வேண்டும்."[61] என்று சிற்பச் செந்நூல் உரைக்கிறது.

வச்சிராயுதம் பெயர் குறித்து

**"சம்பம், வயிரப்படை, குலிசம், வச்சிரம்"**[62]

என்ற திவாகரம் நிகண்டு உரைக்கிறது.

காப்பியங்களில் வச்சிராயுதம் வச்சிரம், குலிசம், வயிரம் ஆகிய பெயர்களில் இடம்பெற்றுள்ளது. இதனை,

**"வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசும்"**

**(சிலம்பு.இந்திரவிழா.141)**

**"நேமியுங் குலிச வேலும் நெற்றியி னெருப்புக் கண்ணான்"**

**(கம்ப.யுத்த.3125:1)**

**"வலங்கையின் வயிர வேதி வைத்தவன் வைகு நாடும்"**

**(கம்ப.சுந்தர.37:1)**

**"கொற்ற வாளெழுத் தண்டுவேல் கோண்மழுக் குலிசம்"**

**(கம்ப.யுத்த.1469:1)**

எனும் பாடலடிகள் மூலம் அறியலாம்.

வச்சிராயுதம் இந்திரனுக்குரியது. இந்திரனுடைய கோயிலில் இந்திரனின் படைக்கருவியான வாச்சிராயுதத்தை வைத்து வழிபாடு செய்துள்ளனர். இதனை,

**"வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசும்"**

**(சிலம்பு.இந்திரவிழா.141)**

எனும் பாடலடி குறிப்பிடுகிறது.

இந்திரன் வச்சிராயுதத்தை வலக்கையில் ஏந்தியுள்ளான் என்பதை,

**“வலங்கையின் வயிர வேதி வைத்தவன் வைகுநாடும்”**

**(கம்ப.சுந்தர.37:1)**

எனும் பாவடி விளக்கும். மேலும் இந்திரன் கையில் கொண்டுள்ள வச்சிரமானது கூர்மையான நுனியைக் கொண்டதென்பதை,

**“கொட்புறு புரவித் தெய்வக் கூர்நுதிக் குலிசத் தாற்குங்”**

**(கம்ப.சுந்தர.25:1)**

எனும் இவ்வடி குறிப்பிடுகின்றது.

உலகத்திலுள்ள உயிர்கள் அனைத்தும் தனக்கு உணவென்று கருதிய குமதியென்று பெயர் கொண்டவளை இந்திரன் தன் வச்சிராயுதம் கொண்டு அழித்ததை,

**“ஊனொ ழித்தனன் வச்சிரத் தும்பர்கோன்” (கம்ப.பால.401:4)**

எனும் பாடல் விளக்குகிறது.

வச்சிராயுதம் கொண்டு போரில் பகைவருடன் போர் செய்துள்ளனர் என்பதற்கு,

**“குந்தமுங் குலிசமுங் கோலும் பாலமும்” (கம்ப.ஆரணிய.402:1)**

என்ற அடியும் அரண் செய்கின்றது.

இராவணனுக்கும் சுக்கிரீவனுக்கும் நடந்த கடும் போரில் சுக்ரீவன் மலைச் சிகரமொன்றை இந்திரனின் வச்சிராயுதம் போல இராவணன் மீது தூக்கி எறிந்த செய்தியை,

**“ஏந்திய சிகர மொன்றங் கிந்திரன் குலிச மென்னக்**
**காந்திய வுருமின் விட்டான் கவிக்குலத் தரசனக்கல்”**

**(கம்ப.யுத்த.1090:1-2)**

எனும் பாடலடி சுட்டுகின்றது. இதன் மூலம் மலைக்கு இந்திரனின் வச்சிராயுதம் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**ஆழி**

ஆழி என்பது “சக்கரப்படை; ஆணைச் சக்கரம்; கட்டளை; வட்டம்; மோதிரம்; சக்கரம்; குயவன் திகிரி; யானைக் கைந்நுனி; கடல்; கடற்கரை;

குன்றி; கணவனைப் பிரிந்த மகளீர் இழைக்கும் கூடற்சுழி"[63] என்று மெய்யப்பன் தமிழ் அகராதி பொருள் தருகிறது.

பண்டைத் தமிழர்கள் சக்கரத்தினைக் கொண்டு போர் செய்துள்ளனர். சக்கரம் சுழழும் தன்மை கொண்டது. "மானாங்குலம் அல்லது மாத்ராங் குலத்தினால் அளவிட்டுச் செய்வது ஒரு முறை. துருவ பேரம் அல்லது கௌதுகபேரம் ஆகிய இவ்விரண்டில் ஏதேனுமொன்றின் தேகாங்குலத்தினாலும் செய்யலாம். எங்ஙனமாயினும் 16, 12, 8 அங்குல விட்டமுடையதாகவும், வட்ட வடிவமாகவும் இருத்தல் வேண்டும். மேற் பட்டத்தின் அகலம் மூன்று, இரண்டு அல்லது ஒரு அங்குலம் இருக்கலாம். சக்கரத்தின் நடுவில் கனம் ஓரங்குலமாகும். வட்ட மையத்தில் ஆரங்கள் வந்து கூடுமிடமாகிய ஆரகூடத்தின் விட்டம் 3 அல்லது 2 அங்குலமாம். இது பத்ம வடிவினதாம். ஆரங்கள் மூங்கில் இலை போல நீண்டிருத்தல் விசேடமாகும். நீளமும் அகலமும் சமமாக இலை வடிவமாகவும் ஆரங்களைச் செய்யலாம். 24 ஆரங்கள் உத்தமம்; 20 ஆரங்கள் மத்திமம், 16 ஆரங்கள் அதமம் ஆகும். மேலும் சக்கரத்தின் தலை, அடி, பக்கங்கள் ஆகிய நான்கு இடங்களில் 3 அங்குல நீளமுடைய அக்னிச் சுவாலைகளை அமைத்தல் வேண்டும்"[64] என சிற்பச் செந்நூல் உரைக்கிறது.

சக்கரத்தின் பெயர் குறித்து

> **"திகிரி, நேமி, ஆழி, வளை, எ∴கம்**
> **சுதரிசனம், பருதி, சக்கரத்து உறு பெயர்"[65]**

என திவாகரம் நிகண்டு உரைக்கிறது.

காப்பியங்களில் சக்கரம், சக்கரம், திகிரி, ஆழி, நேமி, வளை எனும் பெயரில் இடம் பெற்றுள்ளது. இதனை,

> **"சக்க ரத்திற் றகைவரி தாயதொர்" (கம்ப.ஆரணிய.805:2)**
> **"காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு" (சிலம்பு.மங்கல.5)**
> **"பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்"**
> **(சிலம்பு.காடுகாண்.47)**
> **"நிலந்தரு திருவி னிழல்வாய் நேமி" (சிலம்பு.அடைக்.1)**

**“மழுவற்றுகு மலை யற்றுகும் வளை யற்றுகும் வயிரத்து”**

**(கம்ப.யுத்த.3364:1)**

எனும் பாடல் அடிகளின் மூலம் அறியமுடிகிறது.

மாயானாகிய திருமால் சக்கரப்படையை ஏந்தியவன் என்பதை,

**“அடலெலாந் திகிரி மாயற் கமைந்தன னாற்றல் காட்டக்”**

**(கம்ப.சுந்தர.32:1)**

எனும் பாவடி விளக்குகிறது. சக்கரப் படை வட்ட வடிவில் அமைந்திருக்குகம் என்பதை,

**“உருளு நேமியு மொண்கவ ரெ.ஃகமும்” (கம்ப.அயோத்தி.110:1)**

எனும் பாவடி கொண்டு அறியப்படுகிறது.

இலங்கையின் வாயிற்காவலர்கள் கையில் சக்கரப்படையைக் கொண்டு காவல்தொழிலைப் புரிந்துள்ளதை,

**“கோல்கனைய நேமிகுலி சஞ்சுரிகை குந்தம்” (கம்ப.சுந்தர.164:3)**

எனும் இவ்வடியின் மூலமும், போர்க்களத்தில் பகை வருடன் சக்கரத்தினைக் கொண்டு போர் செய்துள்ளதை,

**“காமரு கணையங் குந்தம் கப்பணங் காலநேமி”**

**(கம்ப.சுந்தர.944:4)**

எனும் பாடலின் மூலமும் அறியமுடிகிறது. காலநேமி என்பதற்குத் தவறாமற் கொல்லவல்ல சக்கராயுதம் என்கிறார் வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியார்.

**முசலம்**

முசலம் என்பதற்கு “உலக்கை”[66] என்று பொருள் இருப்பதை மெய்யப்பன் தமிழகராதி குறிப்பிடுகிறது. போருக்குச் செல்லும் போர் வீரர்கள் உலக்கையினைக் கைக்கொண்டு சென்று போர்புரிந்துள்ளனர்.

உலக்கையை உலக்கை என்றும் முசலம் என்றும் வழங்கியுள்ளமையை,

**“சினத்தயில் கொலைவாள் சக்கரந் தண்டு சிலைமழுத் தோமர முலக்கை” (கம்ப.பால.105:1)**

**“சூலமழு வாளொடயில் தோமர முலக்கை” (கம்ப.சுந்தர.164:1)**

**“சூலம்வாள் முசலங் கூர்வேல் தோமரந் தண்டு பிண்டி”**

**(கம்ப.சுந்தர.757:1)**

**“முற்க ரங்களு முசலமு முசுண்டியு முளையும்”**

**(கம்ப.யுத்த.2500:1)**

எனும் பாடலடிகள் விளக்குகின்றன. மேலும் இரும்பினால் ஆன இரும்வுலக்கையை எழு, எழு முசலம், இரும்புலக்கை என்றும் கூறியுள்ளனர். இதனை,

**“கொற்ற வாளெழுத் தண்டுவேல் கோண்மழுக் குலிசம்”**

**(கம்ப.யுத்த.1469:1)**

**“வல்லெழு முசலம் நேமி**

**மழுகழுக் கடைமுன் ஆன” (பெரிய.580:2)**

**“இருப்பு லக்கை வேல் தண்டுகோ லீட்டிவாள்” (கம்ப.யுத்த.3856:1)**

எனும் பாடலடிகள் விளக்கும். இப்பாடல்களின் மூலம் போர்க்களத்தில் போர்க்கருவியாக உலக்கையைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**நாஞ்சில்**

நாஞ்சில் பலராமன் கையில் இருக்கும் போர்க்கருவி. நாஞ்சிலினை ஏர், கலப்பை, மேழி என்று பல பெயர்களில் சுட்டுவர்.

மேழியை ஆயுதமாகக் கையில் ஏந்திய வெண்ணிற மேனியினை உடைய பலராமன் கோவில் மதுரையில் இருந்தது என்பதை,

**“மேழி வலனுயர்த்த வெள்ளை நகரமும்” (சிலம்பு.ஊர்காண்.9)**

என்னும் இவ்வடியின் மூலம் அறியமுடிகிறது.

போரில் நாஞ்சிலைப் பயன்படுத்திப் போர் செய்துள்ளனர். இதனை,

**“நாமவே லுலக்கைவாள் நாஞ்சில் தண்டெழு” (கம்ப.யுத்த.1323:2)**

**“மழுவுஞ் சூலமும் வலயமும் நாஞ்சிலும் வாளும்”**

**(கம்ப.யுத்த.2499:1)**

**மழுவெழுத் தண்டுகோல் வலயம் நாஞ்சில்வாள்"**

**(கம்ப.யுத்த.3438:1)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

**முசுண்டி**

முசுண்டி என்பதற்கு "சிறுவாள்"[67] என்று (கம்ப.ஆரணிய.401:3) வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியார் உரைப்பர். முசுண்டியை, பண்டைத் தமிழ்ப் போர் வீரர்கள் போரில் பயன்படுத்தியுள்ளனர் என்பதை,

**"முழுக்களு முசுண்டியுந் தண்டு முத்தலைக்"**

**(கம்ப.ஆரணிய.401:3)**

**"முற்கர முசுண்டி பிண்டி பாலம்வேல் சூல முட்கோல்"**

**(கம்ப.சுந்தர.762:2)**

**"கோல்கணைய நேமிகுலி சஞ்சுரிகை குத்தம்" (கம்ப.சுந்தர.164:3)**

**"முழுமுரண் தண்டுவேல் முசுண்டி மூவிலை" (கம்ப.யுத்த.2440:2)**

எனும் பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது.

**எயிற் போர்க் கருவிகள்**

பண்டைத் தமிழர்கள் போர்க்கருவிகளைத் தங்களின் தேவைக்கேற்ற வகையில் வடிவமைத்தும் அவற்றைக் கையாண்டும் உள்ளனர். பகை நாடடு வீரர்கள் மதிற்போர் புரிய வரும் போது அவர்களுடன் போரிட்டு வெற்றி பெற பல்வேறு விதமான மதிற்போற் கருவிகளை மதிலின் மேல் பரப்பி வைத்துள்ளனர்.

மதுரை மாநகரின் காவல் மதிலின் மீது பகைவர்களைக் கண்டவுடன் வளைந்து தாமாகவே தாக்கும் இயந்திர வில்லும், கருத்த விரல்கள் உடைய கருங்குரங்கு உருவிலான பொறியும், கல் உமிழ் கவண் பொறியும், மதிலின் அருகே வந்தவர் மேல்கொட்டக் கொதிக்க வைத்த எண்ணெய்க் குண்டமும், சாணம் கரைத்துக் கொதிக்கின்ற மிடாவும், இரும்பினைக் காய்ச்சி வைத்த உலைக்கூடமும், கற்கள் நிரப்பி வைக்கப்பட்ட கூடைகளும், தூண்டில் வடிவில் அமைக்கப்பட்ட கருவிகளும், கழுத்தில் பூட்டி முறுக்கும் சங்கிலிக் கயிறும், ஆண்டலைப் பறவை வடிவமாகச் செய்யப்பட்ட நெருப்படுப்பும்,

அகழியில் இருந்து மதிலில் ஏறிவர முய்ல்பவர்களை நெட்டித் தள்ளும் கவை வடிவான கருவியும், இரும்புக்கோலும், அம்புக் கட்டும், மறைந்து இருந்து தாக்கும் இடுக்கு வழிகளும், நெருங்கி வருபவர் தலையை நசுக்குகின்ற மரங்களும், மதிலின் மீது ஏறுபவர் கையைக் குத்தித் தாக்கும் ஊசிப் பொறிகளும், பகைவர் மேல் பாய்ந்து தாக்கும் சிச்சிலி என்ற இயந்திரமும், மதில் மேல் ஏறுபவர்களைக் குத்திக்கிழிக்கும் பன்றி வடிவில் அமைந்த பொறியும், மூங்கில் தடிகளும் கோட்டைக் கதவுக்குப் பாதுகாப்பாக அடுக்கி வைக்கப்பட்ட பெரிய மரங்களும் வலிமை வாய்ந்த கணைய மரங்களும், எறிகோலும், குத்துக்கோலும், ஈட்டியும் நிறைந்தது மதுரையின் காவல் மதில் என்பதனை,

> **"மிளையுங் கிடங்கும் வளைவிற் பொறியும்**
> **…**
> **கோலுங் குந்தமும் வேலும் பிறவும்**
> **ஞாயிலுஞ் சிறந்து நாட்கொடி நுடங்கும்"**
>
> **(சிலம்பு.அடைக்கலக்.207-217)**

என்ற இவ்வடிகள் விவரிக்கின்றன.

## தொகுப்புரை

- மனிதனின் அடிப்படைத் தேவைகளுள் ஒன்றான உணவிற்காகத் தோன்றிய சண்டை, பின்னர் மண்ணாசை, பெண்ணாசை, பொருளாசை போன்ற தங்களின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளப் போராக உருவெடுத்தது.
- போரில் ஒரு குழு மற்றொரு குழுவுடனும், தனி மனிதன் மற்றொருவருடனும் போரிடும் வழக்கம் தமிழர்களிடையே இருந்துள்ளது. போரில் வெற்றி எளிதில் கிட்ட போர்க் கருவிகளைப் பயன்படுத்தி உள்ளனர்.

- போர்க்கருவிகள் எய்தற்கருவிகள், எறிதற்கருவிகள், சுழற்றுதற் கருவிகள் என்ற மூன்று வகையாகப் பகுக்கப்படுகின்றன.
- போர் செய்யவிருக்கும் மன்னர்கள் தம் பகைவர்களுக்குப் போர் செய்யவருதலை ஓலை அனுப்பித் தெரிவித்துள்ளனர்.
- போர் தொடங்கும் போதும், போர் நடைபெற்றுக் கொண்டிருக்கும் போதும், போரில் வெற்றி பெற்ற பின்னரும் இசைக்கருவிகளை இசைத்துள்ளனர்.
- போரில் ஆயுதம் இன்றி இருக்கும் பகை வீரன் மேல் போர் தொடுக்காமல், தம் கையில் உள்ள ஆயுதத்தினைக் கைவிட்டு, ஆயுதம் இன்றி கைகளால் போரிட்டுள்ளனர்.
- போரானது ஒரே நாளில் நடந்து முடிந்துவிடாமல் நீண்ட நாட்கள் நிகழ்ந்துள்ளது. சூரிய உதயத்திற்குப் பின் போர் தொடங்கி சூரியன் மறைவிற்கு முன்னர் போரினை நிறுத்தியுள்ளனர்.
- போரில் நால்வகைப் படைகளான யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை, காலாற்படை ஆகியவற்றைக் கொண்டு போரிட்டுள்ளனர்.
- போருக்குச் செல்லும் போது உடைவாள், வேகம், விரல்உறை, கையுறை, அம்புகள் கொண்ட அம்பாறத்தூணி போன்றவற்றை அணிந்து சென்றுள்ளனர்.
- போர்க்களத்தில் தொலைவில் நின்று பகைவரைப் போர் செய்து அழிக்க வில்லினையும், அம்பினையும் பயன்படுத்தியுள்ளனர்.
- போரில் அம்பு செலுத்தும் வீரனின் அம்பில் அவ்வம்பிற்குரிய வீரனின் பெயர் பொறிக்கப்பட்டிருக்கும். அம்பில் பல்வேறு வண்ணத்துணிகள் பொருத்தப்பட்டிருக்கும்.

- போரில் எதிர்நின்று போர்செய்யும் பகைவரின் மீது வேல், ஈட்டி, திரிசூலம், குத்துக்கோல் போன்ற எறிதற் கருவியினைக் கொண்டு போர் செய்துள்ளனர்.

- வேலின் கூர்மைத் தன்மை கெட்டுவிடாமல் இருப்பதற்கு வேலில் நெய்யினைத் தடவி அதனை உறையில் வைத்துப் பாதுகாத்துள்ளனர்.

- போர்க்களத்தில் வீரர்கள் சுழற்றிப் போர் செய்யும் கருவிகளாக வாள், கேடயம், தண்டாயுதம் போன்றவற்றைக் கைகொண்டுள்ளனர்.

- தற்காப்புக் கருவியான கேடயத்தை வாள் வீரர்களும், வேல் வீரர்களும் தங்களைத் தாக்கும் பகை வீரர்களின் தாக்குதலிருந்து தற்காத்துக் கொள்ளப் பயன்படுத்தியுள்ளனர்.

- போரில் முதன்மைப் போர்க்கருவிகளாக வில், அம்பு, வாள், வேல் முதலியன திகழ்ந்துள்ளன. தண்டாயுதம், கவண் உமிழ் கல், பாசம், கப்பணம், பரசு, சம்மட்டி, வச்சிராயுதம், ஆழி, முசலம், நாஞ்சில், முசுண்டி ஆகியனவும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

- பகைநாட்டு வீரர்கள் மதிற்போர்புரிய வரும்பொழுது அவர்களுடன் போரிட்டு வெற்றி பெற பல்வேறு விதமான மதிற்போர் கருவிகளைக் கையாண்டுள்ளனர்.

## சான்றெண் விளக்கம்

1. க.அப்பாத்துரை, 1800 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், ப.156
2. ஆக்னஸ் மேரி, பரிணாமவியல் நோக்கில் சங்ககாலப் போரியல், ப.57
3. கோ.சிவகுருநாதன், வாகைத்திணை, ப.10
4. நா.சுப்பிரமணியன், சங்க கால வாழ்வியல், ப.158
5. கா.காசிம், மகாபாரதத்தின் அரசியல் சிந்தனை, ப.121
6. பொற்கோ.பி.பி.சி.தமிழோசையில், பக்.23-24
7. ஞா.தேவநேயன், பழந்தமிழாட்சி, ப.101
8. சு.வித்யானந்தன், தமிழர் சால்பு, பக்.84-85
9. தொல்காப்பியம், நூ.1014-10
10. திருக்குறள், பா.773
11. திவாகரம் நிகண்டு, நூ.1170
12. மேலது, நூ.1171
13. மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.47
14. சிற்பச்செந்நூல், பக்.128
15. திவாகரம் நிகண்டு, நூ.1146
16. பிங்கலம் நிகண்டு, நூ.1539
17. உரிச்சொல் நிகண்டு, நூ.141
18. கிரியா தற்காலத் தமிழகராதி, ப.32
19. பதிற்றுப்பத்து, ஐந்தாம்பத்து, பா.45:1-3
20. சூடாமணி நிகண்டு, நூ.454:1
21. பிங்கலம் நிகண்டு, நூ.1546

22. சிற்பச்செந்நூல், பக்.127-128

23. பாரதி தீபம் நிகண்டு, நூ.322:1-2

24. சூடாமணி நிகண்டு, நூ.451:1-3

25. மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.1110

26. புறநானூறு, பா.26:1-5

27. நாமதீப நிகண்டு, நூ.416:1

28. திவாகரம் நிகண்டு, நூ.1152

29. திருக்குறள், பா.774

30. மேலது, பா.775

31. சங்க இலக்கிய பொருட் களஞ்சியம், தொகுதி-1, ப.319

32. பெருஞ்சொல்லகராதி, தொகுதி-3, ப.15

33. பத்துப்பாட்டு, முல்லைப்பாட்டு, பா.25-26

34. மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.832

35. சிற்பச்செந்நூல், ப.125

36. அபிதான மணிமாலை, நூ.1585

37. பேரகராதி, ப.603

38. மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.690

39. நாமதீப நிகண்டு, நூ.419:3

40. நாநார்த்த நிகண்டு, நூ.559:4

41. ந.சுப்ரமண்யன், சங்க கால வாழ்வியல், ப.93

42. ச.இராசேந்திரன், தற்காலத் தமிழ்ச்சொற்களஞ்சியம், ப.106

43. பெருஞ்சொல்லகராதி, தொகுதி-3, ப.130

44. சிற்பச்செந்நூல், பக்.132-133

45. பிங்கலம் நிகண்டு, நூ.1562

46. சிற்பச்செந்நூல், ப.133

47. புறநானூறு, பா.345:15

48. பிங்கல நிகண்டு, நூ.1609

49. திவாகரம் நிகண்டு, நூ.1177

50. சிற்பச்செந்நூல், ப.127

51. பதிற்றுப்பத்து, ஆறாம்பத்து, பா.54:3-5

52. க்ரியா தற்காலத் தமிழ் அகராதி, ப.271

53. சிற்பச்செந்நூல், ப.126

54. மெய்யப்பன் தமிழ்அகராதி, ப.298

55. சிற்பச்செந்நூல், ப.128

56. திவாகரம் நிகண்டு, நூ.1141

57. க்ரியா தற்காலத் தமிழ் அகராதி, ப.540

58. நாமதீப நிகண்டு, நூ.211:1

59. பிங்கலம் நிகண்டு, நூ.1636

60. சிற்பச்செந்நூல், ப.134

61. மேலது, ப.126

62. திவாகரம் நிகண்டு, நூ.1153

63. மெய்யப்பன் தமிழ் அகராதி, பக்.115

64. சிற்பச்செந்நூல், ப.129

65. திவாகரம் நிகண்டு, நூ.1142

66. மெய்யப்பன் தமிழகராதி, ப.972

67. கம்பராமாயணம், ஆரணிய காண்டம், பா.403:3, வை.மு.கோபாலச்சாரியார் உரை

ஆதி மனிதர்கள் வேட்டையாடி உணவுத் தேவைக்காக நாடோடி வாழ்க்கை மேற்கொண்டு வந்தனர். பின்னர் சிறிது சிறிதாக வளர்ச்சியுற்று குடும்ப அமைப்பினை உருவாக்கி தங்களுக்கான ஓர் இருப்பிடத்தை உருவாக்கிக் கொண்டு ஓர் நிலைத்த வாழ்வினை மேற்கொண்டனர். தங்களின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள, பொருளியல் வளத்தினைப் பெருக்கிக் கொள்ள பல்வேறு தொழில்களைச் செய்து வந்துள்ளனர். அவ்வாறு மக்கள் மேற்கொணர்ந்த தொழில்கள் பற்றியும் அவற்றிற்குப் பேருதவியாக அமைந்த கருவிகள் பற்றியும் அறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

**தொல்காப்பியத்தில் தொழில்**

தமிழில் முதலில் கிடைத்த மிகப்பழமை வாய்ந்த இலக்கண நூல் தொல்காப்பியம். கருப்பொருள் பற்றி,

> **"தெய்வம் உணவே மாமரம் புட்பறை**
> **செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
> **அவ்வகை பிறவும் கருவென மொழிப"**[1]

என்பர் தொல்காப்பியர். இந்நூற்பாவில் செய்தி என்ற சொல் தொழிலைச் சுட்டுகிறது.

> **"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்**
> **ஐவகை மரபின் அரசர் பக்கமும்**
> **மறுவில் செய்தி மூவகைக் காலமும்**
> **நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்**
> **நாலிரு வழக்கில் தாபதப் பக்கமும்**
> **பாலறி மரபில் பொருநர் கண்ணும்**
> **அனைநிலை வகையோடு ஆங்கெழு வகையால்**
> **தொகைநிலை பெற்றது என்மனார் புலவர்"**[2]

என்ற நூற்பாவிலுள்ள ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறு தொழில்களும் அந்தணர்களுக்குரியவை. ஓதலும், வேட்டலும், ஈதல், படை வழங்குதல், குடிமக்களைப் பாதுகாத்தல் என்ற

ஐவகை தொழிலும் அரசர்குரியவை. ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வணிகம், நிரையோம்பல் என்ற ஆறும் வணிகர்களுக்கும், வேளாளர்க்கும் உரியவை.

தொல்காப்பியர் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் ஆகியோரது தொழில்களையும், அவற்றுக்கான கருவிகளையும் பற்றிக் கூறியுள்ளார்.

அரசர்க்குரிய கருவிகளாக நால்வகைப் படையும், கொடியும், வெண்கொற்றக் குடையும், முரசும், குதிரையும், யானையும், தேரும், தாரும் இருந்ததை,

**"படையும் கொடியும் குடையும் முரசும்**
**நடை நவில் புரவியும் களிறும் தேரும்**
**தாரும் முடியும் நேர்வன பிறவும்**
**தெரிவு கொள் செங்கோல் அரசர்க்கு உரிய"**[3]

என்ற நூற்பா விளக்குகிறது. அந்தணர்களுக்குப் பயன்படும் தொழில் கருவிகளாக நூல், கமண்டலம், முக்கோல், இருக்கைப் பலகை நான்கும் இருந்ததை,

**"நூலே கரகம் முக்கோல் மணையே**
**ஆயும் காலை அந்தணர்க்கு உரிய"**[4]

எனும் நூற்பாவில் உரைக்கிறார். வணிகர்களுக்கும், வேளாளர்களுக்கும் உரிய தொழில் பற்றிக் கூறிய தொல்காப்பியர் அவர்கள் தொழிலுக்குப் பயன்படுத்திய கருவிகள் பற்றிக் குறிப்பிடவில்லை.

**தொழில் சொற்பொருள் விளக்கம்**

தொழில் என்பதற்குச் "செயல், அலுவல், தந்திரம், பெருமை, வினைச்சொல், ஏவல், திறமை, களவு"[5] என்று மெய்யப்பன் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது.

"வேலை, மனித உழைப்பு, இயந்திரங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தி இலாப நோக்குடன் ஒரு பொருளை உற்பத்தி செய்திடும் செயல்"[6] என நர்மதா தமிழ் அகராதி விளக்கம் தருகிறது.

**தொழில் பற்றிய அறிஞர்கள் கருத்து**

தொழில் என்பதற்கு "உழைப்பு என்பது பெயர்ச் சொல்லாக ஒரு செயல் அல்லது தொழிலைக் குறிக்கும். உழைத்தல் என்பது வினைச் சொல்லாகத் தொழில் செய்தலைக் குறிக்கும். உழைப்பவர் இனம் என்பது பொதுவாகத் தொழிலாளர்களைக் குறிக்கும்"[7] என்கிறார் வி.சி.சசிவல்லி.

"உழைப்பு என்பது மூளையையோ, உடலையோ, மூடுவதுமாகவோ பகுதியாகவோ வருத்தி ஏதோ ஒன்றைப் படைப்பதற்காகச் செய்கின்ற செயலைக் குறிக்கும். ஆனால் அந்தச் செயலிலிருந்து கிடைக்கும் மகிழ்ச்சியை உழைப்பு உள்ளடக்கும். கல்வி அறிவில்லாத தொழிலாளர்களின் உற்பத்தி முயற்சிகளும், கைத்தொழில் கலைஞர்கள், கல்வியாளர்கள், ஆசிரியர்கள், வழக்கறிஞர்கள், வணிகர்கள், நுண் கலைஞர்கள், இலக்கிய அறிஞர்கள், மருத்துவர்கள், அறிவியல் வல்லுநர்கள், நிர்வாகிகள் ஆகியோரின் பணி முயற்சிகளும் மார்சலின் உழைப்பு இலக்கணத்தினுள் அடங்குகின்றன."[8] என்று வாழ்வியல் களஞ்சியம் விளக்குகிறது.

**ஐவகை நிலம்**

சங்கத் தமிழர் வாழ்விடங்களை,

குறிஞ்சி - மலையும் மலை சார்ந்த இடமும்

முல்லை - காடும் காடு சார்ந்த இடமும்

மருதம் - வயலும் வயல் சார்ந்த இடமும்

நெய்தல் - கடலும் கடல் சார்ந்த இடமும்

பாலை - மணலும் மணல் சார்ந்த இடமும்

என்று ஐந்து வகைகளாகப் பிரித்து அந்நிலப்பகுதிகளுக்கு ஏற்றார் போல் தொழிலினை மேற்கொண்டுள்ளனர். குறிஞ்சி நிலத்துக் குறவர்கள் மலையில் தேனெடுத்தல், கிழங்குகளை அகழ்ந்தெடுத்தல், தினைப்புனங் காத்தல் போன்ற தொழில்களைச் செய்துள்ளனர். முல்லை நிலத்து ஆயர்கள் ஆடு, மாடு மேய்த்தலினைத் தொழிலாகச் செய்துள்ளனர். மருத நிலத்து உழவர்கள் வயல் வெளிகளில் வேளாண்மைத் தொழிலினை மேற்கொண்டனர்.

நெய்தல் நிலத்துப் பரதவ மக்கள் கடலில் மீன் பிடித்தல், முத்து எடுத்தல், உப்பு விளைத்தல் போன்ற தொழிலினைச் செய்து வந்துள்ளனர். பாலை நிலத்துக் கள்வர்கள் வழிப்பறி செய்து பிழைப்பு நடத்துவதையே தொழிலாகக் கொண்டிருந்தனர்.

**தொழில் சார்ந்த கருவிகள்**

மக்கள் தங்களின் வாழ்வியல் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவும், வாழ்க்கைத் தரத்தைப் பொருளாதார நிலையில் முன்னேற்றம் அடையச் செய்யவும் பல்வேறு வகையான தொழில்களை மேற்கொண்டு வந்துள்ளனர். தாங்கள் செய்து வந்த தொழில்களைச் செவ்வனவே செய்து முடிக்க தொழிற் கருவிகள் உறுதுணையாக இருந்துள்ளன. தொழிற் கருவிகள் பற்றியும், அவற்றின் பயன்பாடுகள் பற்றியும் விளக்கிக் கூறுவதற்குத் தொழில்கள் கீழ்க்கண்ட முறையில் வகைப்படுத்தப்படுகின்றன.

1. கைத்தொழில்கள்,
2. நிலஞ்சார் தொழில்கள்,
3. அறிவுசார் தொழில்கள்

என்பனவாகும்.

**கைத்தொழில்**

மானிடர்கள் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் இன்றியமையாத ஒன்றாக அமைவது கைகளே. "வரலாறு முழுவதிலும் மனித குலம் சிருஷ்டித்துள்ள பொருளாய்ச் செல்வத்தின் தோன்றுகால் உழைப்பே. அவனது மூளை மட்டுமின்றி கையுங்கூட உழைப்பின் மூலம் மிகச் சிக்கலான செயல்களைச் செய்யுந்திறன் வாய்ந்த, துல்லியமான உறுப்பாக அவனது கரங்கள் உருப்பெற்றுள்ளன"[9] எனும் கருத்தாக்கத்தின் அடிப்படையில் கைகளின் அவசியத்தினை அறிந்து கொள்ள முடிகிறது.

"கைத்திறமையாலோ, சிறுகருவிகளைனப் பயன்படுத்தியோ செய்யப்படும் தொழில்"[10] கைத்தொழில் எனப்படும். அதேபோன்று "உழைத்து தொழில்

செய்து பொருளை ஆக்கும் முயற்சிகள் கைத்தொழில்கள் எனப்படுகின்றன”[11] எனக் கலைக்களஞ்சியம் விளக்கம் தருகிறது.

கைத்தொழில்கள் கீழ்க்கண்டவாறு பகுக்கப்படுகின்றன. அவை,

1. பயிர்த் தொழில்,

2. தச்சுத் தொழில்,

3. மட்கலத் தொழில்,

4. கொல்லுத் தொழில்,

5. உலோகத் தொழில்,

6. அணிகலத் தொழில்,

7. தோல் தொழில்

என்பனவாகும்.

**பயிர்த்தொழில்**

மனிதனின் அடிப்படைத் தேவை உணவு, உடை, உறையுள். இவற்றில் உணவே மனிதன் உயிர் வாழ்வதற்கான கட்டாயத் தேவை. இவ்வுணவினைப் பெற உழவுத் தொழில் அல்லது பயிர்த் தொழில் காலம் காலமாக மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. உழவுத்தொழில் செய்வோரினை வேளாளர்கள் என்றும், உழவர்கள் என்றும் அழைப்பர். உழவுத் தொழில் குறித்து,

**“வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது**

**இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி”**[12]

என்ற நூற்பாவில் வேளாளர்க்கு உழுதுண்டலே சிறந்த தொழிலாகும் என்கிறார் தொல்காப்பியர். இதில் வேளாண் என்னும் சொல் உழவுத் தொழிலான பயிர்த்தொழிலைச் சுட்டுகிறது.

உழவுத் தொழில் குறித்து வள்ளுவர் மக்கள் தங்களை இச்சமுகத்தில் நிலைநாட்டிக் கொள்ள எண்ணில் அடங்கா தொழில்களை மேற்கொணர்ந்து

வந்தாலும் அத்தொழில்களுக்கு எல்லாம் தலையான முதன்மைத் தொழிலாக உழவுத்தொழிலைக் குறிப்பிடுகிறார். இதனை,

**"சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்**

**உழற்றும் உழவே தலை"**[13]

என்கிறார். பயிர்த் தொழில் செய்ய ஏர், கொழு, கறும்புச்சாறு பிழி இயந்திரம், அரிவாள், தாறு, சாட்டை, பரம்பு, பதரு, கவண், மண் வெட்டி போன்ற தொழிற் கருவிகளைப் பயன்படுத்தியுள்ளமையைக் காப்பியங்கள் வாயிலாக அறியமுடிகின்றது.

**உழவுக்கருவிகள்**

பயிர்த்தொழிலை, உழவுத்தொழில் என்றும் கூறுவர். உழவுத்தொழில் செய்ய "கலப்பை, மேழி, ஏக்கால், நுகத்தடி, கார், காரின் ஆணிகள், ஏர்க்காலின் புள், பரம்புச் சட்டம், மாமரம், கொழு, கலப்பை, கட்டைப்பாறை, எருதுகள், பூட்டாங்கயிறு, மண்வெட்டி, குந்தாலி, கோடாலி, களைகொட்டு, கருக்கு அரிவாள், பிக்காசு, வெட்டுக்கத்தி, முள்வாள், துறட்டுக்கோல், தாற்றுக்கோல், இறை கூடை, கை ஏற்றம், ஆள் ஏற்றம்"[14] முதலிய கருவிகள் பயன்படுவதாக அபிதான சிந்தாமணி உரைக்கிறது.

**ஏர்**

பயிர்த்தொழில் செய்யும் முன்னர் பயிர்த்தொழில் செய்யும் நிலத்தினை உழுது பண்படுத்த வேண்டும். இச்செயலுக்குப் பயன்படுத்தப்பட்ட கருவி ஏர். ஏர்க் கருவியைக் கலப்பை என்றும், நாஞ்சில் என்றும் மேழி என்றும், படை என்றும், ஏர் என்றும் வழங்கியுள்ளனர். இதனை,

**"மாறில் வண்பகட்டு ஏர்பல**

**நெருங்கிட வயல்கள்" (பெரிய.1106:1)**

**"ஆயதற் குரியன கலப்பை யாவையும்" (கம்ப.பால.263:1)**

**"சுற்றுண்ட பாச நாஞ்சிற் சுமையொடுஞ் சூடுண்டாற்ற"**

**(கம்ப.யுத்த.1621:1)**

**"மேழி வலனுயர்த்த வெள்ளை நகரமும்" (சிலம்பு.ஊர்காண்.9)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது.

ஏர் உழும் போது, ஏர் மங்கலம் பாடியுள்ளனர். இதனை,

**"ஏரொடு நின்றோ ரேர்மங் கலமும்"** (சிலம்பு.நாடுகாண்.135)

என்ற பாடலடி விளக்ககிறது. சிலப்பதிகார காலத்திற்கு முன்பே, உழவர்கள் ஏர் கொண்டு உழும் முன் 'ஏர் மங்கலம்' பாடியதை,

**"எருதுஎறி களமர் ஓதையொரு நல்யாழ்**
**மருதம் பண்ணி அசையினிர் கழிமின்"**[15]

என்னும் மலைபடுகடாம் பாடலடிகள் உரைக்கின்றன.

ஏரினை அலங்கரிக்க பூமாலை சூடுவர். மேலும் இரத்தினங்கள் பதிக்கப்பட்டு அலங்கரிக்கப்பட்டுள்ளது என்பதை,

**"வரம்பின்மணிப் பொற்கலப்பை வயிரத்தின் கொழு மடுத்திட்டு"**
**(கம்ப.பால.764:3)**

எனும் பாடலடிகள் விளக்கும்.

உலகில் எண்ணற்ற தொழில்கள் இருப்பினும் அவற்றிற்கெல்லாம் தலையாய தொழில் உழவுத் தொழிலாகும். இவ்வுழவுத் தொழிலுக்கு இன்றியமையாத கருவி ஏர். இவ்வேரின் சிறப்பினை மக்களுக்கு உணர்த்தவே பலராமன் தன் கையில் ஏரினைப் படையாகக் கொண்டுள்ளான். சிலப்பதிகாரத்தில் பலராமன் கோவிலில் வெற்றி தரும் கலப்பையைப் படையாக பலராமன் கையில் இருந்துள்ளமையை,

**"மேழி வலனுயர்த்த வெள்ளை நகரமும்" (சிலம்பு.ஊர்காண்.9)**

என்ற பாவடி மூலம் அறியமுடிகின்றது.

நிலத்தினை உழுது பயிரிடும் பயிர்த் தொழிலுக்கு மட்டுமின்றி வேள்ளி செய்வதற்காக நிலத்தை உழுது பண்படுத்திட ஏரினைப் பயன்படுத்தியுள்ளனர். வேள்வியில் ஏரினைப் பயன்படுத்தியுள்ளமையை,

**"ஆயதற்கு குரியன கலப்பை யாவையும்" (கம்ப.பால.263:1)**

**"வரம்பின்மணிப் பொற்கலப்பை வயிரத்தின் கொழு மடுத்திட்டு**
**உரம்பொருவி னிலம்வேள்விக் கலகில்பல சாலுழுதேம்"**
**(கம்ப.பால.764:3-4)**

என்ற பாடல்களின் மூலம் வேள்வியாகம் செய்ய ஏரினைக் கொண்டு உழுது நிலத்தைப் பண்படுத்தியுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

**கலப்பை, கொழு**

பயிர்த்தொழிலில் முதலாவதாகச் செய்வது நிலத்தைப் பண்படுத்தல். நிலத்தைப் பண்படுத்தக் கலப்பையினைக் கொண்டு உழவு செய்தல் வேண்டும். உழவு செய்தலின் போது நன்கு ஆழமாக மண்ணைக் கிளறும்படியாகக் கலப்பையின் கூர்மையான அடிப்பகுதியில் கூரான இருப்புப் பட்டை பொருத்தப்பட்டிருக்கும். அதற்குக் கொழு என்று பெயர். இக்கொழுவானது கலப்பையில் இணைக்கப்பட்டிருந்ததை,

> **"சாற்று அலைவன் குலைவயலில்**
> **தகட்டுவரால் எழப்பகட்டு ஏர்**
> **ஆற்றலவன் மொழுக்கிழித்த**
> **சால்வழி போய் அசைந்தேறிச்"** (பெரிய.1047:2-3)

> **"வரம்பின்மணிப் பொற்கலப்பை வயிரத்தின் கொழு மடுத்திட்டு"**
> **(கம்ப.பால.764:3)**

> **"உழுகின்ற கொழுமுகத்தி னுதிக்கின்ற கதிரினொளி"**
> **(கம்ப.பால.765:1)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது. இக்கொழு வயிரத்தால் ஆனவை என்பதை,

> **"வரம்பின்மணிப் பொற்கலப்பை வயிரத்தின் கொழு மடுத்திட்டு"**
> **(கம்ப.பால.764:3)**

என்ற பாடலடியின் மூலம் விளங்க முடிகின்றது.

**பரம்பு**

நன்கு உழுத நிலத்தை நாற்று நடவு செய்வதற்காக, மேடு பள்ளமின்றி சமப்படுத்திட உதவும் கருவி பரம்பு. பரம்பானது மரத்தால் செய்யப்படுவது. நிலத்தினை உழுதபின்னர் பரம்பினைக் கொண்டு சமப்படுத்தியுள்ளனர் என்பதை,

**“படையுழ வெழுந்த பொன்னும் பணிலங்க ளுயிர்த்த முத்தும்**

**இடறிய பரம்பிற் காந்து மினமணித் தொகையு நெல்லின்”**

**(கம்ப.பால.39:1-2)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகின்றது.

**நுகத்தடி**

உழவுத் தொழில் கருவிகளில் நுகத்தடி மிக அடிப்படையான கருவியாகும். ஏர் உழும் போது இரண்டு மாடுகளும் ஒரே நேர்கோட்டில் செல்வதற்கு நுகத்தடி பேருதவி செய்கிறது. இக்கருவி தடித்த மரத்தால் செய்யப்படுவது. தடிமனான ஆறில் இருந்து ஏழு அடி நீளம் கொண்டதாக பெரிய அமைப்பைக் கொண்டது. நுகத்தடியின் இருபுறத்திலும் சிறுசிறு துளைகள் இடம் பெற்றிருக்கும். இதன் நடுப்பகுதியில் கொக்கி போன்ற அமைப்புப் பொருத்தப்பட்டிருக்கும். இதில் இரும்புச் சங்கிலி அல்லது கயிறு கொண்டு கட்டப்பட்டிருக்கும். ஏர் உழவின் போது பெரிய, நீண்ட இரு கொம்புகளையுடைய காளையின் பருத்த பெரும் பிடரியின் மேல் பளிங்கால் இழைத்த நுகத்தடியைப் பூட்டி காளையினை ஒரே சீராகச் செல்ல வைத்து உழவு செய்துள்ளனர். இதனை,

**“இரும்பனைய கருநெடுங்கோட் டிணையேற்றின் பணையேற்ற**

**பெரும்பியலிற் பளிக்குநுகம் பிணைத்ததனோ டணைத்தீர்க்கும்”**

**(கம்ப.பால.764:1-2)**

என்ற பாடலடிகளின் மூலமாக அறியமுடிகிறது. ஏரில் இரண்டு காளை மாடுகளையும் அல்லது இரண்டு எருமை மாடுகளையும் பூட்டி உழவு செய்துள்ளனர். இதனை,

**“வரம்பின்மணிப் பொற்கலப்பை வயிரத்தின் கொழு மடுத்திட்டு**

**உரம்பொருவி நிலம் வேள்விக் கலகில்பல சாலுழுதேம்”**

**(கம்ப.பால.7643-4)**

என்ற பாடல் மூலம் அறியமுடிகின்றது. இதில் எருது என்பது எருமை மாடு. மேலும் எருமை கொண்டு உழுததை,

**“மாறில் வண்பகட்டு ஏர்பல**

**நெருங்கிட வயல்கள்” (பெரிய.1106:1)**

என்ற பாடலடி மூலம் அறியப்படுகிறது. இதில் பகடு என்பது எருமைக்கடா.

சிலப்பதிகாரத்தில் ஓர் இடத்தில் மட்டும் சேரன் செங்குட்டுவன் வடநாட்டு மன்னர்களின் பெரிய கோட்டைகளை அழித்து, அங்கே கழுதையை ஏரில் பூட்டி உழுது வெள்வரகு விதைத்துள்ளான் என்ற செய்தி உரைக்கப்பெறுகிறது. இதனை,

**“வடதிசை மன்னர் மன்னெயின் முருக்கிக்**

**கவடி வித்திய கழுதையே குழவன்**

**குடவர் கோமான் வந்தா னாளைப்” (சிலம்பு.நீர்ப்படை.225-227)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இதிலிருந்து கழுதையை ஏரில் பூட்டி உழவு செய்துள்ளனர் என்ற செய்தி அறியமுடிகிறது.

**ஏர் உவமை**

உழும் போது ஏரில் பூட்டிய எருதுக்கும் அதனை இயக்கப் பயன்படும் கோலத்துக்கும் உவமையாக யானையையும் வாளையும் உவமையாகக் கூறியுள்ளனர். இதனை,

**“கோட்டுமாப் பூட்டி வாட்கோ லாக” (சிலம்பு.கால்கோட்.232)**

என்ற பாடலடி விளக்கும்.

**தார்க்கோல்**

கார்க்கோலானது மூன்று அடி நீளமுள்ள மூங்கில் குச்சி. இதன் இறுதியில் முள் பொருத்தப்பட்டிருக்கும். கயிறு கொண்ட சாட்டையும் இக்குச்சியில் கட்டப்பட்டிருக்கும். மாட்டினை வேகமாகச் செல்லவைப்பதற்காக இத்தார்க்கோலினைக் கொண்டு அடிப்பர், குத்துவர். உழவர்களான மள்ளர்கள் நிலத்தினை உழுது கொண்டிருக்கும் போது வேகமாக உழவு செய்ய காளையைத் தார்க்கோல் கொண்டு அடித்துள்ளமையை,

**“கோல டிப்பவெ பீஇக்குால மள்ளரேர்ச” (கம்ப.கிட்கிந்தா.940:2)**

எனும் பாவடி மூலம் அறியமுடிகிறது.

**அரிவாள்**

வேளாண் மாந்தர்களின் முக்கியத் தொழில் கருவியாக விளங்குபவை அரிவாள். இக்கருவியைப் பயன்படுத்தி தானியங்களை அறுவடை செய்துள்ளனர். அரிவாளானது இருப்புப் பட்டையில் அரைவட்ட வடிவில் உட்புறம் கூர்மையாகத் தொடர் சாய்வு வெட்டுக்களுடனும் வெளிப்புறம் கூர்மை அற்றதாகவும் இருக்கும். இதன் அடிப்பகுதியில் கைப்பிடி இணைக்கப்பட்டிருக்கும். இக்கைபிடி மரத்தால் அல்லது விலங்குகளின் கொம்புகளால் செய்யப்பட்டிருக்கும்.

முல்லை நில மக்கள் சிறு தானியங்களை விளைவித்து, அவற்றை 'அரிவாள்' கொண்டு கொய்ததை,

**"சிறுதினை கொய்ய கவ்வை கறுப்பக்"**[16]

என்னும் மதுரைக்காஞ்சியின் பாடலடி கூறுகின்றது.

சோழநாட்டில் கணமங்கலம் என்னும் பகுதியில் வேளாளர் குலத்தில் பிறந்த தாயனார் செந்நெல்லரிசியும், செங்கீரையும், மாவடுவும் கொண்டு சிவபிரானுக்குத் திருவமுது செய்விக்கும் திருத்தொண்டு செய்துவந்தார். ஒரு நாள் தாயனார் செந்நெல்லரிசியையும், மாவடுவையும் ஒரு கூடையில் வைத்துச் சுமந்து கொண்டு இறைவனுக்குத் திருவமுதூட்டச் செல்லும் போது பசிக் கலைப்பால் கால் தளர்ந்து தவறிக் கீழே விழலானார். அப்போது கூடையிலிருந்து செந்நெல் முதலிய யாவும் கீழே விழுந்து சிதறிவிட்டன. அப்போது நாயனார் ஆண்டவனுக்குத் திருவமுது செய்விக்கும் பேற்றினை நான் இழந்தனனே, பாவியாகிய நான் அரிவாளால் தொண்டையை அறுத்து உயிர் விடுவேன் என்று அரிவாளைக் கைக்கொண்டு தொண்டையை அரியத்தொடங்கினார். இதனைப் பெரியபுராணத்தில் 923, 924, 925, 926 ஆகிய பாடல்கள் உரைக்கின்றன. இதிலிருந்து ஒன்றை அறுக்க அரிவாள் பயன்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

தாயனார் சிவபிரானுக்கு அமுது செய்திலேன் என்று மாவடு விடேல் என்று ஒலிப்பதற்கு முன்னே 'அரிவாட்டாயா' எனும் பெயர் பெற்றார். இதனை,

**“அரிதலால் அரிவாட் டாயர்**

**ஆயினார் தூய நாமம்”** (பெரிய.929:4)

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது.

**அரிவாள் உவமையாகப் பயன்படல்**

வளைந்த நெற்கதிருக்குப் பாக்கு மரத்தின் குலைகளை அரிகின்ற நீண்ட அரிவாள் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதை,

**“சேறணிதண் பழனவயல்**

**செழுநெல் கொழுங்கதிர் போய்**

**...**

**தாறரியும் நெடுங்கொடுவாள்**

**அனைய உள தனி இடங்கள்”** (பெரிய.874)

எனும் பாடல் விளக்குகிறது.

**மண்வெட்டி**

மண்வெட்டி பற்றி “மண் தோண்டும் கருவி வகை மண்வெட்டி. மண்ணை வெட்டி அள்ளிப் போடப் பயன்படுத்தும் கருவி. மரக்கட்டையால் தடித்த இரும்புத்தகடு பொருத்தப்பட்ட கருவி. இம்மண்வெட்டி நாட்டுப்புற வேளாண் கருவிகளுள் ஒன்று. குறிப்பாக விவசாயத்தில் மண்ணை வெட்டுவதற்காகப் பயன்பட்டாலும் தொடர்புடைய மற்ற தொழிலுக்கும் அதிகம் பயன்படுகிறது. அருவா, கலகொட்டு, கலப்பை, நுகத்தடி, வடகயிறு, மொலகழி, சட்டகலப்பை, பரம்புபலகை, பல்லுனிகலப்பை இது போன்று விவசாயத்திற்குப் பல கருவிகள் இருந்தாலும் எல்லாக் காலத்திற்கும், எல்லா இடத்திற்கும் (நிலம்) எல்லாப் பயிர்த் தொழிலுக்கும் பயன்படக்கூடிய ஒரே கருவி மண்வெட்டி என்றால் மிகையாகாது”[17] என்கிறார் சா.சுந்தரபாலு.

**மண்வெட்டியின் அமைப்பு**

மண்வெட்டியின் அமைப்பு முறையினை, “மண்ணை வெட்டும் பகுதி வலிமையான இருப்புத் தகட்டாலும் (1 அடி நீளம் 1/2 அடி அகலம்) கையில் பிடிப்பதற்காக (தகட்டோடு இணைந்த) மரத்தால் செய்த உருண்டை வடிவான ஒரு கைப்பிடிக்குள் அடங்கும் 1 1/2 அடி நீளமுள்ள மரத்துண்டும்

இணைந்த ஒரு கருவி"[18] என்று சா.சுந்தரபாலு தொழிற்கருவிகள் எனும் நூலில் குறிப்பிடுகிறார்.

தண்டியடிகள் திருவாரூரில் பிறந்தவர், பிறவியிலே குருடரான இவர் தம் அகக் கண்களால் இறைவனைக் கண்டு திருவைந்தெழுத்தை ஓதித் திருக்கோயிலை வலம் வருபவரானார். திருவாரூரில் உள்ள குளத்தை ஒரு தறி நட்டுக் கரையில் மற்றொரு தறி அமைத்து நெடுகக்கயிறு கட்டித் தடவிக்கொண்டே மண்ணை மண்வெட்டியால் வெட்டிக் கூடையில் சுமந்து வெளியே கொட்டினார். இதனை,

**"இழிவாய்ப் புறத்து நடுத்தறியோடு**
**இசையக் கட்டி இடைதடவி**
**வழியால் வந்து மண்கல்லி**
**எடுத்து மறித்தும் தடவிப்போய்" (பெரிய.3601:2-3)**

எனும் பாடல் விளக்குகிறது. இதிலிருந்து நிலத்தினைத் தோண்டுவதற்கும், அகலப்படுத்துவதற்கும் மண்வெட்டி பயன்படுத்தப்பட்டதைக் காணமுடிகின்றது.

**உழவாரம்**

உழவாரமானது, "பிடி மரக்கட்டையினாலும் செய்தும் நுனிப்பகுதி தட்டையான இரும்புத் தகட்டாலும் வடிவமைக்கப்பட்டுள்ளது. இது களகொட்டு, மண்வெட்டி, இரண்டையும் சேர்ந்த ஒரு வடிவம். நேர்வடிவில் இல்லாமல் வளைந்துள்ளது. அதனை கையிலோ, துணிப் பையிலோ வைத்து எடுத்துச் செல்லலாம். அதனால் தூய்மை செய்வது எளிது. கை காய்ப்புக் கொடுக்காது. புல்லை எந்த அளவில், எந்த ஆழத்தில் நம் தேவையைப் பொறுத்தும் எடுக்கவேண்டுமோ, அக்கருவியின் அமைப்பை (உயரம்) மேலே தூக்குவதோ கீழே இறக்குவதோ செய்தால் நாம் நினைத்த புல்லையோ, மண்ணையோ எடுக்கலாம். இன்றும் திருக்களப்பூரில் கால்நடைகளுக்கு புல்லைச் செதுக்க இக்கருவி பயன்பட்டுக் கொண்டிருக்கின்றது. மண்வெட்டிக்கு இலை மாட்டுவது போன்று இதற்கும் இலை மாட்டுகிறார்கள். அக்கருவியின் பிடியானது நேராகச் சென்று சிறிது வளைந்து மீண்டும் நேராக உள்ள பகுதியில்தான் இலை சொறுகப்பட்டுள்ளது."[19] என்கிறார் சா.சுந்தபாலு.

திருநாவுக்கரசர் சமண சமயத்திலிருந்து வெளியேறி மெய்யில் திருநீறும் உருத்திராட்ச மாலையும் அணிந்து மனத்தால் தியானமும், வாக்காலும் சிவசிந்தனையும், கையில் உழவாரக் கருவியும் கொண்டு தொண்டு செய்து வந்தார்.

புல், பூண்டுகளை நிலத்தினின்று செதுக்கிக் கோயில் வலம் வருவார்க்கு நலம் பெற வைத்தல் உழவாரக் கருவியின் பணியாகும். இவ்வுழவாரமே திருநாவுக்கரசர்க்கு அடையாளம்.

திருநாவுக்கரசர் உழவாரக் கருவியைக் கொண்டு கோயிலில் உள்ள புல்லைச் செதுக்கி கோயிலைத் தூய்மை செய்தார் என்பதை,

**"திருக்குறு தொகைகள் பாடித்**
**திருஉழ வாரம் கொண்டு**
**பெருத் தெழு காதலோடும்**
**பெருந் திருத் தொண்டு செய்து" (பெரிய.1441:2-3)**

எனும் பாடலின் மூலமாக அறியமுடிகின்றது. உழவாரம் கொண்டு கோயிலில் கிடக்கும் பருக்கைக் கற்களைச் சுத்தம் செய்ததை,

**"எம்பெருமான் வாகீசர்**
**உழவாரத் தினில் ஏந்தி" (பெரிய.1687:3)**

எனும் பாடலின் வாயிலாக அறியப்படுகிறது.

**முறம்**

முறமானது "நுனிப்பகுதி சற்று அகலமாக இருக்கும்படி ஓலை முதலியவற்றால் பின்னப்பட்ட தடித்த விளிம்பினை உடைய சாதனம்"[20] ஆகும்.

வயல்களில் உள்ள நெற்கதிர்கள் விளைந்த பின்னர் அதனை அறுவடை செய்து களத்தில் பரப்பி மாடுகளை ஒன்றாகப் பூட்டி மிதிக்கவிட்டுச் சூடடித்த பின்னர் நெல்லை முகந்து நூற்றுவதற்குப் பயன்பட்ட கருவி முறம். இம்முறத்தினைக் கொண்டு நெல்லைத் தூற்றும் போது முகவைப் பாடல் பாடியுள்ளனர். இதனை,

**“பெருஞ்செய்ந் நெல்லின் முகவைப் பாட்டும்”**

**(சிலம்பு.நாடுகாண்.137)**

என்ற பாடலடி உணர்த்துகிறது.

**முறம் உவமையாகப் பயன்படல்**

யானையின் காதுகளுக்கு முறமானது உவமையாகக் கூறப்பட்டு உள்ளது. இதை,

**“முறங்செவி வாரண முன்சம முருக்கிய” (சிலம்பு.நாடுகாண்.247)**

எனும் பாடலடி விளக்கும்.

**கவண்**

“கயிற்றில் கட்டப்பட்டு இருக்கும் பட்டையான தோலில் கல் வைத்துப் பயிர்களைக் கொத்தித் தின்னும் குருவிகளை விரட்டச் சுழற்றி எறியும் சில கருவி”[21] என்கிறது நர்மதா தமிழ் அகராதி.

குறிஞ்சி, மலையும் மலை சார்ந்த இடமும் ஆகும். மலையில் வாழக்கூடிய விலங்கு யானை மலைப்பகுதியிலுள்ள தினைப்புனங்களை உணவிற்காக உட்கொள்ள விளைநிலத்திற்கு வரும். அவ்வாறு வரும் யானைகள் பயிர்களை உண்டு சேதப்படுத்தும். இச்செயலில் இருந்து தினைப் புனத்தைக் காக்க கவண் உமிழ் கடுங்கலைப் பயன்படுத்துவர்.

சிலப்பதிகாரத்தில் குழாய்க்குள் ஊற்றிப் புளிக்கவைத்த கள்ளை அருந்திய வேட்டுவன் கவண் கற்களை வீசி விலங்குகளையும் பறவைகளையும் விரட்டி தினைப் புனத்தைக் காக்கும் காவலைக் கைவிட்டான். பெரிய தினைப்புனத்தில் காவல் இல்லாததால் நிறைய உண்ணலாம் என்று வந்த பெரிய யானைகளும் தினையை உண்ணாதவாறு மயங்கித் தூங்குமாறு, குற மகளிர் குறிஞ்சிப் பண்ணை இசையுடன் பாடினர். இதனை,

**“கவண் விடு புடையூஉக் காவல் கைவிட” (சிலம்பு.நீர்ப்படைக்.218)**

என்ற பாடல் விளக்குகிறது. இதிலிருந்து கவண் யானையை விரட்டப் பயன்படுத்தப்படும் கருவி என்பது புலப்படுகிறது.

**நீர் இறைக்கும் கருவி**

குளம், குட்டை, ஏரி, கேணி, கிணறு போன்றவற்றிலிருந்து வயல்களுக்கு நீர் இறைக்க நீர் இறைக்கும் கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவை,

1. ஆம்பி
2. கிழார்
3. ஏற்றம் (பூட்டைப் பொறி)
4. பிழா (இறை கூடை)

என்பனவாகும்.

**ஆம்பி**

ஆம்பி என்பதற்கு "காளான்; பன்றிப்பத்தர்; ஒலி"[22] என மெய்யப்பன் தமிழ் அகராதி விளக்கம் கூறுகிறது.

பன்றிப்பத்தர் என்பது நீர் இறைக்குங் கருவியாகும்.

**கிழார்**

கிழார் என்பதற்கு "வேளாளர் பட்டப்பெயர்; நீர் இறைக்கும் பொறி; தோட்டம்"[23] என்று அகராதி விளக்கம் தருகிறது.

கிழார் என்பதனைப் பூட்டைப்பொறி என்றும் அழைப்பர்.

**ஏற்றம்**

ஏற்றம் என்பதற்கு "மேலே ஏறுகை; மேடு; புகழ்; உயர்ச்சி; மிகுதி; மேன்மை; நினைவு; துணிவு; பெருக்கம்; நீரேற்றம்; நீர்ப்பெருக்கு; ஏற்ற மரம்; நீரிறைக்குங் கருவி"[24] என மெய்யப்பன் தமிழ் அகராதி விளக்கம் உரைக்கிறது.

**பிழா**

பிழா என்பதற்குக் "கொள்கலம்; இறைக் கூடை; தட்டுப்பிடி"[25] என்று மெய்யப்பன் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது.

சிலப்பதிகாரத்தில் கவுந்தியடிகளும், கோவலனும், கண்ணகியும் பூம்புகார் நகரினை விட்டு மதுரை நோக்கி வயல்வெளிகளின் வழியே செல்லும் போது அங்குள்ள உழவர்கள் தங்களின் வயல்களுக்கு நீர் பாய்ச்ச

ஆம்பி, கிழார், ஏற்றம், பிழா ஆகிய நான்கு நீர் இறைக்கும் கருவிகளைக் கொண்டு நீர்ப்பாய்ச்சியதையும், அவற்றால் உண்டாகும் ஒலியினையும் கண்டும் கேட்டும் சென்றனர். இதனை

**"தாம்பியுங் கிழாரும் வீங்கிசை யேத்தமும்**

**ஓங்குநீர்ப் பிழாவு மொலித்தல் செல்லாக்"**

**(சிலம்பு.நாடுகாண்.110-111)**

எனும் பாடலடியின் மூலம் அறியமுடிகின்றது.

**மதகு**

மதகு என்பதற்கு "அணை, ஏரி போன்றவற்றில் தேவையான நீரினைச் சீராக வெளியேற்றுவதற்கு ஏற்றபடித் திறந்து மூடுமாறு அமைக்கப்பட்ட சாதனம்"[26] ஆகும் என்பர். சாதனம் என்பதனைக் கருவி என்றும் கூறுவர்.

மருத நிலத்து மள்ளர்கள் தங்களின் வயல்களுக்கு மதகின் வழியே நீரினைப் பாய்ச்சியதை பெரியபுராணம்,

**"ஒண்து றைத்தலைமாமதகு ஊடுபோய்**

**மண்டு நீர்வய லுள்புக வந்தெதிர்" (பெரிய.60:1-2)**

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

**கரும்புச் சாறு பிழி இயந்திரம்**

பயிர்த் தொழிலில் பணப்பயிர் என அழைக்கப்படுவது கரும்பு. இதிலிருந்து பல்வேறு வகையான உணவுப் பொருட்களை உற்பத்தி செய்ய சாற்றைப் பிழிந்து தனியே எடுக்க இயந்திரத்தைப் பயன்படுத்தியுள்ளனர்.

கம்பராமாயணத்தில் இராம லக்குவர் பற்றி உரைக்கும் போது கரும்பாலைகளால் நிறைந்த ஓசையையுடைய பரந்த கோசலநாட்டிற்குரியவர்கள் என்பதை,

**"ஆலையேய் துழனியக னாடரார் கலியமிழ்து"**

**(கம்ப.கிட்கிந்தா.43:3)**

எனும் பாடலடி விளக்கும். சோழ நாட்டின் வளத்தை சுட்டும் பொழுது ஆலையாடிக் கரும்புச்சாறு நிரம்பிய மிடாவை நீர்க்காக்கைகள் நிரம்பிய

குளங்களென்று மயங்கி அவற்றில் தம் உணவாகிய மீன்களைக் கொத்தித் தின்பதற்காக மூழ்கி, மூழ்கி இரை பெறாது வெளிக்கிளம்பியதளனை,

**"எழுவு பாட லிமிழ்கருப் பேருந்திரத்து**

**ஒழுகு சாற்றகன் கூனையி னூழ்முறை" (கம்ப.கிட்கிந்தா.949:2-3)**

என்ற பாடல் விளக்குகிறது. இதிலிருந்து சோழ நாட்டின் வளம் புலனாகிறது.

உழவர்கள் வெட்டிய கரும்புகளிலிருந்து வடிந்த சாறு கரும்புத் துண்டுகளினிடையே உள்ள தேனடைகளைக் கிழிக்கின்றது. அதிலிருந்து பெருகி வரும் தேன் வெள்ளம் புதிய நீரோடு கலந்து மடைகளை உடைக்கின்றன. உடைபட்ட மடைகளைக் கரும்பஞ்சாறால் செய்யப்பட்ட வெல்லக்கட்டிகளைக் கொண்டு அடைத்ததை,

**"கடைஞர்மிடை வயற்குறைத்த**

**கரும்புகுறை பொழிகொழுஞ்சாறு**

**...**

**உடைமடையக் கரும்படுகட்**

**டியின் அடைப்ப ஊர்கள் தொறும்" (பெரிய.1275)**

என்ற பாடல் உரைக்கிறது. இதிலிருந்து கரும்பில் இருந்து சாறு பிழிந்து அதிலிருந்து வெல்லக்கட்டி தயாரித்ததை அறியமுடிகின்றது.

**தச்சுத் தொழில்**

தச்சுத்தொழிலில் மரத்தினைத் தேர்வு செய்தல் என்பது இன்றியமையாத ஒன்று. "தச்சு வேலை செய்ய முதலில் எந்த வேலைக்கு எத்தகைய மரம் ஏற்றதெனக் கவனித்துத் தேர்ந்தெடுக்க வேண்டும். மரத்தைத் தேர்ந்தெடுக்கும் போது, அதேவகை மரம் எப்போதும் எவ்வளவு வேண்டுமானாலும் கிடைக்குமா என்பதை முதலில் அறிந்து, பின்னர் இலகுவில் வேலை செய்ய ஏற்றதா மரத்தின் நிறம், வேலை முடிந்தபின் இருக்கக்கூடிய தோற்றம், பளு, தகைவு முதலியவற்றையும் காலநிலை மாறுபாட்டைத் தாங்கும் தன்மை முதலிய பல குணங்களையும் மனத்தில் கொள்ள வேண்டும்.

மரம் விளையும் பூமியின் தன்மை. அதை வெட்டிய காலம் முதலிய பல குணங்களையும் பொறுத்து மரத்தின் தன்மை இருக்கும். நன்கு விளைந்து

முதிர்ந்த மரமே வேலைக்கு ஏற்றது. நேர் நேராகவும், சிறிய பெரிய முடிச்சுக்களோ, பழுத்து எதுவுமில்லாமலும் இருக்க வேண்டும். புதிதாக வெட்டிய மரமானால் அது இனிய மணம் வீச வேண்டும். அருவருப்பான கெட்ட மணம் வீசி, மங்கலான வெண்மை நிறத்துடன் இருந்தால் மரம் கெட்டது என அறியலாம். மரத்தின் நிறம் பலகை முழுவதும் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும். அழுத்தமான நிறமுள்ள மரம் வலிமை மிக்கது. நீண்ட காலம் உழைக்கக் கூடியது என அறியலாம். நல்ல மரத்தைத் தட்டினால் கணீரென வெண்கல ஓசை கிளம்பும். கெட்டுப்போன மரத்தைத் தட்டினால் மந்தமான ஓசை கிளம்பும்.

மரத்தை மென்மையானது, கடினமானது என இரு வகைப்படுத்தலாம். மென்மையான வகையில் பெரும்பாலும் கர்ப்பூரத்தைலம் இருக்கும். இதன் நார் நேராக இருக்கும். ஒர் ஒழுங்காக வளரும் மரம் பலகை அறுக்கவோ, நீண்ட மரத்துண்டுகளாக்கி அறுக்கவோ ஏற்றது. இவ்வகை மரத்திலிருக்கும் நாருக்குப் பக்கப்பிடிப்புக் குறைவு. எனவே எளிதில் கிழிக்கவோ பிளக்கவோ முடியும். கடின மரத்தில் கர்ப்பூரத்தைலம் இல்லை. இதன் அமைப்பில் வேறுபாடு இருப்பதால் உலரும் போது வேறு வேறு பகுதிகள் வேறு வேறு அளவுகளில் சுருங்குகின்றன. ஆண்டு வளையங்களும், சோற்று ரேகைகளும் தெளிவாகத் தென்படும். மரங்கள் எளிதில் முறுக்கிக் கொள்கின்றன. ஒரே சீரான அமைப்புள்ள மரங்கள் அவ்வளவு எளிதில் முறுக்கிக் கொள்வதில்லை."[27] என்பர். மேற்கூறிய முறையில் தச்சு வேலைக்கு மரங்களைத் தேர்வு செய்ய வேண்டும்.

தச்சு வேலை செய்ய உளி, இழைப்புளி, அரங்கள், துரப்பணம், ரம்பம், பரப்புத்தட்டு, மூலை மட்டம், காளப்பர், முளைமானி முதலிய பல்வேறு கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன.

**உளி**

உளி, "தச்சுக் கருவிகளுள் ஒன்று"[28] என்று மெய்யப்பன் தமிழகராதி சுட்டுகிறது. இது இரும்பினால் அமையப்பெற்றது. வெட்டவும், சீவவும், செதுக்கவும் பயன்படும் என்பதை, "ஒரே முகம் சாய்வாக

அமைக்கப்பட்டிருக்கும். சாய்வாக இல்லாத முகத்தை மரத்தின் மேல் அழுத்திக்கொண்டு உளியின் தலையில் அடித்து மரத்தைச் செதுக்குகிறார்கள். உளிகளின் அகலம் சாதாரணமாக 1.·.8 அங்குலத்திலிருந்து 2 அங்குலம் வரை இருக்கும்"[29] என்கிறது கலைக்களஞ்சியம்.

சிலப்பதிகாரத்தில், கொல்லன் பாண்டிய நெடுஞ்செழியனிடம் கோவலனைப் பற்றிக் கூறுகையில், தான் கண்ட கள்வன் தன் கையில் நிலத்தினை அகழும் உளியை உடையவனாக இருந்தான் என கூறினான். இதனை,

**"நிலனாக ழுளிய னீலத் தானையன்" (சிலம்பு.கொலைக்.204)**

எனும் பாடலடி சுட்டுகிறது. இதிலிருந்து ஒன்றினை அகழ பயன்படும் கருவி உளி என்பதை அறியமுடிகிறது.

**ஈர்வாள்**

ஈர்வாள் என்பதற்கு "இரம்பம்; மரம் அறுக்கும் வாள்"[30] என்று தமிழ்ச் சொற்றொடர் அகராதி பொருள் கூறுகிறது. சிலப்பதிகாரத்தில் மதுரை அங்காடித் தெருவில் ஈர்வாள் என்கிற இரம்பம் விற்பனைப் பொருளாக இருந்துள்ளமை குறிப்பிடப்பட்டுள்ளதை,

**"வேதினத் துப்பவுங் கோடுகடை தொழிலவும்" (சிலம்பு.ஊர்.176)**

எனும் பாடலடி மூலம் அறியமுடிகிறது.

இரம்பம், "தச்சுவேலைக்கு இன்றியமையாத சாதனங்களில் ஒன்று. இதன் பற்கள் வரிசையாக அமைந்திருக்கும். இப்பற்கள் சிற்றுளிகளைப்போல் இயங்கி, மரத்தில் ஒரு பள்ளத்தை வெட்டி அதை அறுக்கின்றன. இதன் பற்கள் பல வகைகளில் அமைந்திருக்கும். அவற்றிற்கேற்ப இதன் தன்மையும் பயனும் வேறுபடும். இதை அழுத்தும் வகையையும், திருப்பும் வகையையும் ஒட்டி இதன் பற்கள் மரத்தில் பதியும் ஆழம் வேறுபடும். நேராக அறுக்கும் கை ரம்பம் அகலமாகவும் கூம்பு வடிவுள்ளதாகவும் இருக்கும். வளைவான பரப்புக்களை வெட்டப் பயனாகும் ரம்பங்கள் குறுகளாகவும் தடிப்பாகவும் இருக்கும். விரைவாக அறுக்கும் ரம்பம் நீள்சதுரமான வடிவத்தைக்

கொண்டிருக்கும். அதன் மேற்புறத்தில் தகட்டை மடித்து அதை உறுதியாக்க வேண்டும். வில்ரம்பத்தின் (Bow saw) பற்கள் அதைப் பின்னோக்கி இழுக்கும்போது அறுக்குமாறு அமைந்திருக்கும்”[31] என்று இரம்பத்தின் வகைகள் பற்றியும், அவற்றின் தன்மைகள் பற்றியும் கலைக்களஞ்சியம் விளக்குகிறது.

**மட்கலத்தொழில்**

தொடக்ககால மக்கள் ஒரு நிலைத்த இருப்பிடத்தினைக் கொண்டு வாழாமல் இடம்விட்டு இடம் பெயர்ந்து கொண்டே செல்கின்ற நாடோடி வாழ்வினை மேற்கொண்டு வந்தனர். இவ்வாழ்க்கை முறையில் தங்களுக்கு என்று இல்லம் இல்லாது பாறைகளின் இடுக்குகளிலும், குகைகளிலும், மரத்தடியிலும் வாழ்ந்து வந்தனர்.

பின்னர் சிறிது வளர்ச்சியுற்று மண்ணின் தன்மையை அறிந்து மண்ணால் மண் குடில்கள் அமைத்துக் குடும்பங்களாக இருந்து சமூகம் என்ற நிலைத்த அமைப்பில் வாழத் தொடங்கினர். இக்காலகட்டம் வரை உணவுக்காக வேட்டைத் தொழிலை மேற்கொண்டு வந்த மக்கள், பின்னர் உணவுக்காக வேளாண் தொழிலான பயிர்த்தொழிலைச் செய்தனர். வேளாண் தொழிலின் மூலம் கிடைக்கும் விளைச்சலில் தங்களின் நிகழ்காலத் தேவை போக எஞ்சியவைகளை வருங்காலத்திற்குச் சேமித்து வைக்கும் பழக்கத்தைக் கைக்கொண்டனர். விளைபொருட்களைச் சேமித்து வைப்பதற்கு ஆரம்பக் காலகட்டத்தில் துணிகளையும், துணிகளால் செய்யப்பட்ட பைகளையும், விலங்ககளின் தோலையும், தோலால் செய்யப்பட்டவைகளையும் பயன்படுத்தினர்.

நாகரிக வளர்ச்சியின் காரணமாக மண்ணையும், சக்கரத்தையும் பயன்படுத்திச் சுடுமண்கலங்கள் செய்து பயன்படுத்தியுள்ளனர். சுடுமண்கலங்கள் செய்யும் தொழிலை மண்கலத்தொழில் என்று அழைத்துள்ளனர். இத்தொழிலைச் செய்வோர்கள் குயவர்கள் என்று பின்னாள் அழைக்கப்பட்டனர். குயவர்கள் தம் குல மரபின்படி மண்கலங்களை

உருவாக்கி, அதனை விற்பனை செய்து அதன் மூலம் கிடைக்கக்கூடிய வருவாயைக் கொண்டு வாழ்க்கை நடத்தி வந்துள்ளனர் என்பதை,

**“அளவிலா மரபின் வாழ்க்கை**

**மண்கலம் அழுதுக்கு ஆக்கி” (பெரிய.362:1)**

எனும் பாடலடியின் மூலமாக அறிய முடிகின்றது.

**சக்கரம்**

சக்கரம் கண்டுபிடிக்கப்பட்டதை நாகரிகத்தின் தொடக்கம் என்பர். குயவர்கள் மட்கலத்தொழிச் செய்ய சக்கரத்தினைப் பயன்படுத்தியுள்ளனர். கம்பராமாயணத்தில் இடையில் நிற்காமலும், வழியை விட்டு விலகாமலும் குதிரைகள் மண்டலமாக ஓடுவதற்கு, குயவனால் வேகமாகச் சுழற்றிவிடப்பட்ட மண்கலம் செய்யும் கருவியான சக்கரம் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**“மட்கலத் திகிரி போலே வாளியின் வருவ மேலோர்”**

**(கம்ப.பால.575:2)**

எனும் பாடலின் வாயிலாக அறியமுடிகிறது.

கம்பராமாயணத்தில் வாலியும் சுக்ரீவனும் ஒருவரை ஒருவர் எதிர்த்துப் போர் செய்ய நெருங்கி நின்று நெடுநேரம் வலமுறை, இடமுறையாகச் சுற்றித் திரிந்தார்கள். அதனால் நிலவுலகம் சுழலலாயிற்று. இதற்கு உவமையாகக் குயவனால் சுற்றிவிட்ட மண்பாண்டத்தை வனையும் சக்கரம் கூறப்பட்டு உள்ளது. இதனை,

**“வன்றோட் குயவன் திணிமட்கலத் தாழி யென்ன”**

**(கம்ப.கிட்கிந்த.282:4)**

என்ற பாடலின் மூலம் அறிய முடிகிறது.

கம்பராமாயணத்தில் கவந்தனின் மூக்கின் துவாரத்திற்குக் கருமானுடைய உலைக் களத்திலேயுள்ள துருத்தியானது உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“தொகைக்கனற் கருமகன் றுருத்தித் தூம்பெனப்**

**பகைக்கொடி கனலொடு பொடிக்கு மூக்கினான்”**

**(கம்ப.ஆரணிய.1151:1-2)**

எனும் பாடலடிகள் விளக்குகின்றன.

### கொல்லுத் தொழில்

பண்டைத் தமிழரின் இரு கண்களாக அமைந்தவை காதலும் வீரமும். வீரத்தினைக் காட்ட பல்வேறு போர்க்கருவிகள் தேவைப்பட்டன. கொல்லர் இரும்பின் தன்மையைக் கொண்டு, பல கருவிகளை உருவாக்கினார். உழவர், தச்சர் போன்ற தொழில்களைச் செய்வோருக்கும், அவர்கள் தொழில்களுக்கும் ஏற்றார் போல் தொழிற் கருவிகளை வடித்துக் கொடுத்தனர். இத்தொழில் பயன்பட்ட தொழிற் கருவிகள் குறித்துக் காப்பியங்கள்,

- அரம்,
- சம்மட்டி
- உலை
- துருத்தி
- குழிசி
- வாளரம்

என்று பகர்கின்றன.

### அரம்

அரம் "பொருட்களை அராவ மிகப்பரவலாகப் பயன்படும் ஒரு தொழிற்கருவி வகையே அரம். உலோகப் பரப்புகளையும் மற்ற கடினமான பரப்புகளையும் அராவி மழுமழுப்பாக்க இது பயன்படுகிறது. இது தேவைக்கேற்றவாறு பல வடிவங்களிலும் அளவுகளிலும் வடிவமைக்கப்படுகிறது. பொதுவாக 2.0 செ.மீ நீளமுள்ள சிறிய அளவிலிருந்து 1 மீட்டர் நீளமுள்ள பெரிய அளவு வரை அரங்கள் பல நீளங்களில் செய்யப்படுகின்றன. பற்களின் வடிவமைப்பையொட்டி அரம் நான்கு வகைகளாகப் பிரிக்கப்படுகிறது. அவை ஒற்றை வெட்டு அரம், இரட்டை வெட்டு அரம், அராவி, வளை வெட்டு அரம்"[32] என்பனவாகும்.

பண்மைடத் தமிழர்கள் உலோகங்களை அராவுதலுக்கு அரத்தைப் பயன்படுத்தியுள்ளனர். அரவும் கருவியாகப் பயன்படுவதால் இதற்கு இப்பெயர் கூறப்படுகிறது. இரும்பினை அரத்தைக் கொண்டு அராவியுள்ளனர் என்பதை,

**“கடுமொழியும் கைஇகந்த தண்டமும் வேந்தன்**

**அடுமுரண் தேய்க்கும் அரம்”**[33]

என்ற குறட்பாவின் மூலம் அறியப்படுகின்றது. மேலும் அறமானது கூர்மையான தன்மையைக் கொண்டிருக்கும் என்பதனை,

**“அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்**

**மக்கட்பண்பு இல்லா தவர்”**[34]

என்ற குறட்பா விளக்கும். இதேபோல் கம்பராமாயணத்தில் போர்க் கருவிகளில் ஒன்றான வேலினைக் கூர்மை செய்ய அரத்தினைக் கொண்டு அராவியுள்ளனர். இதனை,

**“அவ்வரம் பொருதவே லரச னாய்கிலாது” (கம்ப.அயோத்தி.465:3)**

எனும் பாடலடி மூலம் அறியமுடிகிறது.

**உலை**

உலை என்பது கொல்லனது உலைக்கலத்தில் பயன்படுத்திய அடுப்பு. இரும்பின் கடினத் தன்மையை இலகுவடையச் செய்து தேவைக்கு ஏற்ற வடிவில் இரும்பினை வளைத்துக் கருவிகள் செய்வதற்குப் பயன்படுத்தப்பட்டது. உலை, இரும்பினைக் காய்ச்சுவதற்கு பயன்படுத்தப்பட்டது என்பதனை,

**“காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையும்”**

**(சிலம்பு.அடைக்கல.210)**

எனும் பாடலடி விளக்குகிறது.

பரதனுக்குப் பட்டம் சூட்டவும், இராமனைக் காட்டிற்கு அனுப்பவும் கைகேயி இரண்டு வரம் கேட்டதும் தசரதன் மனம் வருந்தி வெப்பத்துடன் விட்ட பெருமூச்சுக்கு எரிகின்ற கொல்லனது உலையிலிருந்து துள்ளிவரும் நெருப்புப் பொறி உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**"சுழிக்குங் கொல்ல னுதுலையில்**

**துள்ளும் பொறியிற் சுடு மன்னோ" (கம்ப.யுத்த.5:3-4)**

எனும் பாடலடியின் மூலம் அறிய முடிகின்றது.

**துருத்தி**

துருத்தி என்பதற்கு "ஆற்றிடைக் குறை; வீசி ஆடும் சூதாட்டம்; தோல்பை; நீர் வீசும் கருவி; இசைக்கருவி வகை; நெருப்பினை ஊதி எரிந்திட உதவும் தோல் அல்லது ரப்பரால் ஆன கருவி"[35] என நர்மதா தமிழ் அகராதி விளக்கம் தருகிறது.

**துருத்தி உவமையாகப் பயன்படல்**

மதுரை நகருள் சென்று காற்சிலம்பை விற்றுவருவதாய்ச் சென்ற என் தலைவனைக் காணோம். ஆதலால் என் உள்ளம் கலங்குகின்றது. துன்பம் கட்டுக்கடங்காததாகத் துருத்திமுனை நெருப்பின் வெம்மையும் தோற்குமாறு என் நெஞ்சம் அழல் ஏழ உயர்கின்றது என கண்ணகி புலம்புயதை,

**"காதலற் காண்கிலேன் கலங்கிநோய் கைம்மிகும்**

**ஊதுலை தோற்க வுயிர்க்குமென் னெஞ்சன்றே"**

**(சிலம்பு.துன்பமா.12-13)**

எனும் பாடலடிகள் மூலம் அறிய இயலும்.

மதுரையில் கணவனை இழந்து ஆறா துயரோடு உள்ளம் கொதித்து உலைக்கலத்துத் துருத்தி முனையின் செந்தீ போல சுடுமூச்செரிந்தாள் கண்ணகி. இதனை,

**"காதலற் கெடுத்த நோயொ டுளங்கனன்**

**றூதுலைக் குருகி னுயிர்த்தன ளுயிர்த்து"**

**(சிலம்பு.அழற்படு.151-152)**

எனும் பாடலடி உரைக்கிறது.

கண்ணகி தன்னுடன் காட்டு வழியில் நடந்து வந்துபடும் துயரினை எண்ணி ஊது உலைத் துருத்தியின் செந்தீ போல கோவலன் பெரு மூச்சு விட்டதை,

**“காதலி தன்னொடு கானகம் போந்ததற்**

**கூதுலைக் குருகி னுயிர்த்தனன் கலங்கி” (சிலம்பு.புறஞ்சேரி.44-45)**

எனும் அடிகள் கூறுகின்றன.

கணவனைப் பிரிந்த பெண்கள் காண்பவர் வருந்த, மனம் வெதும்பிப் பெருமூச்சு விடும் செயலுக்கு உலையில் காற்றூதும் துருத்தியின் நுனியில் எரியும் நெருப்புச்சுடர்க்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளதை,

**“காதலர்ப் பிரிந்த மாதர் நோதக**

**ஊதுலைக் குருகி னுயர்த்தன ரொடுங்கி”**

**(சிலம்பு.அந்திமாலை.58-59)**

எனம் பாடலடி விளக்கும்.

காதலரைப் பிரிந்த துயரத்தில் பெண்கள் விடும் பெருமூச்சுக்கு உவமையாக கொல்லன் உலைக்கலத்தில் கொழுந்து விட்டு எரிகின்ற நெருப்பினையுடைய ஊதுகின்ற துருத்தி முனையிலே தோன்றுகின்ற அனலுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**“காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி**

**ஊதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா”**

**(மணிமே.ஊரலருரை.42-43)**

எனும் பாடலடிகள் விளக்குகின்றது.

**குழிசி**

குழிசிக்குப் பானை என்றும் மிடா என்றும் பெயருண்டு. கொல்லன் தங்களின் உலைக்கலத்தில் செம்பை உருக்குவதற்குக் குழிசியைப் பயன்படுத்தியுள்ளதை,

**“பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும்” (சிலம்பு.அடைக்கலக.209)**

எனும் பாடலடி விளக்கும்.

**வாளரம்**

வாளரத்தினைக் கொண்டு வேலினை அராவி கூர்மையாக்கியுள்ளனர். இதனை,

**“வாளரம் பொருத வேலும் மன்மதன் சிலையும் வண்டின்”**

(கம்ப.பால.576:1)

எனும் பாவடியின் வாயிலாக அறியமுடிகிறது.

**சம்மட்டி**

சம்மட்டி என்பது “கனமான இரும்புக் கட்டியில் மரக்கைப்பிடி செருகப்பட்ட பெரிய சுத்தியல்”[36] என்று பொருளுரைக்கிறது நர்மதா தமிழ் அகராதி. கொல்லனுக்கு உலைக்கலத் தொழிற்கருவி சம்மட்டியாகும். சம்மட்டி, மத்திகை என்ற பெயர் கொண்டும் அழைக்கப்படுகிறது.

யானையின் தந்தங்களில் போடப்பட்டிருக்கும் ‘கிம்புரி’ என்னும் கருவியைப் போர் முடிந்த பிறகு, கொல்லனின் உலைக்கலத்தில் அதனைக் கழற்றி, இரும்பாலான சம்மட்டியால் அடித்து சரி செய்ததை,

**“பெருங்கை யானைக் கொடுந்தொடி படுக்கும்**
**கருங்கைக் கொல்லன் இரும்பு விசைத்து எறிந்த**
**கூடத் திண்இசை வெரீஇ, மாடத்து”**[37]

என்னும் பெரும்பாணாற்றுப் பாடலடிகள் உணர்த்துகின்றன.

கம்பராமாயணத்தில் சீதையின் காமவெப்பத்தைக் கூறுகையில் வெண்மையான சந்திரனது கிரகணமாகிய கதிர்கள் சீதையின் மெல்முலையின் மேல் படுதலால் அடிக்கும் தன்மை உடைய சம்மட்டி அடித்தது போல் படுக்கையில் விழுந்து புரண்டாள். இதனை,

**“மீது மொய்த்தெழு வெண்ணில வின்கதிர்**
**மோது மத்திகை மென்முலை மேற்பட”** (கம்ப.பால.640:1-2)

எனும் பாடல் தெளிவுபடுத்துகிறது. இதிலிருந்து சம்மட்டிக்கு, மத்திகை என்ற பெயர் உண்டு என்று அறியமுடிகிறது.

**சம்மட்டி உவமையாகப் பயன்படல்**

வாலியின் தோள்களுக்கும் சுக்கிரீவனது மார்புக்கும் உவமையாக இரும்பும், சுக்கிரீவன் வாலி என்னும் இவ்விருவரது கைகளுக்கு இரும்பையடிக்குஞ் சம்மட்டியென்னுங் கொல்லன் கருவியும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**"வெந்த வல்லிரும் பிடைநெடுங் கூட்டங்கள் வீழ்ப்பச்**
**...**
**சந்த வன்னெடுந் தடக்கைகள் தாக்கலிற் றகர்வ"**
**(கம்ப.கிட்கிந்த.290)**

எனும் பாடல் சுட்டுகின்றது.

**அணிகலத் தொழில்**

பண்டைக் காலம் தொட்டு இன்று வரை மாந்தர்கள் அதிக அளவில் அணிகலன்களைப் பயன்படுத்தி வந்துள்ளனர். "சிறப்பாகத் தமிழ்நாட்டு மக்கள் பலவிதமான நகைகளை அதிகமாக அணிந்தனர். அக்காலத்திலே ஆண்களும் பெண்களும் ஆடைகளைக் குறைவாகவும். நகைகளை அதிகமாகவும் அணிந்தார்கள். நகைகளை எவ்வளவு அதிகமாக அணிகிறார்களோ அவ்வளவு நாகரிகமும் செல்வமும் உள்ளவர்கள் என்று மதிக்கப்பட்டார்கள்"[38] என்கிறார் மயிலை சீனி.வேங்கடசாமி. அணிகலன்கள் அணியும் முறையாக, "அணிகள் உடலை ஒட்டியவாறும், உடலின் மேடு பள்ளங்கள் துலங்குமாறும், உடல் திரட்சிக்கு ஏற்றவாறும், வடிவத்தோடு இசைந்தவாறும் அமைதல் வேண்டும். சுருங்கக் கூறின் உடற்கட்டுக் கோப்பினை இவ்வணிகள் சிறப்பித்துக் காட்டுதல் வேண்டும். அணிகள் இயல்பாகத் தொங்கும்போது அவை கொள்ளும் இயல்பான அமைதியினை நன்குணர்ந்து அவற்றை வலியுறுத்தியும் வடிவத்திற்கு அழகூட்டுமாறும் வலியுறுத்தியும் வடிவத்திற்கு அழகூட்டுமாறும் அமைதல் வேண்டும்."[39] என்கிறார் வை.கணபதி.

மாந்தர்கள் உச்சந்தலையில் இருந்து உள்ளங்கால் வரை அணிகலன்களை அணிந்துள்ளனர். தலை அணிகளாகத் தொய்யகம், புல்லகம், சூளாமணி ஆகியவையும் காதணிகளாக குதம்பை, கடிப்பு, குழை ஆகியவையும், கழுத்தில் கண்டிகை, சவடி, சரப்பளி, புலிப்பல் தாலி, அரும்புச்சரம், மணியாரம், முத்தாரம், வீரச்சங்கிலி, பின்தாலி ஆகியவையும், மார்பணிகளாக பூணூல், உரஸ்சூத்திரம், உத்தரீயம், உதரபந்தம் ஆகியவையும், கை அணிகளாக தோள் மாலை, தோள்வளை, கடக வளை, கைவளை ஆகியவையும், இடை அணிகளாக மேகலை, அரைஞான்,

வீரக்கழல், பாடகம் ஆகியவையும், பாத அணிகளாக சிலம்பு, அரியகம், காற்சதங்கை ஆகியவையும், விரல் அணிகளாக மிஞ்சி, பீலி, காலாழி, மகரவாய் ஆகியவையும் அணிந்து தங்களை அழகுபடுத்திக் கொண்டனர்.

**வாளரம்**

சங்கு வளையல் செய்யும் முறையாக, "வளையல்களை அறுப்பதற்கு முன்னர் முதலில் சங்கின் உச்சிப்பகுதியை உடைத்து, திருகுச்சுருளையும் உடைத்தெடுப்பர். இதற்கு கல் அல்லது உலோகத்தால் ஆன சுத்தியல் கொண்டு சங்கின் உச்சிப்பகுதியை உடைத்துப் பின்னர் உலோகக் குத்துக் கோடாரி (சுத்தியல் மற்றும் தமரூசி அல்லது துளையிடும் கருவி) கொண்டு உட்சுவர் தடுப்புகளை அகற்றுவர். அவ்வாறு குடைந்தெடுக்கப்பட்ட சங்கைச் சாய்வாக வளைந்த ரம்பம் கொண்டு அறுத்து வளையங்களைப் பிரித்தெடுப்பர். பின்னர் வளையத்தின் உட்பகுதியில் துருத்திக் கொண்டிருக்கும் பகுதியை வெட்டியெடுத்தவுடன் அவ்வளையங்கள் தேய்க்கப்பட்டு, அவற்றைத் தேவையான குறுக்களவிற்கு மாற்றுவர். இதன் உட்பகுதி ஒழுங்கற்றுச் சொரசொரப்பாகக் காணப்படும். உருளையான மணற்கல் அல்லது வேறு மணற்பொருள் கொண்டு செய்த உருளையை வளையத்தினுள் செலுத்தி உட்புறம் சீராக்குவர். வெளிப்புறம் மணற்பாறைகளில் தேய்க்கப்பட்டு இருக்கலாம். இதன் பின்னர் வளையலின் மேற்புறத்தில் வரிவடிவங்களை இடுவர்."[40] என்று ந.அதியமான் குறிப்பிடுகிறார்.

அரம் கொண்டு சங்கை அறுத்து வளையல் செய்ததை,

**"கடற்கோடறுத்த அரம்போ ழவ்வளை"[41]**

எனும் ஐங்குறுநூற்று பாடலடி மூலம் அறியமுடிகின்றது.

வாளரம் எனும் கருவியைப் பயன்படுத்திச் சங்குகளை அறுத்துக் காதணிகள், வளையல்கள் போன்ற அலங்காரப் பொருட்களைச் செய்து, அதனைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை,

**"விலங்கரம் பொரூஉம் வெல்வளை போழ்நரோ"**

**(மணிமே.கச்சிமாநகர்.44)**

என்ற பாடலடி மூலம் அறிய முடிகின்றது.

**உரைகல்**

உரைகல் என்பதற்குப் "பொன், வெள்ளி முதலியவற்றின் மாற்று அறிய உரைக்கும் கல்"[42] என்கிறது தமிழ் லெக்சிகன். பொன் வியாபாரம் செய்யும் ஆசாரி பொன்னை மதிப்பீடு செய்யப் பயன்படுத்திய கருவி உறைகல். இதனை சங்க இலக்கிய நூல்களில் ஒன்றான பெரும்பாணாற்றுப்படையில்,

**"பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின்"**[43]

எனும் பாடலடி சுட்டுகின்றது. இதேபோல் மணிமேகலையில், உரைகல்லில் பொன்னை உரைத்துச் சோதனை செய்துள்ளனர். இதனை,

**"பொன்னுரை காண்போர் நன்மனை மறுகும்" (மணி.கச்சிமா.54)**

என்ற பாவடியின் மூலம் விளங்க முடிகிறது.

**நிலஞ்சார் தொழில்ககள்**

தொல்காப்பியர் ஐவகை நிலங்கள் குறித்து,

**"அவற்றுள்**
**நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்**
**படுதிரை வையம் பாத்திய பண்பே"**[44]

எனும் நூற்பாவில் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்ற ஐந்து திணைகளுள் நடுவிலிருக்கக்கூடிய பாலை நீங்கக் கூறியுள்ளார். குறவர்கள் மலையில் வாழக்கூடிய மக்கள். தேனெடுத்தல், கிழங்குகளை அகழ்ந்தெடுத்தல், தினைப்புனங்காத்தல் ஆகியவற்றைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். மருதநிலத்து மள்ளர்கள் வயல்வெளிகளில் வேளாண் தொழில் செய்து வாழ்ந்துள்ளனர். நெய்தல் நில மக்களான பரதவர்கள் கடலுக்குச் சென்று மீன், நண்டு பிடித்தல், முத்து எடுத்தல், உப்பு விளைவித்தல் போன்ற தொழில்களை மேற்கொண்டுள்ளனர். பாலைநில மக்களான கள்வர்கள் வழிப்பறி செய்து வாழ்வு நடத்தி வந்துள்ளனர்.

சங்க காலம் முதல் இன்று வரை மக்கள் தாங்கள் வாழக்கூடிய பகுதிகளுக்கு ஏற்றாற்போல் அமையக்கூடிய தொழில்களைத் தலையாய தொழிலாகச் செய்துள்ளனர். காப்பியங்களில் நிலஞ்சார் தொழிலாக

வேட்டையாடுதல், மீன்வேட்டம், வேளாண்மை, மரம்வெட்டுதல் போன்றவை விளங்குகின்றன.

**வலை**

பரதவர்கள் மீன் பிடிக்க நுண்ணியதாகப் பின்னப்பட்ட வலையைப் பயன்படுத்தியதை,

**"நுண்வலைப் பரதவர்"**[45]

எனும் பாடலடி சுட்டுகிறது.

மீன்பிடித்துத் தங்களின் வாழ்வினை நடத்தும் பரதவர்கள் வலையினைப் பயன்படுத்தி மீன் பிடித்துள்ளனர். இதனை,

**"விலங்குவலைப் பரதவர் மீன்றிமில் விளக்கமும்"**

**(சிலம்பு.கடலாடு.142)**

எனும் அடியின் மூலம் அறியமுடிகிறது. மேலும் வலையைப் பயன்படுத்தி மீன் பிடித்து வந்த பின்னர் அவ்வலையை மீண்டும் நன்முறையில் பயன்படுத்த முற்றத்தில் உலரவைத்துள்ளனர். இதனை,

**"வலைவாழ்நர் சேரி வலையுணங்கு முன்றில் மலர்கை யேந்தி"**

**(சிலம்பு.கானல்வரி.10)**

எனும் அடியும் குறிப்பிடுகின்றது.

மீன் பிடிக்கும் தொழிலிலைக் கொண்ட பரதவர்கள், தங்களின் தொழிற்கருவியான வலையைத் தாங்களே பின்னியுள்ளனர் என்பதனை,

**"தூய வெண்துறைப் பரதவர்**

**தொடுப்பன வலைகள்" (பெரிய.1116:1)**

எனும் பாடலடி விளக்குகிறது.

**சுருக்குவலை**

உதயகுமாரனிடம் சித்திரபதி பரத்தையரின் இயல்பைக் கூறுகையில் கெண்டை மீனைப் போன்ற நெடுங்கண்களினாலே ஆடவர்களைச் சுருக்கிட்டுத் தம் வலையினுள்ளே வீழச்செய்ய வேண்டும். அதற்கு மாறுபட்டுச் செல்லும் மணிமேகலையை, அவளின் பொருந்தாப் பொய்யுரைகளை அடக்கி மீண்டும்

அந்நெறியில் செல்லுமாறு கட்டுப்பாடு செய்தலே இளவரசனுக்குரிய அரச நெறி என்றாள். இதனை,

**"செருக்கய னெடுங்கட் சுருக்குவலைப் படுத்துக்**
**...**
**கோன்முறை யன்றோ குமரற் கென்றலும்"**
**(மணிமே.உதயகுமரன்.106:111)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இதிலிருந்து சுருக்கு வலையானது அகப்படுத்திக் கொள்ளும் தன்மையைக் கொண்டது என்பதை அறியமுடிகிறது.

**வேட்டையாடுதல்**

பழங்காலத்து மக்கள் நாடோடி வாழ்க்கையில் பாதுகாப்பான இருப்பிடம் இன்றி வாழ்ந்து கொண்டிருந்த போது, இயற்கையில் மனிதனைவிட வலிமை வாய்ந்த உருவில் பெரிதான விலங்குகளிடம் இருந்து தங்களைத் தற்காத்துக் கொள்வதற்காக விலங்குகளுடன் போரிட்டுள்ளனர். பின்னர் இறந்த விலங்குகளின் இறைச்சியை உணவாக உட்கொண்டு உயிர்வாழ்ந்துள்ளனர். இப்பழக்கத்தால் உணவுக்காகவே விலங்ககளை வேட்டையாடும் பழக்கம் உருவாகியுள்ளது. விலங்குகளை வேட்டையாடி அதன் இறைச்சியை உணவாக உட்கொள்ளும் பழக்கவழக்கமானது இன்றும் நாட்டுப்புறங்களில் உள்ளது.

விலங்குகளை வேட்டையாடுவதற்கு மனிதர்கள் தங்களின் கைகள் மட்டும் போதாது என்பதை உணர்ந்து கருவிகளைப் பயன்படுத்தியுள்ளான். ஆரம்ப காலகட்டத்தில் கற்களால் செய்யப்பட்ட ஆயுதங்களைக் கொண்டு வேட்டையாடியுள்ளனர். பின்பு எலும்புகளின் கடினத்தன்மையை உணர்ந்து இறந்த பெரிய பெரிய விலங்குகளின் கொம்புகளை அராவி கூர்மைப்படுத்தி வேட்டைக்கருவிகளாகப் பயன்படுத்தியுள்ளனர். நாகரிக வளர்ச்சியால் உலோகங்கள் கண்டறியப்பட்டது. உலோகங்களின் தன்மையை உணர்ந்த கொல்லர்கள் வில், வேல் போன்ற தொழிற்கருவிகளை உருவாக்கியுள்ளனர். இக்கருவிகளைக் கொண்டு வேட்டையாடி தங்களின் வாழ்வினைச் செவ்வன் வாழ்ந்துள்ளனர்.

கம்பராமாயணத்தில் இராமன் தனது வில், அம்பினைக் கொண்டு மான் வேட்டையாடியதனை,

**“செக்கரர் மேனிப் பகழி செலுத்தினான்” (கம்ப.ஆரணி.805:3)**

எனும் பாடலின் மூலமாக அறியமுடிகின்றது.

**வில், அம்பு**

பண்டைத் தமிழர்கள் போருக்கு மட்டுமின்றி வேட்டையாடுதலுக்கும் அம்பினைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

**“கான முயல்எய்த அம்பினில் யானை**
**பிழைத்தவேல் எந்தல் இனிது”**[46]

என்ற குறட்பாவின் மூலமாகக் காட்டில் முயலை வேட்டையாடுவதற்கு அம்பினைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை அறியப்படுகின்றது.

வேட்டைத் தொழிலினைக் கொண்ட வேடர்கள் வில், அம்பைக் கொண்டு மானை வேட்டையாடியுள்ளனர். இதனை,

**“கொலைநவில் வேட்டுவர் கொடுமா மஞ்சி**
**வலையிடைப் பட்ட மானே போன்றாங்” (மணி.ஆபுத்.31-32)**

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

வேட்டைக்குச் செல்லும் வேடர்கள் வில், வலை கொண்டு வேட்டையாடியதை,

**“போர்வலைச் சிலைத்தொழில்**
**புறத்திலே விளைப்பஅச்” (பெரிய.719:1)**

எனும் பாடல் உணர்த்துகின்றது.

வில் அம்பினைக் கொண்டு வேடர்கள் பன்றியினை வேட்டையாடியுள்ளதை,

**“வெங்கணைபடு பிடர்கிழிபட**
**விசைஉருவிய கயவாய்**
**செய்கனல்விட அதனொடுகணை**
**செறிய முன்இரு கருமா” (பெரிய.729:1-2)**

இப்பாடல்கள் விளக்குகிறது. வில்லினையும் அம்பினையும் கொண்டு மானை வேட்டையாடியுள்ளதைப் பெரியபுராணம் 730 ஆவது பாடல் விளக்குகிறது.

**உடைவாள்**

வேடர்களின் தலைவனான திண்ணன் உடைவாளினைக் கொண்டு பன்றியைக் குத்திக் கொன்று வேட்டையாடியுள்ளான். இதனைப் பெரியபுராணம் 740, 741 ஆகிய பாடல்கள் விளக்கும். இதிலிருந்து போர் வீரர்கள் போல் வேடர்களும் உடைவாளினைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**வலை**

வலையினை விரித்து மானை வேட்டையாடியுள்ளதை,

> **“கொலைநவில் வேட்டுவர் கொடுமா மஞ்சி**
> **வலையிடைப் பட்ட மானே போன்றாங்” (மணி.ஆபுத்.31-32)**

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

உதயகுமாரன் வெட்டுண்டதும் மணிமேகலையின் உள்ளத்தில் பழையபாசம் பொங்கி எழுந்தது. அவன் மறனத்திற்குத் தானே காரணமாகிவிட்ட தன்மையினால் வருந்திப் புலம்பத் தொடங்கினாள். அவளைத் தெளிவிக்க எண்ணிய கந்திற்பாவை அந்த நினைவை அகற்றி, அவள் உயர்கதிக்குச் செல்லும் தகுதியினள் என்பதை உணர்த்துகிறாள். பின்னர் தான் வீடுபெறும் எல்லையை அறிந்து வலையிலிருந்து விடுபட்ட மயிலைப்போல மயக்கம் தெளிந்தாள். இதனை,

> **“வலையொழி மஞ்ஞையின் மனமயக் கொழிதலும்**
> **உலகுதுயி லெழுப்பினள் மலர்கதி ரோனென்”**
> **(மணி.கந்திற்.189-190)**

எனும் பாடலடிகள் விளக்குகின்றன. இதிலிருந்து வலை விரித்து மயிலினை வேட்டையாடியுள்ளனர் என்பது பெறப்படுகிறது.

**தூண்டில்**

தூண்டில் என்பது, “மீன் பிடிக்கும் ஒரு கருவி”[47] என்று மெய்யப்பன் தமிழகராதியும், “தக்கை இணைக்கப்பட்ட உறுதியான நரம்பு அல்லது

இழையின் நுனியில் கொக்கி போன்ற இரும்பு முள்ளினை உடைய நீளமான கோல்"[48] என்று நர்மதா தமிழகராதியும், "கவை/கொக்கி போன்று அமைப்புடைய இரும்பு முள்ளில் நரம்பினை இணைத்து அதன் இடையில் நெட்டித்தக்கை பொருத்தப்படுகிறது. இவ்வாறு தயார் செய்யப்பட்ட நரம்பு பலமான மூங்கில் குச்சியின் நுனியில் கட்டப்படுகிறது."[49] என்று சா.சுந்தரபாலுவும் விளக்கம் தருகின்றனர். பண்டைக் காலத்திலிருந்தே தமிழர்கள் குளம், குட்டை, நீர்த்தேக்கங்கள் போன்ற இடங்களில் மீனைப் பிடிப்பதற்குத் தூண்டிலினைப் பயன்படுத்தியுள்ளனர்.

சிலப்பதிகாரத்தில் மதில் போர் கருவிகள் பற்றி,

**"தூண்டிலுந் தொடக்கு மாண்டலை யடுப்பும்"**

**(சிலம்பு.அடைக்கலக்.211)**

எனும் பாடலடியில் தூண்டில் வடிவில் அமைக்கப்பட்ட மதிற்போக்கருவி என்று குறிப்பிட்டுள்ளார் இளங்கோவடிகள். இதிலிருந்து பண்டைத் தமிழர்கள் தூண்டிலினைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**கோடரி**

கோடரியைக், கோடாரி, கோடாலி என்றும் கூறுவதுண்டு. காடும் காடு சார்ந்த பகுதிகளில் வாழும் இடையர்கள் பயன்படுத்தும் கருவியாகும். இதன் அமைப்பை, "இரு கூரிய முகங்களையும் கொண்டது. ஒரே முகமுடைய கோடரியும் உண்டு. இதைவிட மிகக்கூரான விளிம்புகள் உள்ள 'வாய்ச்சி' என்னும் கருவி மரத்தைச் செதுக்கப் பயனாகிறது. இவ்விரு கருவிகளும், ஆப்பின் பிளக்கும் திறனையும், சுத்தியலின் தாக்கும் திறனையும் ஒருங்கே கொண்டவை. அவற்றைச் சரியானவாறு பயன்படுத்த நல்ல தேர்ச்சி இருக்க வேண்டும்."[50] என்கிறது கலைக் களஞ்சியம்.

முல்லை நிலத்தில் வாழும் இடையர்கள் கோடாரியைக் கையில் கொண்டிருப்பதன் மூலன் கையில் தழும்பேரியிருந்ததை,

**"தொடுதோல் மரீஇய வடு ஆழ் நோன்அடி**

**விழுத்தண்டு ஊன்றிய மழுத்தின் வன்கை"[51]**

என்னும் பெரும்பாணாற்று பாடலடி விளக்குகிறது.

இடையர்கள் ஆநிரை மேய்த்தலைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். ஆநிரைகளுக்கு மரத்தின் இலைகளை வெட்டி உணவாகக் கொடுப்பதற்குக் கோடரியை பயன்படுத்தியுள்ளனர். இதனை,

**“கன்றுதே ராவின் கனைகுர லியம்ப**

**மறித்தோ ணவியத் துறிக்கா வாள்ரொடு”**

**(சிலம்பு.அடைக்கலக்.204-205)**

எனும் பாடலடிகள் விளக்குகின்றன.

**பிற தொழிற் கருவிகள்**

**எழுதுகோல்**

எழுதுகோல் உருவான முறை பற்றி, “இந்தியாவில் பண்டைக் காலத்தில் ஓலைகளில் எழுத்தாணியால் எழுதினார்கள். பண்டைய ரோமானியர் பலகை மீது மென்மையான மெழுகைப் பூசி அதன் மீது எலும்பு, தந்தம் அல்லது உலோகத்தாலான கூர்மையான கருவியால் (Stylus) எழுதினார்கள். பின்னர் பப்பைரஸ் (Papyrus) என்ற ஒருவகை நீர்த்தாவரத்தினால் ஆன தாளை எழுதுவதற்குப் பயன்படுத்தினார்கள். நாணலைக் கூர்மையாகச் சீவி முனையில் பிளவு செய்து மையில் தோய்த்து அதில் எழுதினார்கள்.

காகிதம் தயாரிக்கப்பட்டதும், அதில் எழுத இறகுகளைப் பேனாவாகப் பயன்படுத்தினர். 1980-இல் இங்கிலாந்தைச் சோந்த சாமுவேல் ஹாரிசன் என்பவர் எ∴குப் பேனாவை உருவாக்கினார். அதன் நுனியில் பேனாமுள் குழாய் செய்து, (Nib) போன்று அரத்தினால் அராவி, அவர் இப்பேனாவைச் செய்தார். பிராமா என்பவர் 1809-ல் இறகைப் பேனா முள் போலத் தனியாக வெட்டிக் கைப்பிடியில் (Holder) செருகிவைத்து எழுதும் பேனாவைத் தயாரித்தார். இறகுமுள் விரைவில் தேய்ந்துவிடாமல் நீண்டநாள் உழைக்குமாறு முனையில் தங்கம் வைத்த முள்ளை 1818-இல் சார்லஸ்வாட் என்பவர் பயன்படுத்தினார். பின்னர் ஜான்ஹாக்கின்ஸ் என்ற ஆங்கிலேயர் கொம்பினாலும், ஆமை ஓட்டினாலும் முள் செய்து, அதன் முனையில் வைரம், தங்கம், இரிடியம் (Iridium) போன்ற உலோகங்களை வைத்துக் கெட்டிப்படுத்தினார். இவற்றுள் இரிடியம் நீண்ட நாள் தேயாமல் இருக்கும்

எனக் கண்டு, அதையே பேனாமுள் முனையில் வைக்கலாயினர். 1822-இல் ஜான் மிச்சல் (John Mitchell) என்னும் அமெரிக்கர் எந்திரத்தினால் கட்டைப்பேனாவைச் செய்தார். இதன்பின், இறகுப் பேனாவிற்குப் பதில் கட்டைப் பேனா, மிகுதியாகப் பயன்பட்டது.

கட்டைப் பேனாவை மையில் தொட்டு எழுதுவதற்குப் பதில், அதனுள்ளேயே மை நிரப்ப வசதி செய்ய முயன்றனர். இதன் பயனாக ஒருவகை ஊற்றுப் பேனாவைக் (Fountain pen) கண்டுபிடித்தனர். இதில் மை சரியாக வராமல் எழுதும்போது திடீரென நின்று விட்டது. இக்குறையைப் போக்கி, 1883-இல் லூயி வாட்டர்மன் (Lewis waterman) என்ற அமெரிக்கர் இன்று உள்ளது போல் ஊற்றுப்பேனாவை அமைத்தார்.

ஊற்றுப் பேனாவில் குழாய் (Barrel), கழுத்து (Neck), உமிழி (Feeder), மூடி (Cover) ஆகிய உறுப்புகள் உள்ளன. இவற்றை வல்கனைட்டு, பிளாஸ்டிக், அல்லது உலோகத்தினால் செய்கிறார்கள். பேனாவின் உடல் போன்ற குழாயும், கழுத்தும் திருகினால் பொருத்தப்படுகின்றன. இவ்வாறு காலத்துக்கு காலம் எழுதுகோல் மாற்றம் அடைந்து கொண்டே வருகின்றது."[52] என்று கலைக்களஞ்சியம் சுட்டுகிறது.

எழுதுகோல் என்பதற்குத் "தூரியக்கோல்; ஓவியம் வரையும் கோல்; எழுத்து வரையும் கோல்"[53] என்று விளக்கம் கூறுகிறது மெய்யப்பன் தமிழகராதி.

ஓவியம் வரையும் தொழிலினைக் கொண்ட ஓவியர்கள் வட்டிகையினைப் பயன்படுத்தி ஓவியம் வரைத்துள்ளதை,

**"வட்டிகைச் செய்தியு மலராய்ந்து தொடுத்தலும்"**

**(மணி.ஊரலருரைத்த.27)**

**"வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவையின்"**

**(மணி.பளிக்கறைபுக்க.57)**

எனும் பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது. இங்கு வட்டிகை என்பது "சித்திரம் எழுதும் கோல்"[54] என்று மெய்யப்பன் தமிழகராதி பொருளுரைக்கிறது.

**கலங்கரை விளக்கம்**

கலங்கரை விளக்கு என்பது, “கடலில் நெடுந்தொலைவு சென்ற கப்பல்கள் இரவில் திரும்பி வரும் பொழுது, கரை எந்த இடத்தில் உள்ளது என்பதைக் காட்டுவதற்குப் பழங்காலத்தில் உயரமான தூண்களை அமைத்து, அவற்றின் உச்சியின் மரக்கட்டைகளைப் போட்டு எரித்தார்கள். கடலில் செல்லும் கலங்களுக்குக் கரை இருக்குமிடத்தை விளக்கிக் காட்டுவது கலங்கரை விளக்கம். இக்காலத்தில் கலங்கரை விளக்குகளில் எண்ணெயினாலும் மின்சாரத்தாலும் விளக்குகள் ஒளி வீசிக் கப்பல்களுக்கு வழிகாட்டுகின்றன. உலகிலுள்ள எல்லாத் துறைமுகங்களுக்கும் கலங்கரை விளக்கங்கள் உண்டு”[55] என்று குழந்தைக் கலைக்களஞ்சியம் உரைக்கிறது.

சங்க இலக்கியங்களில் ஒன்றான பெரும்பாணாற்றுப்படையில் கலங்கரை விளக்கத்தின் பயன்பாடு இருந்ததை,

> **“விண்பொர நிவந்த, வேயா மாடத்து**
> **இரவில் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி**
> **உரவுநீர் அழுவத்து ஒடுகலம் கரையும்”[56]**

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன.

புகார் நகரத்து கடற்கரையில் கடல் ஓடும் மரக்கலங்களுக்கு வழி காட்ட கலங்கரை விளக்கு இருந்துள்ளமையை,

> **“இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்”**
> **(சிலம்பு.கடலாடு.141)**

எனும் பாடலடி விளக்கும்.

**துலாக்கோல்**

வணிகர்கள் பொருட்களை அளவிடுவதற்காகப் பயன்படுத்திய தொழிற்கருவி துலாக்கோல். துலாக்கோலிற்கு நிறைகோல் என்றும், தராசு என்றும் பெயருண்டு. துலாக்கோல் நடுநிலை கொண்டது என்பதால் இலக்கியங்களில் துலாக்கோலினை மனிதர்களுடன் ஒப்பிட்டுக் கூறியுள்ளனர். துலாக்கோலின் அமைப்பு ஒரு கைபிடிக்குக் கீழ் இரண்டு தட்டுக்கள் சம அளவில் தொங்கும் அமைப்பில் பழைய தராசுகள் அமைக்கப்பட்டிருக்கும்.

தற்போது நாகரிக வளர்ச்சியின் காரணமாக இவற்றின் அமைப்பில் பல்வேறு மாற்றம் ஏற்பட்டு மின்சார (எலக்ட்ரிக்) தராசுகள் வரை கொண்டுவரப்பட்டுள்ளன. குடிசைத் தொழிலான சிறுதொழில் வணிகர் முதல் தொழிற்சாலைகளின் மூலம் பொருட்களை உருவாக்கி விற்பனை செய்யும் பொருந்தொழிலாளர்கள் வரை தராசினைப் பயன்படுத்துகின்றனர்.

தான் சமமாக நின்று, பின் தன்னிடத்து வைத்த பொருளின் எடையை உள்ளவாறு காட்டுவது துலாக்கோல் என்பதனை,

**"சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல அமைந்துஒருபால்**
**கோடாமை சான்றோர்க்கு அணி"**[57]

என்ற குறட்பா விளக்கும்.

தராசின் இரண்டு தட்டுக்களிலும் பொருள் வைக்கும் போது இரு தட்டுக்களின் நிறையானது சமமாக நில்லாது கண்டு எடை குறைவுள்ள தட்டில் மேலும் பொருட்களை இடுகின்றனர். தராசுத் தட்டு இரண்டும் சமமாக நிற்கும் வரை பொருட்களை இட்டு இறுதியில் தராசுத் தட்டானது சமமாக பகிரச் செய்கிறது. தராசு தட்டு ஏற்ற இறக்கம் இன்றி சமமாக நின்றால் சம எடையைக் கொண்டது என்பதை அறியமுடிகிறது. இதனைப் பெரியபுராணத்தில் 533, 534, 535, 536, 537, 538, 539, 540, 541, 542, 543, 544, 545 ஆகிய பாடல்கள் குறிப்பிடுகின்றன. மேற்கூறிய பாடல்களின் மூலம் தராசு கொண்டு அளவிடப்படும் முறை பற்றி அறிந்துகொள்ள முடிகிறது.

சிலப்பதிகாரத்தில் மதுரையைக் காத்துவந்த நால்வகைப் பூதத்தில் ஒன்று வணிகப் பூதம். வணிகப் பூதத்தின் கையில் துலாக்கோல் இருந்துள்ளதை,

**"வாணிக மரபி னீணில மோம்பி**
**நாஞ்சிலுந் துலாமு மேந்திய கையினன்" (சிலம்பு.அழற்படு.65-66)**

எனும் பாடலடி விளக்குகிறது. இது ஒரு குறியீட்டு மொழி. தராசினைப் பயன்படுத்துவர் என்பதைக் குறிப்பதாக அமைகிறது.

**யானைப் பாகன் பயன்படுத்தும் கருவிகள்**

யானை வளர்த்தலைத் தொழிலாகக் கொண்ட பாகன் அவ் யானையை அடக்க கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். அவை, கோணம், தோட்டி, கவைமுடி கருவி, குவிமுட்கருவி. அங்குசம் என்பனவாகும்.

கோணம் என்பதற்கு "வளைவு; வளைந்த வாள்; யானைத் தோட்டி; சிறுதெரு; குதிரை; மூக்கு; மூலை; ஒதுக்குபுறமான இடம்; வயற்காடு"[58] என்றும், தோட்டி என்பதற்கு "ஆணை; களவல்; கதவு; மனை வாயில்; கட்டழகு; செங்காந்தள் மலர்; நெல்லிமரம்; அங்குசம்; கொக்கி; வெட்டியான்; குப்பை முதலியன வாருவோன்; துப்புரவாளன்"[59] என்றும், கவைமுட்கருவி என்பதற்கு, "யானையை அடக்கும் குத்துக்கோல்"[60] என்றும், குவிமுட்கருவி என்பது "யானையை அடக்கும் ஆயுதம்"[61] என்றும் மெய்யப்பன் தமிழகராதி குறிப்பிட்டுள்ளது.

அங்குசம் என்பதற்கு, "யானையைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்ள யானைப்பாகன் பயன்படுத்தும் கருவி"[62] என்று கிரியாவின் தற்காலத் தமிழகராதியும் சுட்டுகின்றது.

கோணம், கவைமுட்கருவி, குவிமுட்கருவி இவை மூன்றும் யானையை அடக்கும் கருவிகள் விசேடங்கள் என்று மணிமேகலையில் உதயகுமரன் அம்பலம்புக்க காதையில் (163-164) அடிக்கு உ.வே.சாமிநாதையர் பதிப்பு உரையில் கூறப்பட்டுள்ளது.

**அங்குசம்**

காவிரிப்பூம்பட்டினத்தில் மதம் பிடித்த யானையை அடக்க பாகன் அங்குசத்தை வீசுகிறான், யானையின் முகத்தை அது பிளக்கிறது என்பதினை,

> **"பாகின் பிளவைவயிற் பணைமுகந் துடைத்துக்"**
>
> **(மணி, பளிக்கறைபுக்க.36)**

எனும் பாடலடி விளக்குகிறது. இதில் 'பிளவை' என்பதற்கு மணிமேகலை உ.வே.சாமிநாதையர் பதிப்பு நூல் அங்குசத்தாற் ஒலிக்கப்பட்ட புண் என்று உரை விளக்கம் கூறுகிறது.

சிலப்பதிகாரத்தில் ஊர்க்காண் காதையில் அடியார்க்கு நல்லார் 169 ஆம் அடியில் தோட்டி என்பதற்கு அங்குசம் என்று உரை கூறியுள்ளார்.

**தாறு**

தாறு என்பதற்கு, "வாழை முதலியவற்றின் குலை; பின்புறக் கச்சக்கட்டு; இரேகை; வரையில்; உண்டை நூல் சுற்றும் கருவி; முட்கோல்; மாடோட்டும் கோலிலுள்ள முள்; அங்குசம்; விற்குலை; கீல் எண்ணெய்"[63] என்று மெய்யப்பன் தமிழகராதியும், "முள் குத்தப்பட்டு இருக்கும் கோல்"[64] என்று நர்மதா தமிழகராதியும் குறிப்பிடுகின்றன.

கம்பராமாயண பாலகாண்டத்தில் (567:1) தாறு என்பதற்கு, வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியார் மதங்கொண்ட யானையை அடக்க இருப்புமுள் வடிவான கருவி என உரையிட்டுள்ளார்.

தாறு என்று யானையை அடக்கும் கருவியின் பெயரைக் கேட்டவுடன் யானையானது சினம் கொண்டுள்ளது. இதனை,

**"தாறெனக் கனலுக்கு தறுகண் யானையே" (கம்ப.பால.837:4)**

எனும் பாவடி விளக்கும்.

யானை முன்னேறி வேகமாகச் செல்ல தாறினைக் கொண்டு குத்தியுள்ளனர் என்பதை,

**"தாறு பாய்கரி வனகரி தண்டத்தைத் தடவிப்" (கம்ப.பால.901:2)**

யஎனும் பாடல் மூலம் அறியமுடிகிறது.

**நெசவுத் தொழில்**

கைத்தொழிலில் பழமையானது தொழில் நெசவு. பருத்தி நூலினாலும், மயிரினாலும் ஆடைகள் நெய்யப்பட்டன. குளிர், வெயில் முதலியவற்றிலிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ள மனிதன் விலங்குகளின் தோலை ஆடையாக ஆதியில் அணிந்தான். பின்னர் இலைகளையும் புல்லையும் நார்களையும் பின்னி ஆடையாகப் பயன்படுத்தக் கற்றான். இதுவே நெசவின் தொடக்கம் ஆகும். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பருத்தியிலிருந்து பஞ்சு எடுத்து நூல் நூற்றுத்துணி செய்யும் நெசவுக்கலை தமிழகத்தில் வளமாக இருந்தது. "பட்டிலும் பஞ்சிலும் சீலை நெசவு செய்தல் அக்காலத்தில்

சிறந்திருந்ததென்பதைச் சங்க நூல்களிலிருந்து அறியலாம். நூற் சீலையிலும் பட்டுச் சீலையிலும் சிறந்த சித்திர வேலைப்பாடுகள் செய்தனர் தமிழர்."[65] என்கிறார் சு.வித்தியானந்தம்.

**ஊசி**

ஊசி என்பதற்கு "இழைவாங்கி; துணி தைக்கும் ஊசி; எழுத்தாணி; குண்டுசகி; நிறைகோலின் நடுமுள்; கடிகாரத்தின் முள்; கூர்மை; சிறுமை; ஊசிப்பொறி; குயவர் மட்கலத்தை அறுக்கும் கருவி; வடதிசை"[66] என்று மெய்யப்பன் தமிழ் அகராதி பல பொருள் கூறுகிறது.

தமிழர்கள் செய்த தொழில்களில் கட்டில் பின்னுதலும் ஒன்றாக இருந்துள்ளது. இதனை செய்ய ஊசி என்னும் கருவியைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

**"கட்டில் நிணக்கும் இழிசினன் கையது**
**போழ்தூண்டு ஊசியின் விரைந்தன்று மாதோ"[67]**

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

பட்டு நூலாலும், எலி மயிராலும், பருத்தி நூலினாலும் கொண்டு நுண்ணிய தொழில் வளத்தால் ஊசியிற்பிணைக்கப்பட்டு நெசவாளர்கள் பட்டாடையும், பருத்தி ஆடையும் செய்துள்ளனர். இதனை,

**"பட்டினு மயிரினும் பருத்தி நூலினும்**

**கட்டு நுண்வினைக் காருக ரிருக்கையும்"**

**(சிலம்பு.இந்திரவிழா.16-17)**

எனும் பாடலடியின் மூலமாக அறியலாம். பட்டு நெசவாளர்களை "காருகர்" என அழைத்துள்ளனர்.

**அளவுகோல்**

அளவுகோல் என்பது, "ஒரு பொருளுடைய நீளம், அகலம், உயரம் போன்றவற்றைக் கணக்கிட உதவும் அலகு பொறிக்கப்பட்ட கோல்"[68] ஆகும்.

சிலப்பதிகாரத்தில் உயரமாக வளர்ந்த மூங்கில்களிலே கணுவுக்குக் கணு ஒருச் சாண்தூரம் உள்ளதாக வளர்ந்திருக்கும் மூங்கிற்கோல் ஒன்றினை

வெட்டி, அதனைச் சிற்ப நூல்கள் வகுத்துரைத்துள்ள முறைமைக்கு ஏற்றதாகக் கைப்பொருவிரல் அளவிலே இருபத்துநாலு விரலளவு கொண்டதாக நறுக்குவர். இதுவே பொதுவான அளவுகோலாகும். இந்த அளவுகோலின்படி ஏழு கோல் அகலமும், எட்டுக்கோல் நீளமும் ஒருகோல் உயரமுமாக நடன அரங்கம் அமைக்கப்பட்டது. இதனை,

**"கோலள விருபத்து நால்விர லாக**

**எழுகோ லகலத் தெண்கோ னீளத்"** (சிலம்பு.அரங்கேற்று.100-101)

எனும் பாடலடிகள் உரைக்கின்றன.

**விளக்கு**

பண்டைத் தமிழர்கள் நிலவுலகில் தம்மை நிலைநாட்டிக் கொள்ளவும், பொருளாதாரத்தைப் பெருக்கிக் கொள்ளவும் இரவு பகல் பாராது தொழில் செய்துள்ளனர். பகலில் தொழில் செய்வதற்கு இயற்கையின் மூலம் கிடைக்ககூடிய சூரிய ஒளியைப் பயன்படுத்தித் தொழில் செய்துள்ளனர். இரவுப் பொழுதிலும் தொழிலினை மேற்கொண்டுள்ளனர். இரவுப் பொழுதில் தொழில் செய்வதற்கு வெளிச்சம் காட்டாயத் தேவையாக அமைகிறது. இரவில் வெளிச்சத்தைப் பெற விளக்குகளைத் தங்களின் தொழிற்கருவியாகப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

**"பண்ணியப் பகுதியும் பகர்வோர் விளக்கமும்**

**...**

**கழிபெரும் பண்டங் காவலர் விளக்கமும்"** (சிலம்பு.கடலாடு.135-144)

எனும் பாடலடிகளின் மூலமாக அறியமுடிகின்றது. இதிலிருந்து சிற்றுண்டிகள் விற்போரும், கைத்தொழில் வல்லப்பொற்கொல்லரும், பிட்டு வணிகரும், அப்ப வணிகரும், பல பண்டங்களைக் கூவி விற்கும் மகளிரும், மீன் விற்கும் பரதவரும் தங்களுக்கான தொழிலைச் செவ்வனவே செய்ய விளக்குகளைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை உணரமுடிகின்றது.

**கள்வர்கள் பயன்படுத்தும் கருவிகள்**

தம் பொருள் இன்றி பிறர் பொருளை, எவரும் அறியாத வண்ணம் எடுத்துக் கையகப்படுத்திக் கொள்வது திருடுதலாகும். கள்வர்கள், திருடி,

வழிப்பறி செய்து வாழ்வு நடத்துவதையே தொழிலாகக் கொண்டவர்கள். இத்தொழில் செய்வதற்கு,

- கன்னக்கோல்
- கவைக்கோல்

எனும் கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

**கன்னக்கோல்**

கன்னக்கோலானது "சுவரைத் துளைப்பதற்குத் திருடர்கள் கையாளும் கருவி"[69] ஆகும். கவைக்கோல் என்பது குத்துக்கோல்.

சிலப்பதிகாரத்தில் கொல்லன், பாண்டிய நெடுஞ்செழியனிடம் கன்னக்கோல் இன்றியும், கவைக்கோல் இன்றியும் வாயில் காப்பவர்களை மயங்கித் தூங்கச் செய்துவிட்டு அந்தபுரத்தில் இருந்து அரசியின் காற்சிலம்பினைத் திருடிய கள்வனைக் கண்டேன் என்கிறான். இதனை,

> **"கன்னக மின்றியுங் கவைக்கோ லின்றியும்**
> **...**
> **கோயிற் சிலம்பு கொண்ட கள்வன்"**
>
> **(சிலம்பு.கொலைக்.142-145)**

என்ற பாடலடிகள் மூலம் அறியப்படுகின்றது. இதிலிருந்து களவு கொல்லப் பயன்படும் கருவியாகக் கன்னக்கோல், கவைக்கோல் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை உணரமுடிகிறது.

**மயிர்த்தொழில்**

இயற்கையாகவே மனித உடலில் முடிகள் வளர்கிறது. முடிகள் பிறப்பில் இருந்து இறப்பு வரை வளாந்து கொண்டுதான் இருக்கின்றன. மாந்தர்கள் தங்களை அழகுபடுத்திக் கொள்ள மயிர்களை ஓரளவிற்கு மேல் வளரவிடாமல், தங்களுக்குப் பிடித்தமான வடிவங்களில் வெட்டிக் கொண்டு தங்களை அழகுபடுத்திக் கொண்டுள்ளனர். இத்தொழில் செய்வதற்கு கத்தரிக்கோல் மற்றும் கத்தியைப் பயன்படுத்தியுள்ளனர்.

கத்தரிக்கோல் உருவாக்கம் மற்றும் அதன் பயன்பாடு பற்றி, "கத்தரிக்கோல் காகிதம், துணி போன்ற பொருட்களைக் கத்தரிக்கப்

பயன்படும் கருவி. இது முதல் வகையைச் சேர்ந்த இரட்டை நெம்புகோல். இரண்டு கத்திகளை அவற்றின் கூரிய விளிம்புகள் நெருங்கியியங்குமாறு இணைந்த ஓர் இணைப்பே கத்தரிக்கோல் எனப்படும். இந்த இரு அலகுகளையும் ஒன்றாக இணைக்கும் கம்பியே, அந்த இரட்டை நெம்புகோலின் பொதுவான திருபத்தனம் ஆகும். சாதாரண கத்தரிக்கோல் பிடி கத்திகளின் ஒரு கோடியிலுள்ள சம அளவுள்ள இருவளையங்கள். இவ்விரு வளையங்களுள் ஒன்றில் வலக்கையின் பெருவிரலையும, மற்றொன்றில் சுட்டு விரலையும் நுழைத்துக் கொண்டு, கத்தரிக்க வேண்டிய பொருளை இரு கத்திகளிடையே வைத்து, விரல்களை அழுத்தினால் பொருளின் இரு புறங்களிலும் ஏற்படும் அழுத்தத்தினால் பொருள் வெட்டப்படும். ஆனால் பெரிய கத்தரிக்கோலின் ஒரு பிடி நம் கைப்பெருவிரல் நுழையத்தக்கதாகவும், மற்றொரு பிடி மற்ற நான்கு விரல்களும் கொள்ளக்கூடியதாகவும் இருக்கும். இவற்றின் அலகுகள் பெரியனவாக இருக்கும். கனமான பொருள்களையும் உலோகத்தகடுகளையும் வெட்ட இது பயன்படுகிறது.

வளை வளைவான வெட்ட முகங்களோடு கூடிய கத்தரிக்கோலும் உண்டு. இதைப் பயன்படுத்தி உடைகளை விதவிதமாக வளைவுகளாக வெட்டமுடியும். கத்தரிக்கோல் எ.்.கினால் செய்யப்படுகிறது. ஒவ்வொரு அலகும் ஒரே கம்பியில் செய்யப்படும். கத்தரிக்கோல் மூலம் முப்பது வகைத் தொழில்கள் நடைபெறுகின்றன. நகம் வெட்டும் கத்தரியிலிருந்து, தகடுகளையும், புல் முதலானவற்றையும் வெட்டும் கத்தரிகள் வரை பல வகைகள் உள்ளன. சில கத்தரிக்கோல்களைக் கையால் இயக்காமல் எந்திரத்தால் இயக்குவதுண்டு.”[70] என்று கலைக்களஞ்சியம் உரைக்கிறது. இதன் மூலம் கத்தரிக்கோலின் தன்மை, அமைப்பு மற்றும் அவற்றின் செயல்பாடுகள் குறித்து அறிந்து கொள்ளமுடிகின்றது.

மயிர்த்தொழிலுக்குக் கத்தரிக்கோலைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை,

**“வள்ளைகத் தரிகை வாம மயிர்வினைக் கருவி யென்னப்”**

**(கம்ப.கிட்கிந்தா.805:1)**

எனும் பாடல் சுட்டும். மேலும் இதில் "வாம மயிர்வினைக் கருவி" என்பதற்குக் கத்தி என்று வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியார் உரையிடுகிறார். இதன் மூலம் முகச் சவரம் செய்வதற்காகக் கத்தியைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

**பறை**

பறை என்பது "தோற்கருவி; தப்பு; பறையடிக்குஞ் சாதி, வட்டம், சொல் விரும்பிய பொருள்; ஒரு முகத்தலளவை; மரக்கால்; நூல் வகை; வரிக்கூத்து வகை; குகை; பறத்தல்; பறவை இறகு; பதவை"[71] எனப் பல பொருள்படும்.

பறை என்னும் அளவு கருவியினை உடையவர்கள் மதுரை கூலவீதியில் இருந்துள்ளனர். இதனை,

**"நிறைகோல் துலாத்தார் பறைக்கப் பராரையும்"**

**(சிலம்பு.ஊர்க்காண்.206)**

எனும் பாடலடி விளக்குகிறது. பறை, நான்கு மரக்கால் அளவு இருக்கும். இது 24 படி ஆகும்.

**அம்பணம்**

அம்பணம் என்பது மரக்கால். ஒரு மரக்கால் "எட்டு லிட்டர் கொண்ட அளவு; மரம் அல்லது உலோகத்தால் ஆன முன் குறிப்பிட்ட அளவு கொண்ட கொள்கலன்"[72] ஆகும்.

உழவுத் தொழில் செய்பவர்கள் அறுவடை முடிந்து பதரையும், நெல்லையும் தனித்தனியாகப் பிரித்து நெல்லை மரக்காலில் அளந்து குவிப்பதாக,

**"பரூஉப் பகடு உதிர்த்த மென் செந்நெல்லின்**
**அம்பண அளவை உறைகுவித் தாங்கு"**[73]

என்னும் பதிற்றுப்பத்துப் பாடலடிகள் உரைக்கின்றன.

சிலப்பதிகாரத்தில் வணிகம் செய்பவர்கள் பயன்படுத்திய அம்பணம் எனும் கருவி குறித்து இளங்கோவடிகள்,

**"அம்பண வளவைய ரெங்கணுந் திரிதிரக்"**

**(சிலம்பு.ஊர்க்காண்.209)**

எனும் பாடலடியில், மதுரைக் கூலவீதியில் விற்பனைப் பொருட்களைப் பயன்படுத்த அம்பணம் பயன்படுத்தியுள்ளனர் என்று கூறுகிறார்.

**துடுப்பு**

துடுப்பு என்பது, "படகு ஓட்டப் பயன்படுத்தும் அகன்ற பட்டையான முனையுடைய நீண்ட மரக்கோல்."[74] என்று பொருளுரைக்கிறது கிரியாவின் தற்கால தமிழகராதி. கடலில் மீன்பிடிக்கச் செல்லும் மீனவர்கள், நாவாயை இயக்குவதற்கு இத்துடுப்பு பயன்படுகிறது. நாவாயில் இருந்து இரு துடுப்புகளை நாவாயின் வெளியே இருபுறமும் நீரில்விட்டு தண்ணீரைத் துடுப்பால் பின்னோக்கித் தள்ளும் போது நாவாய் முன்னோக்கிச் செல்லும். நாவாயை இயக்குவதற்குத் துடுப்பைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை,

> **"துன்னின ரேறலுந் துழாது டுப்பெனும்**
> **நன்னியக் காலினா னடத்தன மேயினான்"**

**(கம்ப.அயோத்தி.1074:3-4)**

எனும் பாவடிகளில் காணமுடிகின்றது.

**செக்கு**

செக்கு என்பதற்கு, "பெரிய உரல் போன்ற மர அமைப்பின் நடுவில் பொருத்தப்பட்டுள்ள உலக்கை போன்ற தடியை மாடுகளைக் கொண்டு வட்டமாகச் சுழலச் செய்வதன் மூலம் வித்துகளிலிருந்து எண்ணெய் எடுக்கப்பயன்படும் ஒரு வகை சாதனம்"[75] என்று தற்காலத் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது.

பண்டைத் தமிழர்கள் செக்கினை மரத்தினைக் கொண்டும் கருங்கல்லினைக் கொண்டும் செய்துள்ளனர். வலிமை மிகுந்த காளை மாடுகளைக் கொண்டு இதனை இயக்கியுள்ளனர். செக்கில் நிறையும் அளவுக்கு எள் இட்டு, செக்கினைச் சுற்றிவரும் எருதுகளைக் கொண்டு சுற்றிவரச் செய்து ஆட்டி எண்ணெய் எடுத்துள்ளனர். இதனை,

> **"செக்கு நிறை எள்ளாட்டிப்**
> **பதம் அறிந்து திலதயிலம்**
> **...**

மிக்க திரு விளக்கிட்டார்

விழுத்தொண்ட விளக்கிட்டார்." (பெரி.4037)

எனும் பாடல் விளக்குகிறது. தமிழர்கள், விஜயநகர ஆட்சி வரும்வரை எள்ளிலிருந்து எடுக்கப்படும் நல்லெண்ணெய், ஆமணக்கிலிருந்து விளக்கெண்ணெய், பசுவின் நெய், வேப்பங்கொட்டையிலிருந்து வேப்பெண்ணெய் போன்ற எண்ணெய் வகைகளைப் பயன்படுத்தியுள்ளனர். இதற்குச் செக்கைப் பயன்படுத்தியுள்ளனர்.

## தொகுப்புரை

- மக்கள் தங்களின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள, பொருளியல் வளத்தினைப் பெருக்கிக் கொள்ள பல்வேறு தொழில்களைச் செய்து வந்துள்ளனர்.
- தாங்கள் செய்துவந்த தொழில்களைச் செவ்வனே செய்து முடிக்கத் தொழிற் கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.
- மனிதர்கள் தமது அடிப்படைத் தேவைகளில் ஒன்றான உணவுக்காகப் பயிர்த் தொழிலைக் கைக்கொண்டுள்ளனர். இத்தொழில் செய்வோரை வேளாளர்கள் என்றும் உழவர்கள் என்றும் அழைத்துள்ளனர்.
- பயிர்த்தொழில் செய்வதற்கு நிலத்தை உழுது பண்படுத்த வேண்டும். இதற்கு ஏரினையும், மாட்டினையும், பிற கருவிகளையும் பயன்படுத்தியுள்ளனர்.
- உழும் போது ஏரில் பூட்டிய எருதுக்கும், அதனை இயக்கப் பயன்படும் கோலுக்கும் உவமையாக யானையினையும் வாளினையும் கூறியுள்ளனர்.
- அரிவாளானது இரும்புப் பட்டையில் அரைவட்ட வடிவில் உட்புறமாகக் கூர்மையாகத் தொடர் சாய்வு வெட்டுகளுடனும் வெளிப்புறம் கூர்மை

அற்றதாகவும் இருக்கும். தானியங்களை அறுவடை செய்ய இதனைப் பயன்படுத்தியுள்ளனர்.

- குளம், குட்டை, ஏரி, கேணி, கிணறு போன்றவற்றிலிருந்து வயல்களுக்கு நீர் இறைக்க, நீர் இறைக்கும் கருவிகளான ஆம்பி, கிழார், ஏற்றம் (பூட்டைப் பொறி), பிழா (இறை கூடை) போன்ற கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

- தச்சு வேலை செய்ய தச்சர்கள் உளி, இழைப்புளி, அரங்கள், துரப்பணம், ரம்பம், பரப்புத்தட்டு, மூலைமட்டம், காளப்பர், முளைமானி போன்ற கருவிகளைக் கையாண்டுள்ளனர்.

- மட்கலத்தொழில் செய்யும் குயவர்கள் தங்களின் குல மரபின்படி மண்கலங்களை உருவாக்கி, அப்பொருளை விற்பனை செய்து, அதன் மூலம் கிடைக்கக்கூடிய வருவாயினைக் கொண்டு வாழ்வை நிகழ்த்தியுள்ளனர்.

- இரும்பின் தன்மையை நன் உணர்ந்த கொல்லர்கள் அவற்றினைக் கொண்டு உழவர், தச்சர் போன்ற பல்வேறு விதமான தொழில்களைச் செய்வோருக்கும், அவர்கள் தொழில்களுக்கு ஏற்ற வகையில் கருவிகளை வடித்துக் கொடுத்துள்ளனர்.

- கொல்லனது உலைக்கலத்தில் பயன்படுத்திய அடுப்பினை உலை என்பர். இவ்வுலையின் மூலம் இரும்பின் கடினத் தன்மையை இலகுவடையச் செய்துள்ளனர். இரும்பினைக் காய்ச்சவும் இதனைப் பயன்படுத்தியுள்ளனர்.

- காப்பியக் காலங்களில் மன்னர்கள், அவர்தம் குடும்பப் பெண்களின் தேவைகளால், ஆடம்பரத்தால் அணிகலத் தொழிலானது சிறப்புற்று விளங்கியுள்ளது. மனிதர்கள் உச்சந்தலையில் இருந்து உள்ளங்கால் வரையிலும் அணிகலன்களை அணிந்துள்ளனர்.

- வாளரத்தினைப் பயன்படுத்தி சங்குகளை அறுத்துக் காதணிகள், கை வளையல்கள் போன்ற அலங்காரப் பொருள்களைச் செய்துள்ளனர்.
- வேட்டைத் தொழிலில் வில், அம்பு, வலை, சுருக்கு வலை போன்றவற்றைப் பயன்படுத்தி விலங்குகளை வேட்டையாடி அதனை உணவாக உட்கொண்டுள்ளனர்.
- வணிகர்கள் பொருட்களின் எடையை அளவிடுவதற்காகப் பயன்படுத்தப்பட்ட கருவி துலாக்கோல். துலாக்கோலிற்கு நிறைகோல் என்றும், தராசு என்றும் பெயருண்டு. துலாக்கோல் நடுநிலையானது.
- இரவு, பகல் பாராது தொழில் செய்யும் தொழிலாளர்கள் பகலில் சூரிய ஒளியின் மூலம் தொழில் செய்துள்ளனர். இரவுப்பொழுதில் தொழில் செய்ய வெளிச்சம் தேவைப்படுவதால் ஒளிதரும் கருவியான விளக்கினைப் பயன்படுத்தியுள்ளனர்.

**சான்றெண் விளக்கம்**

1.தொல்காப்பியம், நூ.964

2.மேலது, நூ.1021

3.மேலது, நூ.1571

4.மேலது, நூ.1570

5.மெய்யப்பன் தமிழகராதி, ப.688

6.நர்மதா தமிழ் அகராதி, ப.465

7.வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.36

8.வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-5, ப.342

9.கியோர்க்கு விஹனாஸவ், மனிதனும் விஞ்ஞானமும் சமுதாயமும், ப.57

10. தற்காலத் தமிழ் அகராதி, ப.360

11. கலைக்களஞ்சியம், தொகுதி-4, ப.215

12. தொல்காப்பியம், நூ.1581

13. திருக்குறள், பா.1031

14. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.317

15. மலைபடுகடாம், பா.469-470

16. மதுரைக்காஞ்சி, பா.271

17. முனைவர்.சா.சுந்தரபாலு, தொழிற் கருவிகள், ப.41

18. மேலது, ப.41

19. மேலது, ப.63

20. நர்மதா தமிழகராதி, ப.752

21. மேலது, ப.238

22. மெய்யப்பன் தமிழகராதி, ப.105

23. மேலது, ப.368

24. மேலது, ப.244

25. மேலது, ப.842

26. நர்மதா தமிழகராதி, ப.721

27. கலைக்களஞ்சியம், தொகுதி-5, ப.410

28. மெய்யப்பன் தமிழகராதி, ப.206

29. கலைக்களஞ்சியம், தொகுதி-3, ப.273

30. தமிழ்ச்சொற்றொடர் அகராதி, ப. 151

31. கலைக்களஞ்சியம், தொகுதி-3, பக்.273-274

32. அறிவியல் கலைக்களஞ்சியம், தொகுதி-2, ப.162

33. திருக்குறள், 567

34. மேலது, குறள்.997

35. நர்மதா தமிழகராதி, ப.335

36. நர்மதா தமிழகராதி, ப.441

37. பெரும்பாணாற்றுப்படை, பா.436-438

38. மயிலை.சீனி.வேங்கடசாமி, நுண்கலைகள், ப.91

39. சிற்பச்செந்நூல், ப.90

40. ந.அதியமான், சங்கு, பக்.97-98

41. ஐங்குறுநூறு, பா.194:1

42. தமிழ் லெக்சிகன், ப.451

43. பெரும்பாணாற்றுப்படை, பா.220

44. தொல்காப்பியம், நூ.948

45. குறுந்தொகை,. பா.184:7

46. திருக்குறள், 772

47. மெய்யப்பன் தமிழகராதி, ப.664

48. நர்மதா தமிழகராதி, ப.447

49. சா.சுந்தரபாலு, தொழிற்கருவிகள், பக்.32-33

50. கலைக்களஞ்சியம், தொகுதி-3, ப.273

51. பெரும்பாணாற்றுப்படை, பா.169-170

52. கலைக்களஞ்சியம், தொகுதி-7, பக்.635-636

53. மெய்யப்பன் தமிழகராதி, ப.233

54. மேலது, ப.1027

55. குழந்தைக் களஞ்சியம், தொகுதி-3, ப.30

56. பெரும்பாணாற்றுப்படை, பா.348-350

57. திருக்குறள்:118

58. மெய்யப்பன் தமிழகராதி, ப.441

59. மேலது, ப.689

60. மேலது, ப.325

61. மேலது, ப.395

62. கிரியா தற்காலத் தமிழகராதி, ப.5

63. மெய்யப்பன் தமிழகராதி, ப.623

64. நர்மதா தமிழகராதி, ப.422

65. சு.வித்தியாநந்தம், தமிழர் சால்பு, ப.158

66. மெய்யப்பன் தமிழகராதி, ப.211

67. புறநானூறு, பா.82:3-4

68. நர்மதா தமிழகராதி, ப.64

69. மெய்யப்பன் தமிழகராதி, ப.335

70. கலைக்களஞ்சியம், தொகுதி-3, ப.163

71. மெய்யப்பன் தமிழகராதி, ப.809

72. நர்மதா தமிழகராதி, ப.724

73. பதிற்றுப்பத்து, எட்டாம் பத்து, 71:4-5

74. கிரியா தற்காலத் தமிழகராதி, ப.599

75. கிரியா தற்காலத் தமிழகராதி, ப.622

ஒருவனுக்கு ஒருத்தி என்ற குடும்பநெறியைக் கொண்டது தமிழ்ச் சமூகம். நாடோடி வாழ்வின் பிற்பட்ட முன்னேற்ற வளர்ச்சி நிலையில் தமிழர்கள் இல்லம் என்ற ஒன்றை அமைத்து நிலையான வாழ்வினை வாழத் தொடங்கியுள்ளனர். இக்குடும்ப வாழ்வில் கணவன் மனைவி மட்டும் வாழும் தனிக்குடும்பமாகவும், பெற்றோர் சகோதர, சகோதரியோடு சேர்ந்து வாழும் கூட்டுக்குடும்பமாகவும் வாழ்ந்துள்ளனர். பண்டைத் தமிழர்கள் இல்லற வாழ்வினைச் செம்மையுற நிகழ்த்த தேவைகளைப் பூர்த்தி செய்ய, பல்வேறு வகையான இல்லறக் கருவிகளினைப் பயன்படுத்தியுள்ளனர். காப்பியங்களில் இல்லறத்தில் பயன்படுத்தியுள்ள கருவிகளைக் கண்டு தெளிவதாக இவ்வியல் அமைகிறது.

**இல்லம் - சொற்பொருள் விளக்கம்**

- இல்லம் என்பதற்கு, “வீடு (House - Home)”[1] என்றும், “இல்” என்பதற்கு, “இடம், வீடு, இல்லறம், மனைவி, மருத முல்லை நிலங்களின் தலைவியர், குடி, இராசி, தேற்றாங்கொட்டை”[2] என்றும் பல பொருட்களை உரைக்கின்றது தமிழ் லெக்சிகன்.

- இல்லத்திற்கு, “வீடு; மாணவர்; முதியோர்; அலுவலக ஊழியர், அனாதைகள் ஆகியோர் உணவு உட்கொண்டு தங்கி இருக்கும் விடுதி”[3] என நர்மதா தமிழ் அகராதி உரைக்கிறது.

- வீடு என்பதற்கு “அகவீடு, அந்தப்புரம், இல், இருப்பிடம், அமர்வு, இல்லம், புக்கில், மாடம், மந்திரம், வசதி குடிசை, மாடி வீடு, கட்டிடம், கூடம், அரங்கம், மண்டபம், திரையரங்கு, நாடக சாலை, அரங்கு, ஆள், நடு வீடு, இடம், இடன், இருப்பு, இல்லிடம், உக்கரை, ஈனில், அதளை சரணம், நிவேசனம், மாளிகை, மனை, பதி, அகம், வயின், தாமம், நிகேதனம், நிசாந்தம், கேகம், இடவகை, பவனம், பாத்தி, வசதி, குலம், உறையுள்”[4] என்று தமிழ்ச் சொற்றொடர் அகராதி விளக்கம் தருகின்றது. இவ்விளக்கங்களை நோக்கும் போது இல்லம்

என்பதற்கு உண்டு உறங்கும் உறைவிடம் என்று பொருள் கொள்ளலாம்.

- ❖ வாழ்வியற் களஞ்சியம் “மனிதன் இயற்கை மாறுபாடுகளிலிருந்தும் சுற்றுச் சூழல்களின் வேறுபாடுகளிலிருந்தும் காற்று, மழை, வெப்பம் முதலியவற்றிலிருந்தும் தப்பிப் பாதுகாப்பாக இருப்பதற்கு நிலையான கூரையின் கீழ் வாழ முற்பட்டான். அவன் வாழ்வதற்கு அமைந்த இடமே இல்லமாகும்.”[5] என்றுரைக்கிறது.
- ❖ இவ்வில்லத்தில் இல்லற வாழ்வினைக் குடும்பம் என்ற அமைப்பில் செம்மையுற நிகழ்த்த சமைத்தல், பரிமாறுதல், சேமித்தல், ஏறியூட்டல், பாதுகாத்தல், பகிர்ந்தளித்தல் போன்ற பல்வேறு செயல்களுக்குக் கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். இல்லறத்தில் பயன்படுத்தக்கூடிய கருவிகள் இல்லக்கருவிகள் என்று வகைப்படுத்தப்படுகின்றன.
- ❖ இல்லத்தில் பயன்படுத்தப்பட்ட கருவிகளைப் பின்வருமாறு பாகுபடுத்தப்படுகின்றது. அவை,

    1. கல்லாலான கருவிகள்,
    2. மண்ணாலான கருவிகள்,
    3. மரத்தாலான கருவிகள்,
    4. உலோகங்களாலான கருவிகள்
    5. துணியாலான கருவிகள்,

என்பனவாகும்.

**கல்லாலான கருவிகள்**

கல்லின் கடினத் தன்மையை உணர்ந்த தமிழர்கள் இல்லறங்களுக்குத் தேவையான அம்மி, உரல், சமையல் அடுப்பு, பாத்திரங்கள் போன்ற கருவிகளைக் கல்லினைப் பயன்படுத்தி உருவாக்கியுள்ளனர். இவ்வாறு கல்லினைப் பயன்படுத்தி உருவாக்கியக் கருவிகள் நெடுங்காலத்திற்குச்

சிதைவு அடையாமல் நிலைத்து நீண்ட காலம் பயன்படும் வகையில் அமைந்துள்ளன.

**அம்மி**

அம்மி என்பது கருங்கல்லினாலான செவ்வக வடிவுள்ள அரை கல் ஆகும். சமையல் செய்வதற்குப் பயன்படும் பொருட்களை அரைப்பதற்கும், நசுக்குவதற்கும் அம்மிக் குழவியைப் பயன்படுத்தியுள்ளனர். அம்மிக் குழவியானது நீண்ட திரள்கல்லாகும். அம்மி, சமையல் செய்வதற்காக மட்டும் பயன்படுத்தாது தமிழர்கள் தங்களின் திருமண நிகழ்விலும் அம்மியை மங்கலப்பொருளாகப் பயன்படுத்தியுள்ளனர். "திருமண நாளில் மணமகள் வலது காலை அம்மியின் மீது வைத்தல் என்னும் சடங்கு நிகழ்தல்"[6] என்று கிரியா தற்காலத் தமிழகராதி சுட்டும். இன்றும் அம்மி தமிழர்களிடையே வழக்கிலுள்ளது. திருமணத்தில் மணப்பெண் அம்மி மிதிப்பதற்குக் காரணம், தான் குடிபுகும் வீட்டில் உள்ள தனது கணவன், மாமனார், மாமியார், மைத்துனர், நாத்தனார் போன்றோர்களின் மூலமாக ஏதேனும் இடர்பாடுகள் வந்தால் சற்றும் மனம் தளராது மன உறுதியுடன் வாழ வேண்டும் கற்புடன் உள்ளேன் என்பதை உணர்த்தவே அம்மி மிதித்தல் நிகழ்வு நடைபெறுகிறது. தமிழர்களுக்கு உரித்தான இத்தனிச்சிறப்பானது இன்று வரையிலும் காலம் காலமாகப் பின்பற்றப்பட்டு வருகின்றது.

சீதை இராமன் திருமணத்தில் சீதையும் இராமனும் தீவலம் வந்தபின், அம்மி மிதித்து, கற்பு நிலையுடைய அருந்ததி நட்சத்திரத்தைப் பார்த்துள்ளாள் சீதை. இதனை,

**"இலங்கொளி யம்மி மிதித் தெதிர் நின்ற**
**கலங்கலில் கற்பி னருந்ததி கண்டாள்" (கம்ப.பால.1335:3-4)**

எனும் பாடலடியின் மூலம் அறிய முடிகின்றது.

**அம்மி உவமையாகப் பயன்படல்**

அனுமனுக்கும், அட்சகுமாரனுக்கும் நிகழ்ந்த போரில் அனுமனால் வதைபட்டுக் கிடந்த அட்சகுமாரனுக்கு உவமையாக அரைக்கும் போது அதிர்ச்சியால் அம்மியில் உள்ள அரிசிகள் சிந்துவன போல் அரக்கன்

அட்சகுமாரனின் உடலிலிருந்து தசைத்துண்டுகள் சிந்திப் புறங்களில் விழுந்து கிடந்தன என்கிறார். இதனை,

**"நீத்தா யோடின வுதிரப் பெருநதி**

**நீரா கச்சிலை பாராகப்" (கம்ப.சுந்தர.971:1)**

எனும் பாடல் சுட்டுகின்றது.

கம்பர் கடலைச் சந்தனம் அரைப்பவனாகவும், கடல் இருக்கின்ற தரையை அம்மிக்கல்லாகவும், பனிக்காற்றின் துளியைத் தெளிநீராகவும், மடங்கிய நிலையிலுள்ள கடலின் நீரை அரைக்குங் குழவியாகவும், நுரையை வெண் சந்தனமாகவும், திரையைக் கையாகவும் உருவகம் செய்துள்ளனர். இதனை,

**"துள்ளி நறுமென் புனல்தெளிப்பத் தூநீர்க் குழவி முறை சுழற்றி**

**வெள்ளி வண்ண நுரைக்கலவை வெதும்பு மண்ணல் திருமேனி"**

**(கம்ப.யுத்த.10:2-3)**

என்ற பாடல் மூலம் அறிய இயல்கிறது.

**மரத்தாலான கருவிகள்**

இயற்கை மனிதனுக்கு அளித்த கொடைகளில் மிக முக்கியமானது மரங்கள். மரத்தின் தன்மையை உணர்ந்த தச்சர்கள் இல்லறங்களுக்குத் தேவையான மத்து, உலக்கை, உரல், கரண்டி போன்ற பயன்பாட்டுக் கருவிகளைத் தயாரித்து வழங்கியுள்ளனர். மரத்தாலான இல்லக் கருவிகள் செய்வது எளிய முறையாயினும், அக்கருவிகள் நிலைத்து உழைக்கும் தன்மையைக் கொண்டதாகும். மர இலை, பட்டைகளை உண் கலன்களாகப் பயன்படுத்தியுள்ளனர்.

**மத்து**

மத்து என்பதற்குத் "தயிர் முதலியன கடையுங் கருவி"[7] என்று மெய்யப்பன் தமிழகராதி சுட்டும். மத்தினைக் கொண்டு தயிரினைக் கடைந்து வெண்ணெய் எடுப்பர். மத்தின் நடுப்பகுதியில் பள்ளம், மேடு, பள்ளம் என்ற அமைப்பில் கயிறு கொண்டு சுற்றுவதற்கு ஏற்ற வகையில் வடிவமைக்கப்

பெற்றிருக்கும். மத்தில் கயிறு கொண்டு சுற்றி, கயிற்றின் இரு முனையையும் இரு கைகளால் பற்றி உறையிட்டு, இறுகிய தயிரைக் கடைவர். இதனை,

**"மத்தம் புல்லிய கயிற்றின் மற்று அவர்**

**அத்தலை விடின் இத்தலை விடார்**

**உய்த்தனர் எனஉடை தயிர்ப்புளி"**[8]

என்னும் சீவகசிந்தாமணி பாடலடிகள் எடுத்துரைக்கின்றன.

ஆய்ச்சியர் மத்தினைப் பயன்படுத்தித் தயிரைக் கடைந்ததை,

**"தோயும் வெண்டயிர் மத்தொலி துள்ளவும்" (கம்ப.பால.60:1)**

என்ற பாடல் விளக்குகிறது.

**மத்து உவமையாகப் பயன்படல்**

தயிரைக் கடையும் மத்திற்கு மனதைக் கலக்குகிற மன்மதனது பாணம் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**"தயிருறு மத்திற் காம சரம்படத் தலைப்பட் டுடும்"**

**(கம்ப.பால.573:1)**

எனும் அடி சுட்டும்.

சீதையின் பிரிவால் இராமனின் உயிர், மத்தினாற் கடையப்படும் தயிர் போல உடலின் உள்ளே, வெளியே சென்று தடுமாறுவதாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**"மத்துறு தயிரென வந்து சென்றிடை**

**தத்துறு முயிரொடு புலன்கள் தள்ளுறும்" (கம்ப.சுந்தர.674:1-2)**

எனும் பாடல் விளக்குகிறது.

சடாயு தசரதனைக் குறித்துப் புலம்பும் போது தயிர்க் கட்டியை உடைத்துச் சிதறச் செய்யும் மத்துப் போல உலகத்தை வருத்திச் சிதறடித்த சம்பாரசுரனை வென்றவனே எனப் புலம்புவதை,

**"தயிருடைக்கு மத்தென்ன வுலகைநலி**

**சம்பரனைத் தடித்த வந்தாள்" (கம்ப.ஆரண்ய.199:1)**

எனும் பாடலடி உரைக்கிறது. உலகுக்குத் தயிரும், சம்பாசுரனுக்கு மத்தும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**மத்து உருவகமாகப் பயன்படல்**

பூமியைத் தயிர்த் தாழியாகவும், கடல் நீரைத் தயிராகவும், மந்தரமலையை மத்தாகவும் உருவகப்படுத்தி கம்பர் கூறியுள்ளதை,

> **"தாழி தலையாகத் தண்டயிர் நீராகத்**
> **தடவரையே மத்தாகத் தாமரைக்கைநோவ**
> **ஆழி கடைந்தமுத மெங்களுக்கே யீந்தாய்**
> **யவுணர்கடா நின்னடிமை யல்லாமை யுண்டோ"**
>
> **(கம்ப.ஆரணிய.102:3-4)**

எனும் பாடலடிகள் விளக்குகிறது.

**உரலும் உலக்கையும்**

"மனிதன் கல்லிலேதான் முதன் முதலாகப் பொருள்களைச் செய்யத் தொடங்குகின்றான். ஆராய்ச்சி அறிஞர்கள் அக்காலத்தை 'கற்காலம்' என்கிறார்கள். நினைவறியாக் காலத்தைச் சேர்ந்தது கற்கால நாகரிகம் என்றுதான் பெரும்பாலோர் கருதுகின்றனர். ஆனாலும் கூட அம்மி, உரல், ஆட்டுரல், திரிகை என்று கற்கால நாகரிகத்தின் சுவடுகள் நம்மிடையே இன்றும் வாழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன.

கையினால் பற்றிக்கொள்ள ஒன்றும், அடிப்பகுதி ஒன்றுமாக இந்தக் கற்கருவிகள் எல்லாம் இரண்டு பொருள்களில் சேர்க்கையாக அமைகின்றன. அம்மிக்கும் ஆட்டுரலுக்கும் கற்குழவிகள், திரிகைக்கு மூடியும் இரும்புக் கைப்பிடியும் இவை அரைப்புக் கருவிகள். உரலின் துணைக்கருவி உலக்கை. உலக்கை கருங்காலி மரத்தினால் செய்யப்பட்டது. இதன் அடிப்பகுதி இரும்புக் குப்பியால் ஆனது. மேற்பகுதியில் இரும்பினாலான பூண் கட்டப்பட்டிருக்கும். உலக்கையின் சராசரி நீளம் நான்கு அடியாகும். இது குற்றுக்கருவி. அவல் இடிப்பதற்கு இன்றளவும் உரலும் உலக்கையுமே பயன்படுகின்றன. எனவே இது இடிப்புக் கருவியும் ஆகும். சில இடங்களில் உரலுக்கு மேலே தானியங்கள் சிதறாமல் இருக்க மூங்கிலாலோ, பிரம்பினாலோ வட்ட வடிவ மறைப்பினைச் செய்து உரலின் மீது அதற்கென

வெட்டப்பட்ட காடியின் மீது வைக்கிறார்கள். அடிப்பகுதியும், மேற்பகுதியும் இல்லாத இதற்குக் 'குந்தாணி' என்று பெயர்.

முல்லை நில வாழ்க்கையில் நெல்லும், புல்லுமான சிறிய வகை தானியங்களின் உறையினை நீக்குவதற்கு மனிதன் கண்டுபிடித்த கருவி தான் உரலும், உலக்கையும் பண்டைக் காலத் தொழில் நுட்பத்தின் எளிமையான வெளிப்பாடு உலக்கை.

கனமான நான்கு அடி நீள உலக்கையைக் கொண்டு கல்லுரலில் குற்றுதல் கடுமையான உடல் உழைப்பிற்கு உரிய தொழிலாகும். எனவே குற்றும் போது பெண்கள் 'உஸ்', 'உஸ்' என்ற சத்தத்தை எழுப்புகின்றனர். சில பகுதிகளில் 'சும்மேலோ சும் உலக்காய்' என்று சொல்லுகின்றனர். முற்காலத்தில் ஆண்கள் பாடும் படகுப் பாட்டு போலப் பெண்கள் உலக்கைப் பாட்டு பாடியிருக்கிறார்கள். இதற்கு 'வள்ளைப் பாட்டு' என்று பெயர்."[9] இதனை அறியப்படாத தமிழகம் என்ற நூலில் தொ.பரமசிவம் உரைக்கிறார்.

**உலக்கை**

உலக்கை என்பதற்கு "முனையில் இரும்புப் பூண் பொருத்தப்பட்ட உருண்டை வடிவ நீனமாக இருக்கும் ஒரு மரச்சாதனம்"[10] என்று நர்மதா தமிழ் அகராதி விளக்கம் தருகிறது.

உணவு உட்கொள்ளப் பயன்படுத்தப்படுகின்ற நவதாணிய வகைகளை உரலில் இட்டு இடிப்பதற்கும், குற்றுவதற்கும் பயன்படுத்தப்பட்ட இல்லக்கருவி உலக்கையாகும்.

உலக்கையின் முனையில் உள்ள பூண் இரும்பாலும், பவளத்தாலும் அமையப்பெற்றுள்ளது. பவளத்தால் செய்த உலக்கையினைக் கையால் பற்றி வெண்மையான முத்துக்களை மாதவி குற்றினாள் என்பதை,

**"பவள வுலக்கை தையாற் பற்றித்" (சிலம்பு.காணல்வரி.20:1)**

எனும் பாடலடிகளும் மதுரையில் வசிக்கக் கூடிய மகிர், பவழ உலக்கையால் முத்தினைக் குற்றியுள்ளதை,

**“பாடல்சான் முத்தம் பவழ வுலக்கையான்**

**மாட மதுஜர மகளிர் குற்றுவரே” (சிலம்பு.வாழ்த்துக்.27:1-2)**

என்ற அடிகளும் விளக்குகின்றன.

**உலக்கை உருவகமாகப் பயன்படல்**

இளங்கோவடிகள் கரும்பிற்கு உலக்கையை உருவகப்படுத்திக் கூறியுள்ளார். இதனை

**“தீங்கரும்பு நல்லுலக்கை யாகச் செழுமுத்தம்**

**பூங்காஞ்சி நீழ லவைப்பார் புகார்மகளீர்” (சிலம்பு.வாழ்த்.26:1-2)**

எனும் பாடலடிகளின் வாயிலாக அறியப்படுகிறன்றது.

**உரல்**

உரலிற்கு, நர்மதா தமிழ் அகராதி, “வட்ட வடிவமான மேல் பரப்பின் மையத்தில் குழிவான கிண்ணம் போன்ற பகுதியையும், குறுகலான இடைப்பகுதியையும், தானியங்களைக் குத்தி எடுக்கப்பயன்படுத்தப்படுவதுமான கல்”[11] என்று விளக்கம் தருகிறது.

உரல், “இடிப்பதற்குரிய கருவி”[12] என்று மெய்யப்பன் தமிழகராதி பொருளுரைக்கிறது. இது மரத்தால் ஆனது. நன்கு முதிர்ச்சிப் பெற்ற பெரிய அளவிலான மரத்தினைக் கொண்டு உரல் செய்துள்ளனர். உரல் கருங்கல்லாலும் செய்யப்படுவதுண்டு. இன்றும் நாட்டுப்புறத் தமிழர்களிடையே பெரிதும் பயன்பட்டு வரும் முக்கிய இல்லக்கருவி உரலாகும். உரலில் தானியங்களை இட்டு ஒருவர் மட்டும் இடிக்கும் வழக்கமும், இருவர் இரு உலக்கையைக் கொண்டு, எதிர் எதிர் புறம் நின்று உரலில் இடிக்கும் வழக்கமும் உண்டு. உரலில் நெல்லை இட்டுக் குற்றி உமியை நீக்கி அரிசி எடுத்துச் சமைத்துள்ளனர். விழாக்காலங்களில் அரிசியைக் குற்றி இனிப்பு செய்ய மாவு பயன்படுத்தியுள்ளனர். நாட்டுப்புறங்களில் இன்றும் திருவிழாக்காலங்களில் தெய்வங்களுக்கு மாவிடித்து வைத்து வழிபடும் வழக்கம் நடைமுறையில் உள்ளது.

நெல்லைக் குற்றி உமியை நீக்கி அரிசியாக்க உரல் பயன்படுத்தியதை,

**“யானை வெண்மருப் புலக்கை யறையுரல் ஐவனம்இடித்த”**[13]

என்னும் சீவகசிந்தாமணி பாடலடி கூறுகிறது.

சந்தன மரத்தால் ஆன உரலில் பெரிய முத்துக்களைப் போட்டு வஞ்சி நகரத்துப் பெண்கள் யானையின் தந்தத்தினைக் கொண்டு குற்றியதை,

**“சந்துரற் பெய்து தகைசா லணிமுத்தம்**

**வஞ்சி மகளிர் குறுவரே வான்கோட்டால்” (சிலம்பு.வாழ்த்.28:1-2)**

எனும் பாடல் விளக்குகிறது. இதிலிருந்து உரலில் குற்றுவதற்கு உலக்கை யானையின் தந்தத்தினைப் பயன்படுத்தியுள்ளமை அறியமுடிகின்றது.

**ஏணி**

ஏணி என்பதற்கு, “உயரமான இடத்தை ஏறி அடைவதற்கு வசதியாக நீண்ட இரு மூங்கில்களுக்கு இடையே குறுக்குச் சட்டங்களை இணைத்துச் செய்யப்பட்ட ஒரு அமைப்பு”[14] என்று நர்மதா தமிழ் அகராதியும், “மேலே ஏறவும், கீழே இறங்கவும் வசதியாக இரண்டு நீண்ட உரோகம் அல்லது மூங்கில் வளைகளை உலோகத்தால் அல்லது மூங்கிலால் படிப்படியாகச் சீராக இணைத்து உருவாக்கப்பட்ட ஒரு கருவி”[15] என பேரகராதியும் உரைக்கின்றன. இதிலிருந்து ஏணியானது ஏறுவதற்குரிய கருவி என்பதை அறியமுடிகிறது.

சேக்கிழார் மூழ்கியவர்களின் பாவம் போக்கும் தடாகத்திற்கு உவமையாக ஏணியைக் கூறியுள்ளார். இதனை,

**“பாங்கு மூன்றுல கத்தின் உள் ளோரும்**

**பரவு தீர்த்தமாம் பைம்புனல் கேணி” (பெரிய.1155:2)**

என்ற பாடல் மூலம் அறியமுடிகிறது. இதில் படி என்பது “ஏணி” என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது.

**மண்ணாலான கருவிகள்**

மண்கலட்தொழில் மூலம் இல்லறங்களுக்குத் தேவையான விளக்கு, அடுப்பு, சமையல் மற்றும் உண்ணப் பயன்படும் கருவிகள் செய்து பயன்படுத்தியுள்ளனர். மண்ணால் செய்த பொருட்களைத் தீயினாற் சுட்டு அதன் கடினத் தன்மையைக் கூட்டியுள்ளனர். மண் கொண்டு செய்யும்

பொருட்கள் அனைத்தும் எளிதில் உடையும் தன்மையைக் கொண்டுள்ளதால், அதனைக் கையாளும் போது மிகவும் கவனத்துடன் செயல்பட வேண்டும்.

தாம் வாழும் மண் மீதும் சுற்றியுள்ள மரம், பறவை, விலங்குகள் மீதும் அன்பு கொண்டு வாழ்ந்தவர்கள் தமிழர்கள். தாம் கொண்ட ஈடுபாட்டின் மூலம் அவற்றைப் பற்றிய அறிவையும் பெற்றனர். மண்ணின் வகைகளையும், அவற்றால் தமக்குக் கிடைக்கும் பயன்களையும் அறிந்திருந்தனர். மண்ணியல் அறிவைப் பெற்றிருந்த பழந்தமிழர்கள் "ஆற்றுமண், சேற்றுமண், காட்டுமண், உதிரி மண், மலை மண், குளத்து மண்"[16] என ஆறாக வகைப்படுத்தியுள்ளதாக மாத்தளை சோமு குறிப்பிடுகிறார்.

**விளக்கு**

விளக்கானது, ஒளிதருங் கருவியாகும். பண்டைக் கலை விளக்கின் தோற்றம் பற்றி, "ஆதியில் குகையில் மனிதன் வசித்த காலத்திலேயே விளக்கைப் பயன்படுத்தி வந்தான். உருகிய கொழுப்பு அவ்விளக்கில் எரி பொருளாகப் பயன்படுத்தினான்."[17] என்றும், விளக்கினை எறியச் செய்வதற்காக, "விளக்கெண்ணெய், இலுப்பெண்ணெய், வேப்பெண்ணெய் முதலியவை இந்தியாவில் மண்ணாலான அகல் விளக்குகளில் நீண்ட காலமாக எரிபொருளாகப் பயன்பட்டு வந்தன. பித்தளை, வெண்கலம், வெள்ளி ஆகியவற்றாலான இலட்சுமி விளக்கு, குத்து விளக்கு முதலியவற்றைச் சிறந்த வேலைப்பாடுகளுடன் செய்து பயன்படுத்தினர். மின்சார விளக்குகள் பெரிதும் பயன்படும் இக்காலத்திலும், திருமணம் போன்ற முக்கியமான சடங்குகளின் போது சாதாரண விளக்கையும் பயன்படுத்துவது இந்திய வழக்கமாக இருந்து வருகிறது."[18] என்றும் கலைக்களஞ்சியம் குறிப்பிடுகிறது. பண்டைத் தமிழர்கள் முதல் இன்று வரையிலும் தமிழர்களின் இல்லற வாழ்வியலில் விளக்கானது ஓர் முக்கிய அங்கமாகத் திகழ்கிறது. இதன் மூலம் மக்களின் வாழ்வியலில் விளக்கின் பயன்பாட்டை அறிய உணரலாம்.

மண் சுட்டியில், எண்ணெய், திரி இவை இரண்டும் சேர்ந்துத் தீச்சுடர்விட்டு எறியும் அமைப்பே விளக்கு ஆகும். நெடுநல்வாடையில்

மாலைப்பொழுதில் பெண்கள், விளக்கேற்றி, நெல்லும், மலரும் தூவி வழிபட்டதை,

**"... பொழுதறிந்து**

**இரும்புசெய் விளக்கின் ஈர்ந்திரிக் கொளீஇ**

**நெல்லும் மலரும் தூஉக் கைதொழுது"[19]**

என்னும் பாடலடிகள் கூறுகின்றன.

பெரியபுராணத்தில் நமிநந்தியடிகள் சிவபிரானுக்கு விளக்கு ஏற்றுவதற்கு நெய் வேண்டி ஒரு மனையில் கேட்க, அது சமணர்கள் வாழும் மனை என்பதால் நாயனாரிடம் நெய் இல்லை நீங்கள் விளக்கு எரிக்க வேண்டுமானால் தண்ணீரை முகந்து எரியுங்கள் என்று ஏளனமாக உரைத்ததை,

**"ஒழிந்து அங்கு அணைந்து மனையில் விளக்கு**

**உறுநெய் வேண்டி உள்புகலும்" (பெரிய.1879:3)**

**"நெய் இங்கு இல்லை விளக்கு எரிப்பீர்**

**ஆகில் நீரை முகந்தெரித்தல்" (பெரிய.1880:2)**

என்ற பாடல்களின் மூலம் அறியமுடிகிறது. இதிலிருந்து நெய் பயன்படுத்தி விளக்கினைத் தமிழர்கள் ஏற்றியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**விளக்குத் திரி**

வெண்மையானப் பஞ்சு திரியாலான விளக்குகளை மகளிர் ஏந்தி, செங்குட்டுவனை உலகை ஆளும் மன்னன் வாழ்க எனப் போற்றினர். இதனை,

**"வெண்டிரி விளக்க மேந்திய மகளிர்**

**உலக மன்னவன் வாழ்கென் றேத்திப்" (சிலம்பு.நடுகற்.6-7)**

எனும் பாடலடியின் மூலம் அறியமுடிகின்றது. இதிலிருந்து விளக்கில் திரி பயன்படுத்தியுள்ளமையும், அவை வெண்மையான நிறத்தினைக் கொண்டுள்ளமையும் அறியமுடிகிறது.

**விளக்கின் தன்மை**

சீதை வருந்தும் போது நெய் விளக்கு அச்சீதையின் வெப்பத்தை மிகுதியாக்குமென்று தோழியர் கருதி அவற்றை நீக்கிவிட்டு மணி விளக்கால் வெளிச்சம் உண்டாக்கியதை,

**"தூண்டல் செய்யா மணிவிளக்கின் சுடரா லிரவைப் பகல்செய்தார்"**

**(கம்ப.பால.631:4)**

எனும் பாடலின் மூலம் அறியமுடிகிறது. இதிலிருந்து நெய் விளக்கில் வெப்பம் மிகுதியாக இருக்கும் என்பதும், மணி விளக்கில் வெப்பம் குறைவாக இருக்கும் என்பதும் புலப்படுகிறது.

**தமிழர் பண்பாட்டில் விளக்கு**

தமது மனைகளுக்கு வரும் விருந்தினருக்கு விருந்தோம்பல் செய்யும் போது மனைகளில் விளக்கை ஏற்றி இருளைப் போக்கியுள்ளனர். விளக்கினை ஏற்றி விருந்திட்டுள்ளனர். இச்செயலானது தமிழருகுரிய சிறப்புகளில் ஒன்று.

பரவையார், சுந்தரர், சேரமான் ஆகிய இருவரையும் வரவேற்றுப் பல்வகையான உணவு, கறி வகைகள் சமைத்துத் தூய ஆடை பரப்பி உண்கலம் அமைத்து விளக்கு ஏற்றி அமுது படைத்ததை,

**"பரிகலமும் பாவாடை**
**பகல்விளக்கும் உடன் அமைத்துத்**
**திருஅமுது செய்வித்தார்**
**திருந்திய தேன் மொழியினார்" (பெரிய.3876:3-4)**

எனும் பாடல் விளக்குகிறது.

**விளக்கு ஏற்றும் காலம்**

மாலைப் பொழுதில் இல்லற மகளிர் தங்களின் மனைகளில் விளக்கு ஏற்றியுள்ளனர். இதனை,

**"எல்வளை மகளீர் மணிவிளக் கெடுப்ப**
**மல்லன் மூதூர் மாலைவந் திறுத்தென" (சிலம்பு.அந்தி.19-20)**
**"மாலை மணிவிளக்கங் காட்டி யிரவிற்கோர்"**

**(சிலம்பு.கனாத்திறமுரைத்த.3)**

**“அந்தி யந்தணர் செந்தீப் பேணப்**

**பைந்தொடி மகளிர் பலர்விளக் கெடுப்ப”** **(மணி.மணிமே.133-134)**

எனும் பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது. இது மங்கல நிகழ்வாகக் கருதப்பட்டு தற்பொழுது வரை தொடர்கின்றது.

**பாவை விளக்கு**

பாவை விளக்கு என்பதற்கு, “பெண் கையில் தாங்கி நிற்பது போல அமைக்கும் விளக்கு, பதுமை விளக்கு”[20] என்று மெய்யப்பன் தமிழ் அகராதி பொருள் கூறுகிறது. ஊர்வலமாக வரும் இந்திரனை மனைகள் தோறும் பாவை விளக்கு ஏற்றி வைத்து வரவேற்புச் செய்ததை,

**“பாவை விளக்குப் பசும்பொற் படாகை**

**தூமயிர்க் கவரி சுந்தரச் சுண்ணத்து**

**மேவிய கொள்கை வீதியிற் செறிந்தாங்”** **(சிலம்பு. இந்திர.154-156)**

என்று சிலப்பதிகாரமும்,

இந்திர விழாவில் இந்திரன் கோயில் வாயிலில் பாவை விளக்கு ஏற்றப்பட்டுள்ளதை,

**“றோரண வீதியும் தோமறு கோட்டியும்**

**பூரண கும்பமும் பொலம்பா லிகைகளும்**

**பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்”** **(மணி.விழாவு.43-45)**

என்று மணிமேகலையும் உணர்த்துகின்றன.

**வரவேற்பில் விளக்கு**

திருநாவுக்கரசரையும், திருஞானசம்மந்தரையும், தொண்டர்களையும் வீட்டு வாசலில் விளக்கேற்றி வரவேற்புச் செய்துள்ளனர். இதனை,

**“மாடவீதி அலங்கரித்து**

**மறையோர் வாயில் மணிவிளக்கு**

**...**

**கூட மகிழ்ந்து விண்ணிழிந்த**

**கோயில் வாயில் சென்றணைந்தார்”** **(பெரிய.1521)**

எனும் பாடலும் நம்பியாரூரரை வரவேற்கும் வகையில் விளக்குகளை வாயில்களில் வரிசையாக வைத்து வரவேற்பு செய்துள்ளதை,

**"ஒளிநெடு மணி விளக்கும்**

**உயர் வாயில் தொறும் நிரைத்தார்" (பெரிய.266:4)**

எனும் பாடலடிகளும் விளக்குகின்றன.

**விளக்கு உவமையாகப் பயன்படல்**

கம்பர் விதேக நாட்டு வருணனையில், அந்நாட்டுச் சோலைகளை வருணிக்கையில் அசோக மரங்களின் மலர்களுக்கு விளக்குகளை உவமையாகக் கூறியுள்ளார். இதனை,

**"அரும்பு நாண்மல ரசோகங்க ளலர்விளக் கெடுப்ப"**

**(கம்ப.பால.540:2)**

என்னும் அடியில் உணரலாம்.

பெரியபுராணத்தில் முத்துநாதனின் வஞ்சனை மனத்திற்குக் கருமையைத் தன்னுள்ளே வைத்திருக்கும் விளக்கானது உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதை,

**"மைபொதி விளக்கே என்ன**

**மனத்தினுள் கறுப்பு வைத்துப்**

**பொய்தவ வேடம் கொண்டு**

**புகுந்தனன் முத்தநாதன்" (பெரிய.473:3-4)**

எனும் பாடலடி விளக்குகிறது.

விளக்கில் எண்ணெய், நெய் கொண்டு எறியச் செய்துள்ளனர். பெரியபுராணத்தில் நமிநந்தியடிகள் சிவபெருமானின் அருள் பெற்று, திருவாரூர் திருக்குளத்தில் நீர் எடுத்துச் சிவபெருமான் திருத்தலத்தில் விளக்கேற்றியுள்ளார். இதனை 1882, 1883, 1884, 1885, 1886, 1887, 1888 எனும் பாடல்களில் பதிவு செய்துள்ளனர்.

**உலோகங்களாலான கருவிகள்**

மனிதனின் சிந்தனைத் திறனால் உலோகங்களின் கண்டுபிடிப்புக்குப் பின்னர் மிகப்பெரும் அளவில் வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. உலோகங்களின்

தன்மைகளை உணர்ந்த கொல்லர்கள் இல்லங்களில் பயன்படுத்தக் கூடிய அரிவாள், நாழிப்படி, சமையல் மற்றும் உண்கலன்கள் போன்ற பல்வேறு வகை இல்லக்கருவிகளைச் செய்து தந்துள்ளனர். உலோகங்களால் செய்யப்பட்ட கருவியானது எளிதில் சிதைவுறாது நீடிக்கும் தன்மையைக் கொண்டதாகும்.

**அரிவாள்**

அரிவாள், "பெரும்பாலும் உள் வளையான வெட்டும் பரப்புடைய இரும்புக்கருவி"[21] என்றும், "புள்ளம், கொடுவாள், குயம்"[22] என்றும் பல்வேறு பெயரிட்டு வழங்குவதைக் கிரியா தற்காலத் தமிழகராதியும், தமிழ்ச் சொற்றொடர் அகராதியும் குறிப்பிடுகின்றன.

கோசல நாட்டு அன்னச்சாலையில் பிறை முகத்தைத் தலையிலே உடைய இரும்பால் ஆன அரிவாளால் காய்கறிகள் வெட்டப்பட்டுக் குவிந்து கிடந்துள்ளன என்பதனை,

> **"பிறைமு கத்தலைப் பெட்பி னிரும்புபோழ்**
>
> **குறைக றித்திரள் குப்பை பருப்பொடு" (கம்ப.பால.69:1-2)**

என்ற பாடல் விளக்குகிறது.

இடையர்குல மடந்தையர் பலா, வெள்ளரிக்காய், மாதுளை, மாங்கனி, வாழைக்கனி ஆகியவற்றைச் சமைப்பதற்குக் கண்ணகியிடம் கொடுத்தனர். இதனைத் தம் மெல்லிய விரல்கள் சிவக்கும்படி கண்ணகி அரிவாள் கொண்டு அரிந்தாள் என்பதை,

> **"இடைக்குல மடந்தைய ரியல்பிற் குன்றா**
>
> **. . .**
>
> **கொடுவாய்க் குயத்து விடுவாய் செய்யத்" (சிலம்பு.கொலை.22-30)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது.

**நாழி**

நாழி ஓர் அளவைக் கருவியாகும். "பண்டைக் காலத்திய ஒரு முகத்தலளவை"[23] கருவி என்று பேரகராதியும், நாழியைக் கொண்டு நெல்

முதலிய தானிய வகைகளை அளவை செய்துள்ளனர் பண்டைத் தமிழ் மக்கள். "அளக்கும்படி"[24] என்று மெய்யப்பன் தமிழகராதியும் சுட்டுகின்றன.

நாழியானது அளக்கப் பயன்பன்பட்டதைச் சீவகசிந்தாமணியின்,

**"நாழியுள் இழுது நாகுஆன் கன்றுதின்று ஒழித்தபுல் தோய்த்து"**[25]

என்னும் அடிகள் உரைக்கின்றன.

மலைமகளான உமையம்மையார்க்குச் செய்யும் பூசையை ஏற்றுக் கொண்ட சிவபிரான் இடைவிடாது அறம் வளர்ப்பதற்காக, வித்தாக இரு நாழி நெல் கொடுத்தார். இதனை,

**"இடையறா அறம் வளர்க்கும்வித் தாக**
**இகப ரத்திரு நாழிநெல் அளித்துக்"** (பெரிய.1152:2)

என்ற பாடலடி விளக்குகிறது. இதிலிருந்து நெல்லை அளந்து கொடுக்க நாழி பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

**துணியாலான கருவிகள்**

துணிகளைக் கொண்டு இல்லங்களுக்குத் தேவையான குடை, பை போன்ற கருவிகளைச் செய்து பயன்படுத்தியுள்ளனர். துணிகளைப் பயன்படுத்திச் செய்யும் கருவிகள் சில காலம் மட்டுமே பயன்படும். பின்னர் கிழிந்து விடும். இது நிலைத் தன்மையற்ற கருவி. இதனைப் பயன்படுத்துவது எளிது.

**குடை**

குடை என்பது, "துளைத்து ஊடுருவுதல்; தோண்டுதல்; துளைப்பது போன்ற உணர்வு உண்டாகுதல்; துருவித்துருவித் தேடுதல்; மீண்டும் மீண்டும் கேள்விகள் கேட்டு விசாரித்தல்; மழை, வெயில் போன்றவற்றில் இருந்து காத்துக்கொள்ளத் துணி பொருத்தப்பட்டு மடக்கி விரிக்கக் கூடியதும் கையில் பிடித்துச் செல்லக் கூடியதுமான சாதனம்; கோவில் திருவிழா, திருமணம் போன்றவற்றில் எடுத்துச் செல்லப்படும் வண்ணத் துணிகளால் அமைக்கப்பட்ட அமைப்பு"[26] என்று நர்மதா தமிழகராதியும்,

“கவிகை; அரசாட்சி; குடைக்கூத்து; பாதற்குறட்டின் குமிழ்; நீருண்ணும் ஓலைப்பட்டை; குடைவேல்; உட்டுளைப் பொருள்”[27] என்று மெய்யப்பன் தமிழ் அகராதியும் விளக்கம் தருகின்றன.

தமிழரின் பழம்பெரும் இலக்கண நூலான தொல்காப்பியம் அரசர்களுக்குரிய பொருளாகக் குடையைக் கூறியுள்ளது. இதனை,

**“படையும் கொடியும் குடையும் முரசும்”**[28]

என்னும் நூற்பா விளக்கும்.

இராமன் மன்னனாக முடிசூட்டுவதற்கு இசைந்ததை அறிந்த தசரதன் அவனைத் தழுவி, தன் வெண்குடையுடன் அரண்மனையைச் சேர்ந்தான் என்பதை,

**“குரிசில் சிந்தையை மனக் கொண்ட கொற்றவெண் குடையான்”**

**(கம்ப.அயோத்தி.73:1)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது. அரசனுக்குரிய பொருளாகக் குடை உள்ளமையைக் கம்பர் கூறியுள்ளார்.

குடையைக் கவிகை என்ற பெயரிலும் அழைத்துள்ளனர். இதனை,

**“கொடிதழை கவிகைவான் றொங்கல் குஞ்சரம்”**

**(கம்ப.ஆரணிய.415:1)**

எனும் பாவடி மூலம் அறியமுடிகின்றது. தழை என்பது மயிற்பீலிக் குடை என்றும், கவிகை என்பது குடை என்றும் பொருள்படும்.

**திருமண நிகழ்வில் குடை**

கோவலன் கண்ணகி திருமணத்தைப் பெற்றோர்கள் நிச்சயித்த நிகழ்வில் அரசன் உலா வரும் போது எடுத்து வருவதைப் போல் வெண்குடைகள் பிடித்து வந்ததை,

**“இருபெருங் குரவரு மொருபெரு நாளான்**
**மணவணி காண மகிழ்ந்தனர் மகிழ்ந்துழி**
**…**
**முரசியம்பின் முருடதிர்ந்தன முறையெழுந்தன பணிலம் வெண்குடை”**

**(சிலம்பு.மங்கல.41-46)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

**பிற கருவிகள்**

விசிறியானது, "வெயில் கடுமையாக உள்ள கோடைக் காலத்தில் செயற்கை முறையில் காற்றோட்டத்தை உண்டாக்கிக் கொள்ளுவதற்குப் பயன்படும் எளிய சாதனம். சாதாரண விசிறி இரு வகைப்படும். மடிக்க முடியாதவாறு எப்போதும் விரிந்த நிலையிலே இருப்பது ஒரு வகை. தேவையான போது மட்டும் விரித்துப் பயன்படுத்திக் கொண்டு தேவையற்ற போது மடித்து வைத்துக் கொள்ளக்கூடியது இரண்டாம் வகை. பனையோலை, தென்னையோலை, சந்தனக்கட்டை, பட்டுப் போன்ற துணி, தோல், வெட்டிவேர், மயில் இறகு போன்ற இறகுகள் ஆகிய பல பொருள்கள் விசிறி செய்யப் பயன்படுத்தப்பட்டுள்ளன. பண்டைக் காலம் முதல் அன்றாட வாழ்க்கையிலும் மதசம்மபந்தமான சடங்குகளிலும் விசிறி இடம்பெற்றுள்ளது. சூடாமணி நிகண்டில் ஆலவட்டம் இரண்டு வகைப்படுமென்றும், அவற்றுள் சிற்றால வட்டம், பீலி, வீசனம், சாந்தாற்றி, விசிறி என்று பெயர் பெறுமென்றும், பேரால வட்டம், ஆல வட்டம், கால்செய் வட்டம், உக்கம், தால விருந்தம் என்று பெயர் பெறும் என்றும் கூறப்பட்டுள்ளன. திவாகரத்தில் விசிறி என்ற பெயர் வந்துள்ளது. அரசர்கட்குரிய சின்னமாகிய கவரியும் விசிறியின் பாற்படும். கவரி, சாமரை, சாமரைக்கவரி என இது பல பெயருடன் வழங்கியிருக்கிறது. சாமரை, சாமரம் எனவும் வழங்கியுள்ளது"[29] என்று கலைக்களஞ்சியம் உரைக்கிறது.

காற்றைத் தரும் வலிய கைப்பிடி உடைய விசிறியைக் கொண்டு மெல்லிய காற்றை வீசி வசிட்டனை முர்ச்சை தெளிந்து அறிவை உண்டாக்கச் செய்தான் தசரதன். இதனை,

**"சீதப் பனநீ ரளவித் திண்கா லுதவுந் தண்கால்**
**போதத் தளவே தவழ்வித் தின்சொற் புகலா நின்றான்"**

**(கம்ப.அயோத்தி.336:1-2)**

எனும் பாடல் விளக்குகிறது.

உதயகுமாரன் அரண்மனையில் வெண்ணிறமுடைய சாமரையினைக் கையிற் கொண்டவராக மகளிர் இருபக்கத்தும் நின்று வீசிக் கொண்டிருந்தனர் என்பதை,

**"வெண்டிரை விரிந்த வெண்ணிறச் சாமரை**

**கொண்டிரு மருங்குங் கோதையர் வீச" (மணி.உதய.49-50)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இதிலிருந்து சாமரை வெண்மையான நிறத்தினைக் கொண்டது என்பது புலப்படுகிறது.

மான் மயிர் கொண்டு சாமரையானது உருவாக்கப்பட்டுள்ளதை,

**"மான்மயிர்க் கவரிம் மதுவின் குடங்களும்" (சிலம்பு.காட்சி.38)**

எனும் பாடலடி விளக்கும். இதில் கவரி என்பது சாமரை என்று பொருள்படும்.

**வரவேற்பில் சாமரை**

ஊர்வலமாக வரும் இந்திரனை வெண்சாமரை வீசி வரவேற்பு செய்துள்ளனர். இதனை,

**"தூமயிர்க் கவரி சுந்தரச் சுண்ணத்து**

**மேவிய கொள்கை வீதியிற் செறிந்தாங்" (சிலம்பு.இந்திர.155-156)**

எனும் பாடலடியின் மூலம் அறிய முடிகின்றது.

**நாழிகை வட்டில்**

நாழிகை வட்டில் என்பது காலத்தை அறியும் கருவி. கடிகாரம் போன்றது. "நாழிகையை அறிவிக்கும் கருவி"[30] என்கிறது அகராதி.

அரசனுடைய மாளிகையில் குறுகிய நீரையுடைய நாழிகை வட்டிலால் நாழிகைக்கணக்கர், நாழிகை கூறும் பொழுது அரசனைப் புகழ்ந்து முழங்கினார்கள். இதனை,

**"முழங்குநீர் முன்றுறைக் கலம்புணர் கம்மியர்" (மணி.துயில்.70)**

எனும் பாவடி மூலம் அறியமுடிகிறது.

**துருத்தி**

துருத்தி என்பதற்கு, "ஆற்றிடைக்குறை; தோல்; ஊதுந்துருத்தி; உலைத்துருத்தி; உலையூது கருவி; தோற்பை; நீர்வீசுங் கருவி; தோலால் அமைந்த ஓர் இசைக் கருவி; ஒத்து; வயிறு; கவறாட்டத்து வழங்கும் ஒரு

குழூஉக்குறி; துட்டப்பெண்”[31] என்று மெய்யப்பன் தமிழ் அகராதி விளக்கம் கூறுகிறது.

பெண்கள், மணிகள் இழைத்துச் செய்யப்பட்ட உள்துளைகள் கொண்ட துருத்தியிலிருந்து செங்குங்குமக் குழம்பை வீசி விளையாடியுள்ளனர். இதனை,

**“தூமணிப்பொன் புனைநாளத் துருத்தி வீசும்**

**சுடர்விடு செங் குங்குமநீர்த் துவலை தோய்ந்த”** (பெரிய.1177:3)

எனும் பாடல் விளக்குகிறது. இதிலிருந்து துருத்தி ஓர் விளையாட்டுக் கருவி என்பது புலப்படுகிறது.

## தொகுப்புரை

- நாடோடி வாழ்கை வாழ்ந்த மனிதர்கள் வளர்ச்சியுற்று நிலையாக ஓரிடத்தில் குடும்பம் என்ற அமைப்பில் ஒரு நிலைத்த வாழ்வினை வாழத்தொடங்கியுள்ளனர். இவ்வாழ்வில் இல்லக் கருவிகளைக் கைக்கொண்டுள்ளனர்.
- கல்லின் கடினத் தன்மையை உணர்ந்த பண்டைத் தமிழர்கள் தங்களின் இல்லறங்களுக்குத் தேவையான அம்மி, உரல் போன்ற கருவிகளைக் கல்லின் துணைகொண்டு உருவாக்கியுள்ளனர்.
- அம்மியானது கருங்கல்லினால் செவ்வக வடிவில் செய்யப்பட்ட அரைகல். இதனைக் கொண்டு சமையல் செய்வதற்குப் பயன்படும் பொருட்களை அரைப்பதற்கும் நசுக்குவதற்கும் பயன்படுத்தியுள்ளனர். இதனைத் திருமண நிகழ்வில் மங்கலப் பொருளாகவும் வைத்துள்ளனர்.
- மத்தினைக் கொண்டு தயிர் கடைந்து வெண்ணெய் எடுத்துள்ளனர். மத்தானது மரத்தால் செய்யப்படுவது. மத்தின் நடுப்பகுதியில் பள்ளம், மேடு பள்ளம் என்ற அமைப்பில் கயிறு கொண்டு சுற்றுவதற்கு ஏற்ற வகையில் வடிவமைக்கப்பட்டிருக்கும்.

- உலக்கையானது முனையில் இரும்புப் பூண் பொருத்தப்பட்ட உருண்டை வடிவில் நீளமானதாக இருக்கும் மரச்சாதனம். இதனைக் கொண்டு நவதானியங்களை உரலில் இட்டுக் குத்தவும் இடிக்கவும் பயன்படுத்தியுள்ளனர்.

- சந்தன மரத்தால் ஆன உரலில் பெரிய முத்துக்களைப் போட்டு வஞ்சி நகரத்துப் பெண்கள் யானையின் தந்தத்தினைக் கொண்டு குற்றியுள்ளனர் என்று சிலப்பதிகாரம் உரைக்கிறது.

- மண்கலத்தொழில் மூலம் இல்லறங்களுக்குத் தேவையான விளக்கு, அடுப்பு போன்ற பயன்பாட்டுக் கருவிகள் செய்யப்பட்டுப் பயன்படுத்தியுள்ளனர். மண்ணால் செய்த பொருட்களைத் தீயினாற் சுட்டு அதன் கடினத் தன்மையைக் கூட்டியுள்ளனர்.

- விளக்கானது ஒளிதரும் கருவியாகும். விளக்கை, விளக்கெண்ணெய், இலுப்பெண்ணெய், வேப்பெண்ணெய் முதலியவை கொண்டு விளக்கேற்றியுள்ளனர்.

- தமது மனைக்கு வரும் விருந்தினருக்கு விருந்தோம்பல் செய்யும் போது விளக்கினை ஏற்றி விருந்திட்டுள்ளனர். இப்பண்பாடானது தமிழர்க்கு உரித்தான ஒரு தனிச் செயலாகும்.

- உலோகங்களின் தன்மை உணர்ந்த கொல்லர்கள். அரிவாள், நாழி போன்ற பல்வேறு வகை இல்லறக் கருவிகளை உருவாக்கியுள்ளனர். உலோகங்களால் செய்யப்பட்ட கருவிகள் எளிதில் சிதைவடைதில்லை.

- இல்லத்தில் கல்லாலும், மண்ணாலும், துணியாலும், மரத்தாலும், உலோகத்தாலும் கருவிகளை உருவாக்கி அதனைப் பயன்படுத்தித் செம்மையுற வாழ்ந்துள்ளனர்.

## சான்றெண் விளக்கம்

1. தமிழ்லெக்சிகன், தொகுதி-6, ப.337

2. மேலது, ப.336

3. நர்மதா தமிழ் அகராதி, ப.100

4. தமிழ் சொற்றொடர் அகராதி, பக்.213-214

5. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-4, ப.234

6. கிரியா தற்கால தமிழ் அகராதி, ப.33

7. மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.927

8. சீவகசிந்தாமணி, பா.423:1-3

9. தொ.பரமசிவம், அறியப்படாத தமிழகம், பக்.39-40

10. நர்மதா தமிழ் அகராதி, ப.150

11. மேலது, ப.145

12. மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.191

13. சீவகசிந்தாமணி, பா.1562:1

14. நர்மதா தமிழ் அகராதி, ப.174

15. பேரகராதி, ப.242

16. சோமு, வியக்க வைக்கும் தமிழர் அறிவியல், ப.54

17. கலைக்களஞ்சியம், தொகுதி-9, ப.419

18. மேலது, ப.420

19. நெடுநல்வாடை, பா.41-43

20. மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.827

21. கிரியா தற்காலத் தமிழ் அகராதி, ப.41

22. தமிழ்ச் சொற்றொடர் அகராதி, ப.263

23. பேரகராதி, ப.621

24. மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.720

25. சீவகசிந்தாமணி, பா.487:1-2

26. நர்மதா தமிழ் அகராதி, ப.279

27. மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.380

28. தொல்காப்பியம், நூ.1571

29. கலைக்களஞ்சியம், தொகுதி-9, ப.299

30. மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.720

31. மேலது, ப.65

- தண்டியலங்காரம் முதல் முதலாக காப்பியங்களுக்கான வரையறைகளைத் தருகின்றது. இதனை அடுத்து எழுந்த அணியிலக்கண, யாப்பியல், பாட்டியல் நூல்களும் காப்பியத்திற்கான இலக்கணத்தைச் சிறுசிறு மாறுபாடுகளுடன் விளக்கியுள்ளன.

- இசைக் கருவிகளுள் தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி ஆகியவை அக்கால மக்களின் வாழ்வியல் பயன்பாட்டில் இருந்துள்ளமையைக் காப்பியங்கள் எடுத்து இயம்புகின்றன.

- தமிழகத்தில் நிகழ்ந்த அகழ்வாய்வுகளில் கிடைத்துள்ள பொருள்கள் தமிழரின் நாகரிக வாழ்வை மட்டுமல்ல, பொருள் சார்ந்த கருவிப் பண்பாட்டையும் காட்டுகின்றன.

- எரிவேல், ஈட்டி, குத்துவாள் அல்லது பட்டாக்கத்தி, அம்பு போன்ற வேல், இருபுறமும் கூர்மையான வாள், மூவிலைவேல் (திரிசூலம்), கூரிய அம்புதலை, கைகோடாரி, வாள், வளைந்த கத்தி, இருவளைவான கொக்கித்தடி, பலி வாள், அம்புதலை, வேலாயுதம், கோடாரி, சூலாயுதம், கேடயம், அரிய ஆயுதம், சிறிய உடைவாள், சிறிய ஈட்டி, செங்கோணவாயுள்ள ஈட்டி, கூம்புவாய் ஈட்டி, கூரிய வாயுள்ள ஈட்டி, ஈட்டிப் பிடியுள்ள குழிவான குழாய், குழிவான விழிம்புள்ள குத்துவாள் போன்ற பல்வேறு வகையான கருவிகள் தமிழகத்தில் நிகழ்ந்த அகழ்வாய்வுகளில் கிடைத்துள்ளன.

- இறந்த விலங்குகளின் தோலினைக் கொண்டு தோற்கருவிகள் செய்துள்ளனர். தோற்கருவிகள் வன்கருவிகள், மென்கருவிகள், சாமக்கருவிகள், தலைக்கருவிகள், இடைக்கருவிகள், கடைக்கருவிகள், வீரக்கருவிகள் என்று வகைப்படுத்தப்பட்டுள்ளன.

- பறையை இசைக்காவும், செய்தியை அறிவிக்கும் கருவியாகவும் பயன்படுத்தியுள்ளனர். பறையின் வகைகளாக ஆறெறிப்பறை, கிணைப்பறை, சாப்பறை, ஆகுளிப்பறை, சல்லரிப்பறை, கரடிப்பறை,

பாடகம் எனும் ஒருகண் பறை, தொண்டகப்பறை, சிறுபறை முதலியவை இடம்பெற்றுள்ளன.

- அரசனுக்குரியவைகளில் ஒன்றான முரசு ஒருமுகத் தோற்கருவி. பெரு முரசும், சிறுமுரசும் இருந்துள்ளன. முரசின் பயன்பாடு கருதி வீரமுரசு, தியாக முரசு, நியாய முரசு என்று பிரித்து, போர்க் களத்தில் வீர முரசினையும், கொடை வழங்கும் போது தியாக முரசினையும், குற்றங்களைக் களைந்து நீதி வழங்கும் போது நியாய முரசினையும் இசைத்துள்ளனர்.

- முழக்கப்படும் தோற்கருவிகள் அனைத்தையும் முழவு என்று கூறியுள்ளனர். அகமுழவு, அகப்புறமுழவு, புறமுழவு, புறப்புற முழவு. பண்ணமை முழவு, நாணி முழவு, காலை முழவு முதலிய எழு வகைகளை முழவுகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

- துடியானது பாலை நிலத்திற்குரிய பறை. இதற்கு உடுக்கை என்றும் மற்றொரு பெயர் உண்டு. இது விரைந்து முழக்கப்படுவது. நடு சிறுத்தும் ஓரங்கள் பெருத்தும் இருக்கும். துடியானது “துண்” என்ற ஒலியை எழுப்பும்.

- பம்பைப் பறையானது நீள் உருளை வடிவமுள்ள இருபறைகள் ஆகும். இதனை நான்முகப் பறை என்றும் அழைப்பர். வேட்டைக்குச் செல்லும் வேடர்கள் காட்டில் உள்ள விலங்குகளை வெளிக்கொண்டுவர பம்பைப்பறையினை இசைத்துள்ளனர்.

- குழல், ஊதுகருவிகளில் ஒன்று. பொது மன்றங்களிலும், நாட்டிய அரங்கங்களிலும் குழலை இசைத்துள்ளனர். குழலின் இனிய இசைக்கு ஆறறிவுள்ள மக்கள் மட்டுமின்றி ஐந்து அறிவுகளைக் கொண்ட விலங்குகளும், பறவைகளும் மயங்கியுள்ளன.

- இயற்கை அளித்த இசைக்கருவி சங்கு. சங்கினை ஒலி எழுப்பும் கருவியாக, வரவேற்பு, விடை கொடுத்தல், திருமணம், இறப்பு, போர்க்கள நிகழ்வுகளில் இசைத்துள்ளனர்.

- யாழ் ஒரு நரம்புக்கருவி. மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ், சீறியாழ், குறிஞ்சி யாழ், மருதயாழ், நெய்தல்யாழ் முதலியவை காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன.
- யாழ் செய்வதற்குக் கொன்றை, கருங்காலி, மென் முருங்கு, குமிழ், தணக்கு ஆகிய மரங்களைப் பயன்படுத்தியுள்ளனர்.
- போர்க்களத்தில் போர் வீரர்கள் வில், அம்பு, வாள், வேல், கேடகம், உடைவாள், ஈட்டி, சூலம், தண்டாயுதம், சக்கரம், வச்சிரம் போன்ற பல்வேறு கருவிகளைக் கையாண்டுள்ளனர்.
- நின்ற இடத்திலிருந்து தொலைவில் உள்ள ஒருவர் மீதோ, பொருள் மீதோ எய்துவதற்கு அம்பினைப் பயன்படுத்தியுள்ளனர்.
- அம்பிற்குப் பகழி, வண்டு, பானம், வாளி, நிகழ்சாரம், தோணி, கோல், அத்திரம், கங்கபத்திரம், கணை, புங்கம், பல்லம், சீலிமுகம், பத்திரி வசீகம் என்று பல பெயர்கள் உண்டு. அம்பு சரம், வாளி, கணை, வீசிகம், கோல், ஏ, பல்லம், கங்க பத்திரம், பணம் என்ற பல்வேறு பெயர்களில் காப்பியங்களில் இடம் பெற்றுள்ளன.
- வில்லிலுள்ள நாணை ஏற்றி அம்பு எய்வதற்கு ஏற்ற சாதனமாகக் கைக்கோதை எனப்பெறும் விரலுறையைப் பயன்படுத்தியுள்ளனர்.
- வேல் அரச இலை வடிவம் கொண்டது. வேலின் கூர்மைத் தன்மை குறையாமல் இருக்க வேலில் நெய் பூசி உறையுள் வைத்துப் பாதுகாத்துள்ளனர்.
- எதிர்த்து நின்று செய்யும் சுழற்றுதற்போர்க் கருவிகளில் வாள் முதன்மையான போர்க்கருவி. வாளினைக் கொண்டு பகைவர்களையும், பகைவர்களின் யானையையும், குதிரைகளையும் போரில் வெட்டி வீழ்த்தியுள்ளனர்.

- போரில் எதிரிகள் எறியும் படைக்கலங்கள் தம்மீது படாமல் தம்மைப் பாதுகாத்துக் கொள்ள தற்காப்புக் கருவியாகக் கேடகத்தினைப் பயன்படுத்தியுள்ளனர்.
- மக்கள் தங்களின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவும், பொருளியல் வளத்தினைப் பெருக்கி கொள்ளவும் பல்வேறு வகையான தொழில்களை மேற்கொண்டுள்ளனர்.
- தொழில்கள் பயிர்த்தொழில், தச்சுத்தொழில், மட்கலத்தொழில், கொல்லுத்தொழில், உலோகத்தொழில், அணிகலத்தொழில், தோல்தொழில் என பல வகைகளில் சுட்டப்படுகின்றன.
- பயிர்த்தொழில் எனும் உழவுத்தொழிலுக்கு ஏர், கலப்பை, கொழு, பரம்பு, நுகத்தடி, தார்க்கோல், அரிவாள், மண்வெட்டி, முறம், கவண், நீர் இறைக்கும் ஆம்பி, கிழார், ஏற்றம், பிழா, மதகு ஆகிய கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.
- தச்சுத்தொழிலில் மரத்தினைத் தேர்வு செய்தல் என்பது இன்றியமையாத ஒன்று. தச்சு வேலையில் உளி, இழைப்புளி, அரங்கள், துரப்பணம், ரம்பம், பரப்புத் தட்டு, மூலை மட்டம், காளப்பர், முளைமானி முதலிய பல்வேறு கருவிகள் இடம்பெற்றுள்ளன.
- உலோகங்களின் தன்மையை அறிந்த கொல்லர்கள் பல்வேறு தொழில்களுக்கு ஏற்ற தொழில் கருவிகளை இரும்பின் துணை கொண்டு வடித்துக் கொடுத்துள்ளனர். பொருட்களை அரவ, அரத்தினைப் பயன்படுத்தியுள்ளனர்.
- மாந்தர்கள் தங்களை அழகுபடுத்திக்காட்டத் தொய்யம், புல்லகம், சூளாமணி, பூணூல், உரஸ்சூத்திரம், உத்திரீயம், குதம்பை, கடிப்பு, குழை, கண்டிகை, சவடி, சரப்பளி, தோள்வளை, கடக வளை, மேகலை, வீரக்கழல், சிலம்பு, அரியகம், காற்சதங்கை, மிஞ்சி, பீலி, காலாழி போன்ற அணிகலன்களை அணிந்துள்ளனர்.

- மீன் வேட்டத்திற்கு வலை, சுருக்குவலை, தூண்டில் போன்றவற்றைப் பயன்படுத்தியுள்ளனர். வேடர்கள் வேட்டைத் தொழிலுக்கு வில், அம்பினைப் பயன்படுத்தியுள்ளனர்.
- நாடோடி வாழ்வின் பிற்பட்ட முன்னேற்ற வளர்ச்சி நிலையில் இல்லம் என்ற ஒன்றை உருவாக்கி நிலைத்த வாழ்வினை வாழத் தொடங்கியுள்ளனர். இல்லங்களில் சிறப்புற வாழ்வதற்கு இல்லக் கருவிகள் துணை செய்துள்ளன.
- இல்லத்திற்குத் தேவையான கருவிகளைக் கல், மண், துணி, மரம், உலோகங்களைக் கொண்டு உருவாக்கிப் பயன்படுத்தியுள்ளனர். எண்ணெய் வித்துக்களிலிருந்து எண்ணெய் எடுக்கச் செக்குப் பயன்பட்டுள்ளது.
- பயிர்த் தொழில் மூலம் கிடைத்த தானியங்களைக் குத்தவும், இடிக்கவும் கல் மற்றும் மரத்தாலான உரலினைப் பயன்படுத்தியுள்ளனர்.
- இல்லங்களில் சமையல் செய்வதற்குப் பயன்படக்கூடிய பொருட்களை அரைப்பதற்கும், நசுக்குவதறத்கும் அம்மியினைப் பயன்படுத்தியுள்ளனர். அம்மியை மங்கலப் பொருளாகக் கருதி திருமண நிகழ்வில் அம்மி மிதித்தல் நிகழ்வினைச் செய்துள்ளனர்.
- காப்பியங்களின் இடம்பெற்றுள்ள கருவிகளை நோக்கும்பொழுது அக்காலத் தமிழர்கள் வளர்ச்சியுற்ற செல்வ வளமிக்க, நாகரிகச் சமூக மக்களாய் விளங்கி இருந்துள்ளமை இவ்வாய்வின் மூலம் அறியமுடிகிறது. அதற்குக் கருவிகள் பயனளித்துள்ளன என்பதை உணரமுடிகிறது.
- காப்பியங்கள் தன்னிகரில்லாத் தலைவன், எதிர்நிலைத் தலைவன் மற்றும் பல வீரர்களின், அஃறிணைகளின் வீரம், ஆற்றல் அவர்களின் போர் உத்திகள், புகழ், கொடை, வீரதிறச் செயல்கள் போன்றவற்றை

விளக்குகின்றன. இந்நிலையில் அவர்கள் பயன்படுத்திய ஆயுதங்கள், கருவிகள் பதிவு செய்யப்பட்டுள்ளன.

- படைகள், தொழில்கள் போன்றவற்றைச் செய்த தச்சர், கொல்லர், வேளாண்மை செய்தோர் பயன்படுத்திய கருவிகளும் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன.
- காப்பியங்கள் சமயங்களின் அடிப்படையில் கடவுள், அவர்தம் ஐந்தொழில்களைச் சுட்டும் நிலையில் கடவுளர் பயன்படுத்திய, கடவுளருக்கு மனிதர் உருவாக்கிய கருவிகளும் அவ்வவ் சமயக் காப்பியங்களில் காணப்படுகின்றன.
- காப்பியங்களில் காணலாகும் அரச மகளிர் பயன்படுத்திய அணிகலன்களும், அவற்றை உருவாக்குவதற்குப் பயன்படுத்திய கருவிகளும் காப்பியங்களில் சுட்டப்பெற்றுள்ளன.
- தொழில், இல்லங்கள், மகளிர், ஒப்பனை, பொருளாதாரம், நாடு, நகர் வளம் போன்றவற்றை வெளிப்படுத்தும் பொழுதும் பல புழங்கு பொருட்களும் கருவிகளும் இடம்பெற்றுள்ளன. இவை அக்கால மக்களின் கருவிப் பண்பாட்டை (material culture) அறிய துணை செய்கின்றன.
- இன்றைய கருவிகள் வழிபாடு (ஆயுதப் பூஜை) போல, காப்பிய காலங்களிலும் போருக்கு, தொழில்களுக்குத் துணை புரிந்த கருவிகளை வைத்து அவற்றை அலங்கரித்து வழிபாடு நிகழ்த்தியதையும் காணமுடிகிறது.
- ஆய்வுக்குரிய நான்கு காப்பியங்களில் பாட்டுடைத் தலைவனின் சிறப்புக்களைக் கூறுதல், நிகழ்ந்த போரின் வெற்றிகள், தோல்விகளைச் சுட்டுதல் போன்ற சூழ்நிலைகளில் சிலப்பதிகாரம், கம்பராமாயணம் இரண்டிலும் மன்னர்கள் பயன்படுத்திய கருவிகள் மிகுதியாக வெளிப்படுகின்றன.

- மணிமேகலையும், பெரியபுராணமும் சமயத்திற்கு இன்றியமையாத இடம் கொடுப்பதால் அச்சமயத் தெய்வங்கள் மற்றும் அடியார்கள் பயன்படுத்திய கருவிகள், அத்தெய்வங்களுக்குரிய வழிபாட்டில் இசை, விழாக்கள் போன்ற சூழலில் பயன்படுத்திய கருவிகள் இடம்பெற்றுள்ளன.
- காப்பியங்களில், அக்கால நாட்டுப்புற மக்களின் வாழ்வியலையும் வெளிப்படுத்தும் நோக்கில் அவர்கள் தொழில்களில் பயன்படுத்திய கருவிகளும் தொழிற் கருவிகளாகக் காணப்படுகின்றன.

**மேலாய்வுக்கு உரிய களங்கள்**

1. சமயக் காப்பியங்களில் கருவிகள்
2. பத்தி இலக்கியங்களில் பயன்பாட்டுக் கருவிகள்
3. சிற்றிலக்கியங்களில் பயன்பாட்டுக் கருவிகள்

## துணைநூற்பட்டியல்

### முதன்மைச் சான்றாதாரங்கள்


1. இராமசுப்பிரமணியம் வ.த. — **பெரியபுராணம்,**
திருமகள் நிலையம்,
சுகான்ஸ் அப்பார்ட்மெண்ட்,
பழைய எண்:28,
புது எண்: 13,
சிவப்பிரகாசம் சாலை,
தி.நகர், சென்னை-600 017.
இரண்டாம் பதிப்பு-2013

2. உ.வே.சா. பதிப்பு — **சிலப்பதிகார மூலமும், அரும்பதவுரையும், அடியார்க்குநல்லாருரையும்,**
டாக்டர் உ.வே.சாமிநாதையர்
நூல் நிலையம்,
பெசண்ட்நகர்,
சென்னை-600 090.
12-ஆம் பதிப்பு-2013

3. உ.வே.சாமிநாதையர் பதிப்பு — **மணிமேகலை,**
டாக்டர் உ.வே.சாமிநாதையர் ,
நூல் நிலையம்,
2, அருண்டேல் கடற்கரைச் சாலை,
பெசண்ட்நகர்,
சென்னை-600 090.
9-ஆம் பதிப்பு-2013.

4. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் வை.மு. **கம்பராமாயணம்,**
உமா பதிப்பகம்,
171, (புதிய எண்: 18),
பவளக் காரத் தொரு,
மண்ணடி,
சென்னை-600 001.
இரண்டாம் பதிப்பு-2011

**துணைமைச் சான்றாதாரங்கள்**

5. அதியமான் ந. **சங்கு,**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு-2005.

6. அருணாசலம் மு. **தமிழ் இசை இலக்கண வரலாறு,**
கடவுள் பதிப்பகம்,
1/2 39எ, சூரியகாந்தி தெரு,
வேல் நகர், திருப்பாலை (அஞ்சல்),
மதுரை-625 014.

7. அருள்ராசு வே.சா. **பழந்தமிழகத்தில் இரும்புத் தொழில்**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
2000.

8. அறிவு ஒளி தி.நா. **இசைத்தமிழ்,**
தமிழ் ஆய்வரங்கம்,
2/25 எட்டாவது தொரு,
மறைமலை நகர்,
சென்னை.

9. ஆளவந்தார் ஆர். — **தமிழர் தோற்கருவிகள்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை-2,
பதிப்பு-1981.

10. இளங்குமரன் இரா. — **தமிழிசை இயக்கம்,**
மெய்யப்பன் தமிழாய்வகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்-608 001.

11. கந்தசாமி சோ.ந. — **இலக்கியமும் இலக்கிய வகையும்,**
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்-608 001,
முதற்பதிப்பு-2005.

12. காசிம் கா. — **மகாபாரதத்தில் அரசியல் சிந்தனை**
திருவரசு புத்தக நிலையம்,
13, தீனதயாளு தெரு,
தி.நகர்,
சென்னை-600 017,
இரண்டாம் பதிப்பு-2001.

13. காசிராசன்.இரா — **உலகக் காப்பியங்கள்,**
தமிழ்ப் பதிப்பகம்,
சென்னை-96.

14. காசிராசன்.இரா — **காப்பியம்,**
மதி பதிப்பகம்,
மதுரை-4,
முதல் பதிப்பு-2008.

15. குமரிச்செழியன் — **செம்மொழித் தமிழ்,**
சாரதா பதிப்பகம்,
ஜி.4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை-14,
முதற்பதிப்பு-2011.

16. கோபாலகிருஷ்ணமாசாரியார் வை.மு. (உ.ஆ.) — **தண்டியலங்காரம்,**
கழக வெளியீடு,
சென்னை-1,
1976.

17. கோவிந்தன் கா. — **கழுமலப் போர்,**
நாதன் பதிப்பகம்,
19, 2 வது மெயின்ரோடு,
சி.ஐ.டி. நகர்,
சென்னை-35

18. சசிவல்லி வி.சி. — **பண்டைத் தமிழர் தொழில்கள்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை-113.
முதற்பதிப்பு-1989.

19. சிவகுருநாதன் — **வாகைத்திணை,**
மணிவாசகர் பதிப்பகம்,
55, லிங்கி தெரு,
சென்னை-600 001,
முதற்பதிப்பு-1992.

20. சுந்தரபாலு சா. **தொழிற்கருவிகள் ஒரு மொழியியல் நோக்கு,**
சீதை பதிப்பகம்,
4/7, ராஜா அனுமந்தா தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை-600 005,
முதற்பதிப்பு-2015.

21. சுந்தரம் வீ.ப.கா. **தமிழிசையியல்,**
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு-1994.

22. சுந்தரம் வீ.ப.கா **தொல்காப்பியத்தில் இசைக் குறிப்புகள்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.ஐ.டி. வளாகம்,
தரமணி (அஞ்சல்),
சென்னை-600 113,
பதிப்பு-1994.

23. சுப்பிரமணியன் ச.வே. **காப்பிய புனைதிறன்,**
தமிழ்ப் பதிப்பகம்,
சென்னை-20,
1979. முதற்பதிப்பு-1952.

24. சுப்பிரமணியன் ச.வே. **கம்பன் கற்பனை**
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்-608 001,
முதற்பதிப்பு-2004.

25. சுப்பிரமணியன் ச.வே. **தமிழ் நிகண்டுகள்**
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்-608 001,
முதற்பதிப்பு-2008.

26. சுப்பிரமணியன் ச.வே. **தொல்காப்பியம்,**
மாணிக்கவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரி முனை,
சென்னை-600108,
11-ஆம் பதிப்பு-2010.

27. சுப்பிரமணியன் ச.வே. (உ.ஆ.) **சங்க இலக்கியம்,**
பத்துப்பாட்டு,
மாணிக்கவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரி முனை,
சென்னை-600108,
இரண்டாம் பதிப்பு-2010.

28. சுப்ரமண்யன் ந. **சங்ககால வாழ்வியல்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட்,
41-பி. சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை-600 098,
மூன்றாம் பதிப்பு-2017.

29. தமிழண்ணல் — **புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு,**
மீனாட்சி புத்தக நிலையம்,
மீனாட்சி-1,
பத்தொன்பதாம் பதிப்பு-2003.

30. தனபாண்டியன் து.ஆ. — **புல்லாங்குழல் ஓர் ஆய்வு**
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு-1991.

31. தெய்வசிகாமணிக்கவுண்டர் வே.ரா. — **பஞ்ச மரபு மூலமும் உரையும்,**
88, வேலம்பாளையம்,
எழுமாத்தூர் (வழி),
ஈரோடு வட்டம்,
இரண்டாம் பதிப்பு-1975.

32. தேவநேயன் ஞா. — **பழந்தமிழாட்சி,**
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
டி.டி.கே. சாலை,
திருநெல்வேலி.

33. தேவநேயன் ஞா. — **சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்,**
ஐந்திணைப் பதிப்பகம்,
279, பாரதி சாலை,
திருவல்லிக்கேணி,
சென்னை-600 005,
முதற்பதிப்பு-1999.

34. நீலகண்டன் வெ. **வாழ்விழந்து வரும் கிராமிய இசைக்கருவிகள்** பிளாக்ஹோல் மீடியா, பப்ளிகேஷன் லிமிடெட், எண்.7/1, 3-வது அவென்யு, அசோக் நகர், சென்னை-600 083, முதற்பதிப்பு-2011.

35. பக்கரிசாமி பாரதி கே.ஏ **இந்திய இசைக் கருவூலம்,** குசேலர் பதிப்பகம், சென்னை, பதிப்பு-2002.

38. பரமசிவன் தொ. **அறியப்படாத தமிழகம்,** காலச்சுவடு பப்ளிகேஷன்ஸ்(பி)லிட், 669 கே.பி.சாலை, நாகர்கோவில்-629001, 13-வது பதிப்பு-2017.

37. பரிமணம் அ.மா. பாலசுப்பிரமணியன் கு.வெ. (உ.ஆ.) **குறுந்தொகை,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லி, 41-பி-சிட்கொ இண்டஸ்டிரியல், எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-600 098, ஐந்தாம் பதிப்பு-2014.

38. பரிமணம் அ.மா.
பாலசுப்பிரமணியன் கு.வெ.
(உ.ஆ.)
**நற்றிணை,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லி,
41-பி-சிட்கொ இண்டஸ்டிரியல்,
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை-600 098,
ஐந்தாம் பதிப்பு-2014.

39. பரிமணம் அ.மா.
பாலசுப்பிரமணியன் கு.வெ.
(உ.ஆ.)
**புறநானூறு,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லி,
41-பி-சிட்கொ இண்டஸ்டிரியல்,
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை-600 098,
ஐந்தாம் பதிப்பு-2014.

40. பரிமேலழகர்
(உ.ஆ.)
**திருக்குறள்,**
ராம் பிரசுரம்,
18, (171), பவளக்காரத் தெரு,
மண்ணடி,
சென்னை-600 001,
இரண்டாம் பதிப்பு-2008.

41. பார்த்திபராஜா கி.
**தமிழ்க் கலை மணிகள்,**
பாரதி புத்தகாலயம்,
7, இளங்கோ சாலை,
தேனாம்பேட்டை,
சென்னை-600 018,
முதற்பதிப்பு-2018.

42. பிரேமா சே. **இசை மருத்துவம்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் முதன்மைச் சாலை,
மையத் தொழில்நுட்பப்
பயிலக வளாகம்,
தரமணி,
சென்னை-600 113,
முதற்பதிப்பு-2009.

43. பொற்கோ **பி.பி.சி. தமிழோசையில்,**
நண்பர்கள் அச்சகம்,
சென்னை,
முதற்பதிப்பு-1973.

44. மாத்தளை சோமு **வியக்க வைக்கும் தமிழர் அறிவியல்,**
உதகம்,
உலகத் தமிழாய்வுக் கழகம்,
பழைய எண்:பி-15,
புதிய எண்:பி-5,
ஐந்தாவது முதன்மைச் சாலை,
இராமலிங்க நகர், உறையூர்,
திருச்சி-620 003.
பதிப்பு-2005.

45. முத்தாலக்குறிச்சி காமராசு **ஆதிச்சநல்லூர் ஆய்வுகள்,**
காவ்யா,
16, இரண்டாம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்,
சென்னை-600 024.
முதற் பதிப்பு-2010.

46. ராஜன்பாபு பொன். **அணி இலக்கணம் ஓர் அறிமுகம்,**
பாவை பப்ளிகேஷன்ஸ்,
142, ஜானி ஜான் சாலை,
இராயப்பேட்டை,
சென்னை-600 014,
முதற்பதிப்பு-2002.

47. லோச்சன் பொ.சா. **பஞ்ச மரபில் இசை மரபு,**
தமிழ் பல்கலைக் கழக வெளியீடு
கே.பி.டி. இண்டஸ்ட்ரீஸ்,
தமிழ் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு-1989.

48. வானமாமலை நா. **தமிழர் வரலாறும் பண்பாடும்,**
நீயூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை-600 098.
முதற் பதிப்பு-1966.

49. வித்தியானந்தன் சு. **தமிழர் சால்பு,**
பாரி புத்தகப் பண்ணை,
சென்னை,
இரண்டாம் பதிப்பு-1971.

50. விபுலாந்த அடிகளார் — **யாழ் நூல்,**
யாதுமாகி பதிப்பகம்,
37/17, ராமசாமி கோவில்
சன்னதி தெரு,
பாளையங்கோட்டை,
திருநெல்வேலி,
மூன்றாம் பதிப்பு-2003.

51. வேங்கடசாமி மயிலை. சீனி. — **நுண்கலைகள்,**
பாவை பப்ளிகேஷன்ஸ்,
142, ஜானி, ஜான் கான் சாலை,
இராயப்பேட்டை, சென்னை-600 014.
முதற் பதிப்பு-2012.

52. ஜகந்நாதன்.கி.வா — **தமிழ்க் காப்பியங்கள் (ஆராய்ச்சி)**
அமுத நிலையம் லிமிடெட்,
சென்னை-18,
முதல் பதிப்பு-டிசம்பர் 1955.

53. … — **சிற்பச்செந்நூல்**
தொழில் நுட்பக் கல்வி இயக்கம்,
அடையாறு,
சென்னை-600 020,
முதற்பதிப்பு-1978.

**அகராதிகள்**

54. ஆசிரியர் குழு
**நர்மதா தமிழ் அகராதி**
நர்மதா பதிப்பகம்,
நல்ல நூல் வெளியீட்டாளர்கள்
10, நானா தெரு,
தி.நகர்,
சென்னை-600 017,
பதிப்பு-2011.

55. சிங்காரவேலு முதலியார் ஆ.
**அபிதான சிந்தாமணி**
சீதை பதிப்பகம்,
6/16 தோப்பு வெங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை-600 005,
முதற்பதிப்பு-2004.

56. சுப்பிரமணியன் ச.வே.
**மெய்யப்பன் தமிழ் அகராதி,**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை-800 108,
மூன்றாம் பதிப்பு-2011.

57. செல்வராசு. வீ.ஜே
**தமிழ்ச் சொற்றொடர் அகராதி,**
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்-608 001,
முதற்பதிப்பு-2003.

58. மம்மது நா. **தமிழிசைப் பேரகராதி,**
இன்னிசை அறக்கட்டளை,
இன்னிசை இல்லம்,
7-12/28, பனையடியான்
கோவில் தெரு,
மகாத்மா காந்தி நகர்,
மதுரை-625 014,
முதற்பதிப்பு-2010.

59. … **பெருஞ்சொல்லகராதி,**
**(தொகுதி-3),**
தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு,
K.P.T. Industries,
அண்ணாமலை நகர்,
தஞ்சாவூர்-608 002,
முதற்பதிப்பு-2002.

60. … **பேரகராதி,**
லிப்கோ ஸ்தாபகர் சர்மாஜி,
(நூற்றாண்டு வெளியீடு),
லிப்கோ பப்ளிஷர்ஸ் (பி)லிட்.
புதிய எண்:36,
வடக்கு சாலை,
மேற்கு சி.ஐ.டி.நகர்,
சென்னை-600 035
முதற்பதிப்பு-2008.

61. …

**க்ரியா தற்காலத் தமிழ் அகராதி,**
புதிய எண்:2,
பழைய எண்:25,
17, கிழக்குதெரு,
காமராஜர் நகர்,
திருவண்மியூர்,
சென்னை-600 041,
முதற்பதிப்பு-1992.

62. …

**தமிழ்ப் பேரகராதி,**
தொகுதி-1, பகுதி-2,
சென்னைப் பல்கலைக்கழக
வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு 1936.

**கலைக்களஞ்சியம்**

63. சுந்தரம் வீ.ப.கா.

**தமிழிசைக் கலைக்களஞ்சியம்,**
**(தொகுதி-1,2,3,4),**
யுனைடெட் பைண்ட்கிராபிக்ஸ்,
101-D, இராயப்பேட்டை நெடுங்சாலை,
சென்னை-600 004,
முதற்பதிப்பு-1997.

64. இராசேந்திரன்

**தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம்,**
தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு,
மாணிக்கம் பிரிண்டர்ஸ்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு-2001.

65. ….

**அறிவியல் களஞ்சியம் (தொகுதி-2)**
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு-1987.

66. …

**கலைக் களஞ்சியம் (தொகுதி-3,4,5,9)**
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு
கலைக்களஞ்சிய அலுவலகம்,
பல்கலைக்கழக் கட்டடம்,
சென்னை-5,
முதற்பதிப்பு-1963.

67. …

**குழந்தைகள் கலைக்களஞ்சியம், (தொகுதி-3)**
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு,
ஓரியன்ட் லாங்மன்ஸ் லிமிட்டெட்,
36,ஏ, மவுன்ட் ரோடு,
சென்னை-2,
முதல்பதிப்பு-1971.

68. …

**சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், (தொகுதி-1),**
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு-1988.

69. …

**வாழ்வியற் களஞ்சியம்,**
**(தொகுதி-2,4,5),**
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
மறுபதிப்பு-1991.

**ஆய்வேடு**

70. ஆக்னஸ
மேரி இ.

**பரிணாமவியல் நோக்கில்**
**சங்ககாலப் போரியல்,**
இலக்கியவியல் துறை,
புதுச்சேரி அரசு நிறுவனம்
புதுச்சேரி-605 008,
பதிப்பு-2014.

71. …

**தமிழ்க் காப்பியங்களில்**
**அவல மகளிர்,**
கேரளப் பல்கலைக்கழகம்,
திருவனந்தபுரம்.

**ஆங்கில நூல்**

72. ….

Tamil lexiocon,
(six volum),
University of Madras,
1936.